கிர்வாண ஹட்கம் முதலியவை

"ஸ்ரீ சங்கர க்ருபா அநுபந்தம்"

21-5

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு.

॥ श्रीः ॥

# श्रीजगद्गुरुग्रन्थमाला-१२







# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா

## 12

அகில பாரத சங்கர சேவா ஸமிதி வெளியீடு

21-5

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला–१२



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா
# 12

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்

1963



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை.

அகிலபாரத சங்கரஸேவா ஸமிதியால் வெளியிடப்பட்டுவரும் "ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலாவில்" இது 12-வது மலர். இதில் ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் அவர்களால் இயற்றப்பட்ட ஆறு பிரகரணங்கள் வழக்கம் போல் பதவுரை – பொழிப்புரை – விசேஷக் கருத்துரை இவற்றுடன் வெளிவந்துள்ளன.

1. ஸ்வாத்மப்ரகாசிகா: ஆத்ம ஸ்வரூபத்தை நன்கு தெரிந்துகொண்ட ஓர் சிஷ்யன், முன்போலவே மறுபடியும் பிரபஞ்சம் தனக்கு உண்மைபோலவே தோன்றுவதைக் கண்டு, குருவினிடம் கேட்கிறான். 4-வது சுலோகம் முதல் 19-வது சுலோகம்வரை "எல்லாம் ஸச்சிதானந்த வஸ்துவே, பிரபஞ்சம் வெறும் தோற்றம்தான்" என்பதை பல திருஷ்டாந்தங்களால் விளக்கி குரு உபதேசிக்கிறார். குருவின் அருளால் ஸந்தேஹம் நீங்கப்பெற்ற சிஷ்யன் 20-வது சுலோகம் முதல் 67-வது சுலோகம்வரை தன் அனுபவத்தை வெளியிடுகிறான். தேஹாதிகளால் நடத்தப் பெறும் பிரபஞ்ச வியவஹாரம் ஒன்றிலாவது கொஞ்சமும் ஆத்மாவுக்கு ஸம்பந்தம் கிடையாது என்பதை நன்கு உணர்ந்த ஞானி ராஜ்யபரிபாலனம்வரை எந்தக் காரியத்தைச் செய்தபோதிலும் அவனுடைய ஆத்மானுபவத்திற்குச் சிறிதும் குறைவு ஏற்படாது என்பதை நன்கு எடுத்துக்காட்டுகிறான். இதுபோல் தத்வ பரிசீலனம் செய்யும் மற்றவர்களுக்கும் இதே அனுபவம் ஏற்படும் என்பதைக் கடைசி சுலோகம் கூறுகிறது.

2. அநாத்ம ஸ்ரீ விகர்ஹணம்: முதல் பிரகரணத்தில் கூறப்பட்ட ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படாவிட்டால் ப்ரஹ்மபதவிவரை எந்த லாபத்தைப் பெற்றபோதிலும்

அவன் கிருதார்த்தனுகமாட்டான் என்பதைக் காட்டுவதற்காக உலகில் அவரவர்கள் தம் தம் புத்திக்கு எட்டியவாறு உயர்ந்த லாபமாகக் கருதும் விஷயங்களை ஒவ்வொன்ருகக் கூறி அவற்ருல் ப்ரயோஜனமில்லை என்பதைக் கூறுகிருர். அநாத்மப் பொருள்களில் ஏதாவது ஒன்றில் சிறிதளவாவது ஆசை இருக்கும்வரை ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு அவன் அதிகாரியல்ல. ஆசையை முற்றும் துறக்கவேண்டும் என்பது இதில் நன்கு காட்டப்படுகிறது.

3. நிர்வாணஷட்கம்: 'நான்' (அஹம்) யார் என்பது இதில் கூறப்படுகிறது. உலகில் நாம் எண்ணிக் கொண்டிருக்கும் பொருள்கள் எல்லாம் நான் அல்ல, ஸச்சிதானந்தமே நான் என்று கூறுகிருர். சைதன்யமே நான்; ஆகையால் என்னுடையது என்று சொல்லிக் கொள்ளும்படியாக ஒன்றும் இல்லை என்றும் கூறுகிருர். இது அல்ல இது அல்ல என்று பிரபஞ்ச நிஷேதரூபமாக ஆத்மாவைக் கூறுவதால் இதற்கு நிர்வாணஷட்கம் என்ற பெயர் ஏற்பட்டுள்ளது.

4. ஸ்வரூபானுஸந்தானுஷ்டகம்: முன் பிரகரணத்தில் நான் என்னும் ஆத்மாவை சரீராதிகளிலிருந்து பிரித்துக் காட்டிவிட்டு அந்த ஆத்மா ப்ரஹ்மமே என்பதை இதில் கூறுகிருர்.

5. நிர்வாணமஞ்ஜரீ: உலக வியவஹாரங்களில் ஈடுபடும்பொழுது பழைய வாஸனையால் மறுபடியும் சரீராதிகளில் நான் என்ற எண்ணம் வராமலிருப்பதற்காக ஸ்வரூபத்தை அனுஸந்தானம் செய்ய 'நிர்வாணஷட்கம்' போலவே, ஆனுல் சிறிது விஸ்தாரமாக 12 சுலோகங்களால் ஆத்மாவைத் தவிர வேருென்றும் நான் அல்ல என்பதை விளக்கிக் கூறுகிருர்.

6. ஜீவன்முக்த ஆனந்தலஹரீ: ஜீவன்முக்தர்கள் வ்யுத்தான தசையில் ப்ரஹ்மானுபவ நிலையிலிருந்து வெளி

வந்து உலகத்தாரோடு பழகி நம்மைப்போலவே சரீராதிகளால் எந்தவிதமான காரியத்தைச் செய்துகொண்டிருந்த போதிலும் அவர்களுடைய ஆத்மாநந்தானுபவ நிலைக்குச் சிறிதும் பாதகம் ஏற்படாது என்பதைக் கூறி அவரே த்யாகி, அவரே யோகி என்று உபஸம்ஹாரம் செய்கிறார் ஸ்ரீ பகவத்பாதாள்.

இம் மலரிலுள்ள எல்லா நூல்களுக்கும் தமிழில் பதவுரை, பொழிப்புரைகளுடன் விசேஷ ஸ்வாரஸ்யங்களுடன் கூடிய கருத்துரையும் எழுதித்தந்து உதவிய ப்ரஹ்மஸ்ரீ R. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்களுக்கு நம் ஸமிதியின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இம்மலரும் ஸ்ரீ ஸத்குரு சரணாரவிந்தங்களில் சிரத்தையுடனும் பக்தியுடனும் ஸமர்ப்பணம் செய்யப்படுகிறது.

K. V. சுப்பரத்னம் அய்யர்,
பொதுக்காரியதர்சி,
அகிலபாரத சங்கரஸேவா ஸமிதி.


விஷயாநுக்ரமணிகை

॥ श्रीः ॥

# ॥ स्वात्मप्रकाशिका ॥

## ஸ்வாத்ம ப்ரகாசிகா

*[ப்ரஹ்மம்தான் ஸத்யம், ப்ரஹ்மத்தை அறியாத தினலேயே அதில் பிரபஞ்சம் தோன்றுகிறது, ஜீவனுகத் தோன்றுகிறவனுடைய வாஸ்தவமான ஸ்வரூபம் பிரஹ்மமே யாகும், ஆகையால் அவனிடம் தோன்றும் ஸம்ஸாரமும் கல்பிதமேயாகும், என்று வேத வாக்கியங்களாலும், குருவின் உபதேசத்தினுலும், யுக்தியினுலும் எவ்வளவு நிச்சயமாகத் தெரிந்துவிட்டபோதிலும் இவ்விஷயம் நன்கு அனுபவத்திற்கு வரவில்லையேயென்று கவலைப்படும் சிஷ்யனுக்கு அனுபவத் திற்கு வரும்படி ஆத்மஸ்வரூபத்தை நன்கு விளக்கிக் காட்டு வதற்காக 68 சுலோகங்கள் கொண்ட இச்சிறு பிரகரணம் ஸ்ரீமத் ஆசார்யாரால் அனுக்ரஹிக்கப்பட்டிருக்கிறது. இதில் கண்டபடி அனுஸந்தானம் செய்கிறவர்களுக்கு ஆத்ம ஸாக்ஷாத்காரம் அவசியம் ஏற்படுமென்று கடைசியில் உறுதி யும் சொல்கிருர்கள்.]*

**जगत्कारणमज्ञानमेकमेव चिदन्वितम् ।**
**एक एव मनःसाक्षी जानात्येवं जगत्त्रयम् ॥ १ ॥**

ஜகத்காரணமக்ஞானமேகமேவ சிதன்விதம் ।
ஏக ஏவ மனஸ்ஸாக்ஷீ ஜாநாத்யேவம் ஜகத்த்ரயம் ॥

**जगत्कारणं**-ஜகத்திற்குக் காரணமாக இருப்பது, **चिदन्वितं**-சைதன்யத்தோடு ஸம்பந்தப்பட்ட, **अज्ञानं**-அக்ஞானம், **एकं एव**-ஒன்றுதான். **जगत्त्रयं**-மூவுலகமும், **एवं**-இவ்விதம்தான் என்று, **मनःसाक्षी**-மனதிற்கும் ஸாக்ஷியா யிருக்கிற, **एक एव**-ஒருவரே, **जानाति**-அறிகிருர்.

ஜகத்திற்குக் காரணமாயிருப்பது சைதன்யத்தோடு ஸம்பந்தப்பட்ட அக்ஞானம் ஒன்றுதான். மூவுலகமும் இவ்விதம்தான் என்று மனதிற்கும் ஸாக்ஷியாயிருக்கிற ஒருவரே அறிகிருர். (1)

विवेकयुक्तबुद्ध्याऽहं जानाम्यात्मानमद्वयम् ।
तथाऽपि बन्धमोक्षादिव्यवहारः प्रतीयते ॥ २ ॥

விவேக யுக்த புத்த்யாऽஹம் ஜாநாம்யாத்மாநமத்வயம் ।
ததாऽபி பந்த மோக்ஷாதி வ்யவஹார: ப்ரதீயதே ॥

विवेकयुक्तबुद्ध्या-விவேகத்தோடு கூடின புத்தியினால், अहं-நான், अद्वयं-இரண்டற்றதான, आत्मानं-ஆத்மாவை, जानामि-அறிகிறேன். तथाऽपि-அப்படியிருந்தும், बन्धमोक्षादिव्यवहारः-பந்தம், மோக்ஷம், முதலான வியவஹாரம், प्रतीयते-தோன்றிக்கொண்டேயிருக்கிறது.

'ஆத்மா ஒன்றுதான், அதைக் காட்டிலும் வேறான இரண்டாவது வஸ்துவே கிடையாது' என்று விவேகத்தோடு கூடின புத்தியினால் நான் அறிகிறேன். அப்படியிருந்தும் பந்தம், மோக்ஷம் முதலான வியவஹாரம் தோன்றிக்கொண்டே இருக்கிறது. (2)

विवर्तोऽपि प्रपञ्चो मे सत्यवद्भाति सर्वदा ।
इति संशयपाशेन बद्धोऽहं छिन्द्धि संशयम् ॥ ३ ॥

விவர்த்தோऽபி ப்ரபஞ்சோ மே ஸத்யவத் பாதி ஸர்வதா ।
இதி ஸம்சய பாசேன பத்தோऽஹம் சிந்தி ஸம்சயம் ॥

प्रपञ्चः-பிரபஞ்சமானது, विवर्तोऽपि-வெறும் தோற்றமாயிருந்தபோதிலும், मे-எனக்கு, सर्वदा-எப்பொழுதும், सत्यवत्-உண்மைபோலவே, भाति-பிரகாசிக்கிறது. इति-என்கிற, संशयपाशेन-ஸம்சயமாகிற கயிற்றால், अहं-நான், बद्धः-கட்டுப்பட்டவனாக (இருக்கிறேன்.) संशयं-அந்த ஸம்சயத்தை, छिन्द्धि-அறுத்துவிடும்.

பிரபஞ்சமானது வெறும் தோற்றமாக இருந்தபோதிலும் எனக்கு எப்பொழுதும் உண்மைப்பொருளாகவே விளங்குகிறது. இவ்விஷயத்தில் ஸம்சயமாகிற கயிற்றால் நான் கட்டுப்பட்டவனாக இருக்கிறேன். அந்த ஸம்சயத்தை அறுத்துவிடும்.

[சாஸ்திரங்களில் பிரஹ்மமாகிற ஸத்ய வஸ்துவில் அக்ஞானத்தினுல் கல்பிக்கப்பட்டு இப்பிரபஞ்சம் தோன்று கிறதென்று சொல்லப்பட்டிருக்கிறது. அது யுக்திக்கும் பொருத்தமாகவே இருக்கிறது. ஆனாலும் அனுபவத்திற்கு வரவில்லையே? என்று தன்னுடைய நிலையை முதல் மூன்று சுலோகங்களால் சிஷ்யன் குருவினிடம் தெரிவிக்கிருன்.] (3)

एवं शिष्यवचः श्रुत्वा गुरुराहोत्तरं स्फुटम् ।

ஏவம் ஶிஷ்ய வச: ச்ருத்வா குருராஹோத்தரம் ஸ்புடம் ।

**एवं**-இவ்விதமாக, **शिष्यवचः**-சிஷ்யனுடைய வார்த்தையை, **श्रुत्वा**-கேட்டு, **गुरुः** குருவானவர், **स्फुटम्**-தெளிவாக, **उत्तरं**-பதிலை, **आह**-சொல்கிருர்.

இவ்விதமாக சிஷ்யனுடைய வார்த்தையைக் கேட்டு குருவானவர் தெளிவாக பதில் கூறுகிருர்.

नाज्ञानं न च बुद्धिश्च न जगन्न च साक्षिता ॥ ४ ॥
बन्धमोक्षादयः सर्वे कृताः सत्येऽद्वये त्वयि ।

நாக்ஞானம் ந ச புத்திச்ச ந ஜகத் ந ச ஸாக்ஷிதா ॥
பந்தமோக்ஷாதய: ஸர்வே க்ருதா: ஸத்யேऽத்வயே த்வயி ।

**अज्ञानं**-அக்ஞானம் என்பதும், **न**-கிடையாது, **बुद्धिः च**-புத்தியும், **न**-கிடையாது, **जगत् च**-ஜகத்தும், **न**-கிடையாது, **साक्षिता च**-ஸாக்ஷியாயிருக்கும் தன்மையும், **न**-கிடையாது. **बन्धमोक्षादयः**-பந்தம், மோக்ஷம் முதலான, **सर्वे**-எல்லா வியவஹாரங்களும், **सत्ये**-ஸத்யமான, **अद्वये**-இரண்டற்ற, **त्वयि**-உன்னிடத்தில், **कृताः**-கல்பிக்கப்பட்டவைகளே யாகும்.

அக்ஞானம் என்பதும் கிடையாது, புத்தியும் கிடையாது, ஜகத்தும் கிடையாது, ஸாக்ஷியாயிருக்கும் தன்மையும் கிடையாது. பந்தம், மோக்ஷம் முதலான எல்லா வியவஹாரங்களும் ஸத்யமான இரண்டற்ற உன்னிடத்தில் கல்பிக்கப்பட்டவைகளேயாகும்.

[சிஷ்யன் தன்னுடைய ஸந்தேஹத்தைச் சொல்லும் போது அக்ஞானம், புத்தி, ஜகத், ஸாக்ஷி, பந்தம், மோக்ஷம் முதலான வார்த்தைகளை உபயோகித்திருக்கிருன். அந்தந்த வார்த்தைகளால் குறிக்கப்படும் பொருள்கள் வாஸ்தவமாக இருப்பதாக சிஷ்யனுக்கு எண்ணமிருக்குமே யானுல் அதை முதலில் நிவர்த்தி செய்யவேண்டுமென்று கருதி குரு இவ்விதம் சொல்கிருர். ஆத்மா என்பது ஒன்று தான் வாஸ்தவமாயுள்ள வஸ்து, அதைத்தவிற வேறு இரண்டாவது வஸ்துவே கிடையாது, அந்த ஆத்மா தான் நீ, இதை அஸ்திவாரமாக வைத்துக்கொண்டுதான் எல்லாத் தோற்றங்களும் ஏற்படுகின்றன, என்ற வேதாந்த ஸித்தாந் தத்தை முதலில் எடுத்துச் சொல்லிவிட்டு பின்னுல் இவ் விஷயத்தை திருஷ்டாந்தங்களிலுைம் யுக்திகளினுலும் மனஸில் நன்கு பதியும்படி உபதேசிக்கிருர்.]

भातीत्युक्ते जगत् सर्वं सद्रूपं ब्रह्म तद्भवेत् ॥ ५ ॥

सर्पादौ रज्जुसत्तेव ब्रह्मसत्तैव केवलम् ।
प्रपञ्चाधाररूपेण वर्तते तज्जगन्न हि ॥ ६ ॥

பாதீத்யுக்தே ஜகத் ஸர்வம் ஸத்ரூபம் ப்ரஹ்ம தத் பவேத் ॥
ஸர்பாதௌ ரஜ்ஜு ஸத்தேவ ப்ரஹ்ம ஸத்தைவ கேவலம் ।
ப்ரபஞ்சாதார ரூபேண வர்ததே தத் ஜகத் நஹி ॥

सर्वं-எல்லா, जगत्-ஜகத்தும், भाति-பிரகாசிக்கிறது, इति-என்று, उक्ते-சொன்னுல், तत्-அது, सद्रूपं-இருக்கும் ஸ்வரூபத்தையுடைய, ब्रह्म-பிரஹ்மமாகத்தான், भवेत्-இருக்கவேண்டும். सर्पादौ-பாம்பு முதலானவைகளில், (தோன்றும் இருப்பானது), रज्जुसत्ता-கயிற்றின் இருப்பு தான், इव-அதைப்போல, ब्रह्मसत्ता एव-பிரஹ்மத்திலுள்ள இருப்புதான், केवलं-தனித்து (மாறுதல் அடையாமல்), प्रपञ्चाधाररूपेण-பிரபஞ்சத்திற்கு ஆதாரமாயிருக்கும் தன்மை யோடு, वर्तते-இருந்துவருகிறது. तत्-ஆகையால், जगत्-ஜகத் என்பது, न हि-(தனித்து இருப்பு உடையது) அல்ல.

எல்லா ஜகத்தும் பிரகாசிக்கிறதென்று சொன்னால், அது இருக்கும் ஸ்வரூபத்தையுடைய பிரஹ்மமாகத்தான் இருக்கவேண்டும். பாம்பு முதலானவைகளில் (தோன்றும் இருப்பானது) கயிற்றின் இருப்புதான், அதைப்போல பிரஹ்மத்திலுள்ள இருப்புதான் தனித்து (மாறுதல் அடையாமல்) பிரபஞ்சத்திற்கு ஆதாரமாயிருக்கும் தன்மையோடு இருந்துவருகிறது. ஆகையால் ஜகத் என்பது (தனித்து இருப்பு உடையது) அல்ல.

[ஒரு பதார்த்தம் பிரகாசிக்கிறது என்றால், அதை இருக்கும் பொருளாகத்தான் சொல்லவேண்டும். இருக்கும் பொருள்தான் உலகில் பிரகாசிக்க முடியும். ஜகத் பிரகாசிக்கிறபடியால் அதையும் 'இருக்கிறது' என்றே சொல்ல வேண்டும். ஆனால் 'இருக்கிறது' என்ற ஸ்வபாவம் பிரஹ்மத்தையே சேர்ந்தது. ஆகையால் 'இருக்கிறது' என்று தோன்றும் ஜகத்தும் பிரஹ்மமேயாகும். இருக்கிற கயற்றில்தான் பாம்பு என்றோ, மாலை என்றோ, தண்டம் (தடி) என்றோ, பலவிதத் தோற்றங்கள் ஏற்படும். அத் தோற்றங்கள் தோன்றிக் கொண்டிருக்கும்போது "பாம்பு இருக்கிறது, மாலை இருக்கிறது, தண்டம் (தடி) இருக்கிறது" முதலான விதமாகவே வியவஹாரமும் ஏற்படுகிறது. வாஸ்தவத்தில் பாம்பு முதலானவைகளில் தோன்றும் 'இருக்கிறது' என்ற அம்சம் கயிற்றையே சேர்ந்தது. கயிறு ஒருவித மாறுதலையும் அடையாமல் ஒரேவிதமாய் இருந்துகொண்டு பலவித கல்பனைகளுக்கு ஆதாரமாக இருக்கிறது. இந்த 'இருக்கிறது' என்ற அம்சம் கயிற்றினுடையதானதினால் அதைப் பாம்பு முதலானவைகளிலிருந்து பிரித்துவிட்டால் அவை யாவும் இல்லையென்றே ஏற்படும். அப்படியே ஸத்தாக இருக்கும் பிரஹ்மம் அஸத்தாயுள்ள பிரபஞ்சத்திற்கு ஆதாரமாக இருப்பதினால் அந்த பிரபஞ்சமும் ஸத்தாகத்தோன்றுகிறது. வாஸ்தவத்தில் அதற்கு ஸத்தை கிடையாது] (5-6)

यथेक्षुमभिसंव्याप्य शर्करा वर्तते तथा ।
आश्चर्यब्रह्मरूपेण त्वं व्याप्तोऽसि जगत्त्रयम् ॥ ७ ॥

யதேக்ஷுமபிஸம்வ்யாப்ய ஶர்கரா வர்ததே ததா ।
ஆச்சர்ய ப்ரஹ்மரூபேண த்வம் வ்யாப்தோஸி ஜகத்த்ரயம் ॥

**यथा**-எவ்விதம், **शर्करा**-சர்க்கரையானது, **इक्षुं**-கரும்பை, **अभिसंव्याप्य**-எல்லாவிடத்திலும் நன்கு வியாபித்து, **वर्तते**-இருக்கிறதோ, **तथा**-அவ்விதமே, **आश्चर्यब्रह्मरूपेण**-ஆச்சர்யமான பிரஹ்மம் என்ற ரூபத்துடன், **त्वं**-நீ, **जगत्त्रयम्**-மூவுலகத்தையும், **व्याप्तः**-வியாபித்தவனாக, **असि**-இருக்கிறாய்.

எவ்விதம் சர்க்கரையானது கரும்பை எல்லாவிடத்திலும் நன்கு வியாபித்துக்கொண்டு இருக்கிறதோ, அவ்விதமே ஆச்சர்யமான பிரஹ்மம் என்ற ரூபத்துடன் நீ மூவுலகத்தையும் வியாபித்தவனாக இருக்கிறாய்.

[கரும்பை எந்த இடத்தில் ருசி பார்த்தாலும் தித்திப்பாக இருப்பதற்குக் காரணம் தித்திப்பையே ஸ்வபாவமாக உடைய சர்க்கரை அக்கரும்பு முழுவதும் வியாபித்திருப்பது தான். அவ்விதமாகவே ஸத்பதார்த்தமான ஆத்மா பிரஹ்மமாக இருந்துகொண்டு மூவுலகத்தையும் வியாபித்திருக்கிறபடியால் மூவுலகமும் ஸத்தாகத் தோன்றுகிறது] (7)

**मरुभूमौ जलं सर्वं मरुभूमात्रमेव तत् ।**
**जगत्त्रयमिदं सर्वं चिन्मात्रं सुविचारतः ॥ ८ ॥**

மருபூமௌ ஜலம் ஸர்வம் மருபூமாத்ரமேவ தத் ।
ஜகத் த்ரயமிதம் ஸர்வம் சின்மாத்ரம் ஸுவிசாரத: ॥

**मरुभूमौ**-கானல் தரையில் (தோன்றும்), **तत्**-அந்த, **जलं**-ஜலம், **सर्वं**-எல்லாம், **मरुभूमात्रमेव**-கானல் தரையேதான். (அவ்விதமே) **सुविचारतः**-நன்கு விசாரம் செய்து பார்த்தால், **इदं**-இந்த, **जगत्त्रयं**-மூவுலகம், **सर्वं**-எல்லாம், **चिन्मात्रं**-சைதன்யமேதான்.

கானல் தரையில் தோன்றும் அந்த ஜலமெல்லாம் கானல் தரையேதான். அவ்விதமே, நன்கு விசாரம் செய்து பார்த்தால் இந்த மூவுலகம் எல்லாம் சைதன்யமேதான்.

[கரும்பை சர்க்கரை வியாபித்திருக்கிறது என்று சொல்லுகையில் கரும்பு என்பது ஒரு பதார்த்தம், சர்க்கரை என்பது வேறு பதார்த்தம் என்றும், சர்க்கரையைக் கரும்பிலிருந்து பிழிந்து எடுத்துவிட்டால் கரும்புச் சக்கை தனியாக இருக்கலாமே என்றும் எண்ணலாம். அப்படியே ஜகத்து வேறு பிரஹ்மம் வேறு, பிரஹ்மத்தை ஜகத்திலிருந்து பிரித்துவிட்டாலும் ஜகத்து தனியாக இருக்கலாம் என்று நினைக்க இடம் கொடுக்கும். அவ்விதம் எண்ணக் கூடாதென்பதற்காகவே கானல் ஜல திருஷ்டாந்தம் சொல்லப்படுகிறது கானல் ஜலத்திற்கு கானல் தரையைத் தவிர்த்து இருப்பே கிடையாது அவ்விதமே பிரஹ்மத்தைத் தவிர்த்து ஜகத்திற்கு இருப்பு கிடையாது.] (8)

**ब्रह्मादिस्तम्बपर्यन्ताः प्राणिनस्त्वयि कल्पिताः ।**
**बुद्बुदादितरङ्गान्ता विकाराः सागरे यथा ॥ ९ ॥**

*ப்ரஹ்மாதி ஸ்தம்ப பர்யந்தா: ப்ராணினஸ்த்வயி கல்பிதா: ।*
*புத்புதாதி தரங்காந்தா விகாரா: ஸாகரே யதா ॥*

**ब्रह्मादिस्तम्बपर्यन्ताः**-பிரஹ்மா முதல் சிறு புல் வரையுள்ள **प्राणिनः**-பிராணிகள், **त्वयि**-உன்னிடத்தில், **कल्पिताः**-கல்பிக்கப்பட்டிருப்பவர்கள். **सागरे**-ஸமுத்திரத்தில், **बुद्बुदादि-तरङ्गान्ताः**-நீர்க்குமிழி முதல் அலை வரையில் உள்ள, **विकाराः**-மாறுதல்கள், **यथा**-எப்படியோ. (அப்படி).

ஸமுத்திரத்தில் நீர்க்குமிழி முதல் அலை வரையிலுள்ள மாறுதல்கள் கல்பிக்கப்பட்டிருப்பதுபோல் பிரஹ்மா முதல் சிறு புல் வரையுள்ள பிராணிகள் உன்னிடத்தில் கல்பிக்கப்பட்டிருப்பவர்கள்.

[கானல்ஜலத்தின் ஸமீபம் போய்ப் பார்த்தால் அந்த ஜலமே மறைந்து தரைமாத்திரம் தெரிகிறமாதிரி, பிரஹ்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்ட பிறகு ஜகத் பூராவும் மறைந்து விடுமென்று வைத்துக்கொண்டால், பிரஹ்மஞானிக்கு ஜகத் வாஸ்தவமான பதார்த்தமில்லையென்று நன்கு தெரிந்

திருந்தபோதிலும் அது அவனுக்கு பிராரப்த கர்ம வசத்தினால் சரீரம் இருக்கும்வரை தோன்றிக்கொண்டுதான் இருக்குமென்பதும், பிரஹ்மஞானிக்கு இரண்டாவதாக ஜகத் தோன்ருத விஷயத்தில் அவரை குருவாக அடைந்து சிஷ்யன் உபதேசம் பெற்றுக்கொள்ள வேண்டும் என்பதும், நியாயமாகாது. ஆகையால் ஜகத்தை பிரஹ்மரூபமாக அறிந்தாலும்கூட ஜகத்திலுள்ள நாமரூபங்கள் தோன்றக் கூடியதே என்று உணர்த்துவதற்காக இந்த ஸமுத்திர திருஷ்டாந்தம். எல்லாம் ஜலமாயிருந்தும், ஜலத்தைத்தவிர வேறில்லாமலிருந்தும், நீர்குமிழி, அலை முதலியவை தனியாகத் தென்படவில்லையா என்று தாத்பர்யம்.] (9)

तरङ्गत्वं ध्रुवं सिन्धुर्न वाञ्छति यथा तथा ।
विषयानन्दवाञ्छा ते न सदानन्दरूपतः ॥ १० ॥

தரங்கத்வம் த்ருவம் ஸிந்துர் ந வாஞ்ச்சதி யதா ததா ।
விஷயானந்த வாஞ்ச்சா தே ந ஸதானந்தரூபத: ॥

**यथा**-எப்படி, **सिन्धुः**-ஸமுத்திரமானது, **तरङ्गत्वं**-அலையாக இருக்கும் தன்மையை, **ध्रुवं**-நிச்சயமாக, **न वाञ्छति**-ஆசைப்படாதோ, **तथा**-அப்படியே, **सदा**-எப்பொழுதும், **आनन्दरूपतः**-ஆனந்தஸ்வரூபமுள்ளவனுதலால், **ते**-உனக்கு, **विषयानन्दवाञ्छा**-விஷயங்களிலிருந்து கிடைக்கக்கூடிய ஆனந்தத்தில் ஆசை, **न**-இருக்காது.

எப்படி ஸமுத்திரமானது அலையாக இருக்கும் தன்மையை நிச்சயமாக ஆசைப்படாதோ, அப்படியே எப்பொழுதும் நீ ஆனந்தஸ்வரூபமுள்ளவனுதலால் உனக்கு விஷயங்களிலிருந்து கிடைக்கக்கூடிய ஆனந்தத்தில் ஆசை இருக்காது.

[மேலான ஸுகம் கிடைக்கும்போது அதற்கு உள்பட்டதும் அதற்குக் கீழ்பட்டதுமான ஸுகத்தில் ஆசை ஏற்படாது. நிரதிசயமான ஆனந்த ஸ்வரூபமாகவே எப்பொழுதும் ஆத்மா இருக்கும்போது ஏதோ சிற்சில ஸமயங்

களில் விஷயங்களின் சேர்க்கையினுல் கிடைப்பதுபோல் தோன்றும் அல்ப ஸுகத்தில் ஆசை ஏற்பட நியாயமே இல்லை.] (10)

पिष्टं व्याप्य गुडो यद्वन्माधुर्यं न हि वाञ्छति ।
पूर्णानन्दो जगद्व्याप्य तदानन्दं न वाञ्छति ॥ ११ ॥

பிஷ்டம் வ்யாப்ய குடோ யத்வன் மாதுர்யம் நஹி வாஞ்சதி ।
பூர்ணனந்தோ ஜகத் வ்யாப்ய ததானந்தம் ந வாஞ்சதி ॥

**गुडः**-வெல்லமானது, **पिष्टं**-மாவை, **व्याप्य**-வியாபித்துக் கொண்டு, **माधुर्यं**-தித்திப்பை, **यद्वत्**-எப்படி, **न हि वाञ्छति**-ஆசைப்படுகிறதில்லையோ, (அப்படியே), **पूर्णानन्दः**-பரிபூர்ண ஆனந்தஸ்வரூபமாயுள்ள (ஆத்மா), **जगत्**-ஜகத்தை, **व्याप्य**-வியாபித்துக்கொண்டு, **तदानन्दं**-அதினுடைய (ஜகத்தினுடைய) ஆனந்தத்தை, **न वाञ्छति**-ஆசைப்படுகிறதில்லை.

மாவை வியாபித்துக்கொண்டு இருக்கும் வெல்லமானது தித்திப்பை எப்படி ஆசைப்படுகிறதில்லையோ, அப்படியே ஜகத்தை வியாபித்துக் கொண்டு இருக்கும் பரிபூர்ண ஆனந்த ஸ்வரூபமாயுள்ள (சைதன்யம்) அதனுடைய (ஜகத்தினுடைய) ஆனந்தத்தை ஆசைப்படுகிறதில்லை.

[மாவில் தித்திப்பு கிடையாது. அதைத் தித்திக்கும் படிச் செய்வது அதில் கலந்துள்ள வெல்லம். அப்படி இருக்கையில் மாவிற்குள்ள தித்திப்பு தனக்குத் தேவை என்று வெல்லம் நினைக்குமா? அதேபோல, ஜகத்தில் ஆனந்தம் கிடையாது. ஆனந்த ஸ்வரூபியான ஆத்மா ஜகத்தில் வியாபித்திருப்பதால் ஜகத்தில் ஆனந்தம் தோன்றுகிறது. இப்படியிருக்க, ஜகத்தின் ஆனந்தம் தனக்கு வேண்டுமென்று ஆத்மா அபேக்ஷிப்பது நியாயமாகுமா?] (11)

दारिद्र्याशा यथा नास्ति संपन्नस्य तथा तव ।
ब्रह्मानन्दनिमग्नस्य विषयाशा न संभवेत् ॥ १२ ॥

தாரித்ர்யாசா யதா நாஸ்தி ஸம்பன்னஸ்ய ததா தவ।
ப்ரஹ்மானந்த நிமக்னஸ்ய விஷயாசா ந ஸம்பவேத்॥

**यथा**-எப்படி, **संपन्नस्य**-அதிகப்பணக்காரனுக்கு, **दारिद्र्याशा**-ஏழையாக இருக்கும் தன்மையில் ஆசை, **नास्ति**-கிடையாதோ, **तथा**-அப்படியே, **ब्रह्मानन्दनिमग्नस्य**-பிரஹ்மத்தின் ஆனந்தத்தில் மூழ்கிக்கிடக்கிற, **तव**-உனக்கு, **विषयाशा**-விஷயங்களில் ஆசை, **न संभवेत्**-ஸம்பவிக்காது.

எப்படி அதிகப் பணக்காரனுக்கு ஏழையாயிருக்கும் தன்மையில் ஆசை கிடையாதோ, அப்படியே பிரஹ்மத்தின் ஆனந்தத்தில் மூழ்கிக் கிடக்கிற உனக்கு விஷயங்களில் ஆசை ஸம்பவிக்காது.

[பண ஸௌகர்யமுள்ளவன் தான் ஏழையாயிருக்க வேண்டுமென்று ஆசைப்படுவதில்லை. அப்படியே ஆனந்த ஸ்வரூபனுயிருக்கிற ஆத்மா ஆனந்த ஸ்வரூபமற்று வாஸ்தவத்தில் துக்க ரூபமாயுள்ள விஷயங்களில் ஆசை வைப்பது பொருத்தமாகுமா ? இவ்விதம் 10, 11, 12 சுலோகங்களினுல் ஆத்மாவிற்கு விஷயத்தில் ஆசையிருப்பது நியாயமில்லை யென்று 3 உதாஹரணங்களால் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. ஸமுத்திர திருஷ்டாந்தத்தினுல் விஷயானந்தம் பிரஹ்மானந்தத்தின் லவலேசமே என்றும், வெல்ல திருஷ்டாந்தத்தினுல் விஷயங்களில் தோன்றும் ஸுகலேசமும் கூட அவைகளின் சொந்தமல்ல, வாஸ்தவத்தில் பிரஹ்மத்தின் வியாப்தியினுல் ஏற்பட்டது என்றும், மூன்ருவதான பணக்கார திருஷ்டாந்தத்தினுல் விஷயங்கள் வாஸ்தவத்தில் துக்க ரூபமே தவிர அவைகளில் ஆனந்த லேசம்கூட கிடையாதென்றும் வாஸ்தவ நிலையை ஸ்ரீமத் ஆசார்யார் வர்ணித்திருக்கிருர்.] (12)

विषं दृष्ट्वाऽमृतं दृष्ट्वा विषं त्यजति बुद्धिमान्।
आत्मानमपि दृष्ट्वा त्वं त्यजानात्मानमादरात्॥ १३॥

விஷம் த்ருஷ்ட்வாऽம்ருதம் த்ருஷ்ட்வா விஷம் த்யஜதி
புத்திமான் ।
ஆத்மானமபி த்ருஷ்ட்வா த்வம் த்யஜாநாத்மானமாதராத் ॥

**बुद्धिमान्**-புத்தியுள்ளவன், **विषं**-விஷத்தை, **दृष्ट्वा**-பார்த்து, **अमृतं**-அமிருதத்தையும், **दृष्ट्वा**-பார்த்துவிட்டால், **विषं**-விஷத்தை, **त्यजति**-விட்டுவிடுவான். (அப்படியே) **त्वं**-நீ, **आत्मानमपि**-ஆத்மாவையும், **दृष्ट्वा**-பார்த்துவிட்டு, **अनात्मानं**-ஆத்மாவல்லாததை, **आदरात्**-வெகு ஞாபகமாய், **त्यज**-விட்டுவிடு.

புத்தியுள்ளவன் விஷத்தையும் அமிருதத்தையும் பார்த்துவிட்டால் விஷத்தை விட்டுவிடுவான். (அப்படியே) நீ ஆத்மாவையும் அநாத்மாவையும் பார்த்துவிட்டு ஆத்மா வல்லாததை வெகு ஞாபகமாய் விட்டுவிடு.

[விஷயானந்தம் வாஸ்தவமான ஆனந்தத்தின் அம்சம் என்று வைத்துக்கொண்டாலும், வெறும் தோற்றம் என்று வைத்துக்கொண்டாலும், ஆனந்தமே இல்லையென்று வைத்துக்கொண்டாலும் ஆசைப்படத் தக்கதில்லையென் பதை முன் மூன்று சுலோகங்களால் காட்டிவிட்டு அந்த விஷயானந்தம் அனுகூலம் செய்யாமலிருப்பதுடன் பிரதி கூலமான பலனையும் கொடுக்கும் என்று சொல்வதற்காக இந்த சுலோகத்தில் விஷ திருஷ்டாந்தம் காட்டப்பட்டிருக் கிறது. ஒரு பதார்த்தம் கெடுதலைத்தான் செய்யுமென்று தெரிந்தும் அதை எடுத்துக்கொள்வது புத்திசாலி செய்யக் கூடிய காரியமில்லை என்று காட்டுகிறார்.] (13)

घटावभासको भानुर्घटनाशे न नश्यति ।
देहावभासकः साक्षी देहनाशे न नश्यति ॥ १४ ॥

கடாவபாஸகோ பானுர் கடநாசே ந நச்யதி ।
தேஹாவபாஸக: ஸாக்ஷீ தேஹநாசே ந நச்யதி ॥

**घटावभासकः**-குடத்தைப் பிரகாசிக்கும்படிச் செய்கிற, **भानुः**-ஸூர்யன், **घटनाशे**-குடத்திற்கு நாசம் வரும்போது, **न नश्यति**-தான் நாசத்தை அடைவதில்லை. (அப்படியே) **देहावभासकः**-தேஹத்தைப் பிரகாசிக்கும்படிச்செய்கிற, **साक्षी**-ஸாக்ஷியாயிருக்கிற ஆத்மா, **देहनाशे**-தேஹம் இல்லாமல் போகும்போது, **न नश्यति**-இல்லாமல் போவதில்லை.

குடத்தை விளங்கச் செய்கின்ற ஸூர்யன் குடம் அழிந்தாலும் தான் அழிவதில்லை. அதுபோல் தேஹத்தை விளங்கவைக்கும் ஆத்மா தேஹம் அழிந்தாலும் அழிவதில்லை.

[ஆத்மாவிற்கு உபாதிகளாக இருந்துகொண்டு ஆத்மா ஒன்று இருக்கிறது என்று காட்டிக்கொண்டிருக்கிற சரீரம் முதலான ஆத்மாவல்லாதவைகள் விலகிவிட்டால் ஆத்மாவே இல்லாமல் போய்விடுமோ என்கிற ஸந்தேஹம் வேண்டாம். குடத்தைக் காட்டிக்கொடுக்கும் ஸூர்யன் குடம் உடைந்துபோனால் தானும் இல்லாமல் போய்விடுகிறாரா என்று கேட்கிறார்.] (14)

**निराकारं जगत् सर्वं निर्मलं सच्चिदात्मकम् ।**
**द्वैताभावात् कथं कस्माद्भयं पूर्णस्य ते वद ॥ १५ ॥**

நிராகாரம் ஜகத் ஸர்வம் நிர்மலம் ஸச்சிதாத்மகம் ।
த்வைதாபாவாத் கதம் கஸ்மாத் பயம் பூர்ணஸ்ய தே வத ॥

**जगत्**-பிரபஞ்சம், **सर्वं**-எல்லாம் (வாஸ்தவத்தில்) **निराकारं**-ரூபமற்ற, **निर्मलं**-நிர்மலமாயுள்ள **सच्चिदात्मकं**-ஸத்தாகவும் ஞானஸ்வரூபமாகவும் இருக்கிற பிரஹ்மமேயாகும். **द्वैताभावात्**-இரண்டாவது பதார்த்தம் இல்லாததினால், **पूर्णस्य**-பரிபூர்ணமாயிருக்கிற, **ते**-உனக்கு, **कथं**-எவ்விதம், **कस्मात्**-எந்தக் காரணத்தினால், **भयं**-பயம், (ஏற்படும்)? **वद**-சொல்லு.

ஜகத்து எல்லாம் (வாஸ்தவத்தில்) ரூபமற்ற நிர்மல மாயுள்ள ஸத்தாகவும் ஞானஸ்வரூபமாகவுமிருக்கிற பிரஹ்மமேயாகும். இரண்டாவது பதார்த்தம் இல்லாததினால் பரிபூர்ணமாயிருக்கிற உனக்கு எவ்விதம் எந்தக் காரணத்தைக்கொண்டு பயம் ஏற்படும்? சொல்லு.

[பயம் என்பது தன்னைத் தவிர வேறு இரண்டாவது பதார்த்தம் இருந்தால் வரக்கூடும். ஆத்மாவிற்கு இரண்டாவதாகத் தோன்றுகிற ஜகத்தும் வாஸ்தவத்தில் பிரஹ்ம ஸ்வரூபமாகவே இருப்பதால், ஜகத்தை இரண்டாவது பதார்த்தம் என்று எண்ணுவதற்கில்லை. ஆகையால் பயம் ஏற்படக் காரணமே கிடையாது] (15)

ब्रह्मादिकं जगत् सर्वं त्वय्यानन्दे प्रकल्पितम् ।
त्वय्येव लीनं हि जगत् त्वं कथं लीयसे वद ॥ १६ ॥

ப்ரஹ்மாதிகம் ஜகத் ஸர்வம் த்வய்யாநந்தே ப்ரகல்பிதம் ।
த்வய்யேவ லீனம் ஹி ஜகத் த்வம் கதம் லீயஸே வத ॥

**ब्रह्मादिकं**-பிரஹ்மா முதலான, **जगत्**-ஜகத்து, **सर्वं**-எல்லாம், **आनन्दे**-ஆனந்த ஸ்வரூபமாயுள்ள, **त्वयि**-உன்னிடத்தில், **प्रकल्पितं**-நன்கு கல்பிக்கப்பட்டிருக்கிறது. **जगत्**-ஜகத்தானது, **त्वयि एव**-உன்னிடத்திலேயே, **लीनं हि**-லயத்தையும் அடைந்துவிடுகிறது. (அப்படியிருக்க) **त्वं**-நீ **कथं**-எப்படி, **लीयसे**-லயமடையமுடியும்? **वद**-சொல்லு.

பிரஹ்மா முதலான ஜகத்து எல்லாம் ஆனந்த ஸ்வரூபமாயுள்ள உன்னிடத்தில் நன்கு கல்பிக்கப்பட்டு இருக்கிறது. ஜகத்தானது உன்னிடத்திலேயே லயத்தையும் அடைந்துவிடுகிறது. (அப்படியிருக்க) நீ எப்படி லயம் அடைய முடியும்? சொல்லு.

[கயிற்றில் கல்பிக்கப்பட்டுத் தோன்றும் பாம்பு கயிற்றில் மறைந்துவிடும். அந்தப் பாம்புக்கு ஆதாரமாயிருக்கும் கயறு மறைந்துபோகாது. அப்படியே கல்பிதமான

ஜகத் மறையும்போது அதற்கு ஆதாரமாயிருக்கும் ஆத்மா மறையாது. இவ்விதமாக 14, 15, 16 சுலோகங்களினுல் ஆத்மாவல்லாத தேஹம் முதலிய பிரபஞ்சம் யாவும் ஆத்ம ஞானத்தினுல் இல்லாமல் போகும்போது ஆத்மாவும் இல்லையென்று போய்விடுமே என்ற பயம் வேண்டாம் என்று ஸ்ரீமத் ஆசார்யார் உபதேசிக்கிருர்.] (16)

न हि प्रपञ्चो न हि भूतजातं
न चेन्द्रियं प्राणगणो न देहः ।
न बुद्धिचित्तं न मनो न कर्ता
ब्रह्मैव सत्यं परमात्मरूपम् ॥ १७ ॥

நஹி ப்ரபஞ்சோ நஹி பூத ஜாதம்
ந சேந்த்ரியம் ப்ராண கணோ ந தேஹ: ।
ந புத்தி சித்தம் ந மனோ ந கர்த்தா
ப்ரஹ்மைவ ஸத்யம் பரமாத்மரூபம் ॥

**ब्रह्म एव**–பிரஹ்மம்தான், **सत्यं** – ஸத்யமாகவும், **परमात्मरूपं**–உத்கிருஷ்டமான ஆத்மஸ்வரூபமாகவும் (இருக்கிறது). **प्रपञ्चः**–ஜகத்து **न हि**–அப்படியல்ல, **भूतजातं**–(பஞ்ச) பூதங்களின் கூட்டமும், **न हि**–அப்படியல்ல, **इन्द्रियं च**–இந்திரியமும், **न**–இல்லை, **प्राणगणः**–(ஐந்துவித) பிராணக் கூட்டமும் (இல்லை), **देह**-தேஹமும், **न**–இல்லை, **बुद्धिचित्तं**–புத்தியும் சித்தமும் **न**–இல்லை, **मनः**–மனஸும், **न**–இல்லை, **कर्ता**–செய்கிறவன் (அஹங்காரம்) **न**–இல்லை.

பிரஹ்மம்தான் ஸத்யமாகவும் உத்கிருஷ்டமான ஆத்மஸ்வரூபமாகவும் இருக்கிறது. ஜகத்து அப்படியல்ல, பஞ்ச பூதங்களின் கூட்டமும் அப்படியல்ல, இந்திரியமும் இல்லை, ஐந்துவித பிராணக் கூட்டமும் இல்லை, தேஹமும் இல்லை, புத்தியும் இல்லை, சித்தமும் இல்லை, மனஸும் இல்லை, செய்கிறவன் (அஹங்காரமும்) இல்லை.

[ஸ்தூல பிரபஞ்சமோ ஸூக்ஷ்ம பிரபஞ்சமோ, ஸ்தூல சரீரமோ, ஸூக்ஷ்ம சரீரமோ, எல்லாம் ஆத்மாவல்ல வாதலால் அவை ஸத்ய பதார்த்தங்கள் ஆகா. பிரஹ்மம் அதாவது ஆத்மா தான் ஸத்யம்.] (17)

**सर्वं सुखं विद्धि सुदुःखनाशात् सर्वं च सद्रूपमसत्यनाशात् ।**
**चिद्रूपमेवं प्रतिभानयुक्तं तस्मादखण्डं परमात्मरूपम् ॥ १८ ॥**

ஸர்வம் ஸுகம் வித்தி ஸுதுக்க நாசாத்
ஸர்வம் ச ஸத்ரூபமஸத்ய நாசாத் ।
சித்ரூபமேவம் ப்ரதிபான யுக்தம்
தஸ்மாதகண்டம் பரமாத்ம ரூபம் ॥

**सुदुःखनाशात्** –துக்கமெல்லாம் நன்கு போய்விடுகிற படியால் **सर्वं**–எல்லாம், **सुखं**–ஆனந்தஸ்வரூபம் என்று, **विद्धि**–அறி. **असत्यनाशात्**–அஸத்யமெல்லாம் போய்விடுகிற படியால், **सर्वं च**–எல்லாவற்றையும், **सद्रूपं**–ஸத்ஸ்வரூபம் (என்று அறி). **एवं**-அப்படியே, **प्रतिभानयुक्तं**-பிரதிபலிக்கும் தன்மையோடுகூடியதால், **चिद्रूपं**–சித்ஸ்வரூபம் (என்று அறி). **तस्मात्**–ஆகையால், **परमात्मरूपं**–பரமாத்மஸ்வரூப மானது, **अखण्डं**-பிரிவற்றது.

துக்கமெல்லாம் நன்கு போய்விடுகிறபடியால் எல்லாம் ஆனந்தஸ்வரூபம் என்று அறி. அஸத்யமெல்லாம் போய் விடுகிறபடியால். எல்லாவற்றையும் ஸத் ஸ்வரூபம் (என்று அறி). அப்படியே பிரதிபலிக்கும் தன்மையோடு கூடியதால் சித் ஸ்வரூபம் (என்று அறி) ஆகையால் பரமாத்ம ஸ்வரூப மானது பிரிவற்றது.

[ஒரு பதார்த்தம் சில ஸமயம் இருந்து சில ஸமயம் இல்லாமல் போனால் அது ஸத் பதார்த்தம் ஆகாது. அப் படியே சில ஸமயம் பிரகாசமாயிருந்து சில ஸமயம் பிரகாச

மில்லாமல்போனால் அது சித் பதார்த்தம் ஆகாது. அப்படியே, சில ஸமயம் ஸுகமாயிருந்து சில ஸமயம் துக்கமாயிருந்தால் அது ஆனந்த பதார்த்தமாகாது. அவைகளுக்கெல்லாம் காலத்தினாலும் தேசத்தினாலும் வஸ்துவினாலும் வரையரை உண்டு. எப்பொழுதும் ஸத்தாகவும் சித்தாகவும் ஆனந்தமாகவும் இருக்கிற பரமாத்ம ஸ்வரூபத்திற்கு வரையரையே கிடையாது] (18)

चिदेव देहस्तु चिदेव लोकाः चिदेव भूतानि चिदिन्द्रियाणि।
कर्ता चिदन्तःकरणं चिदेव चिदेव सत्यं परमार्थरूपम् ॥ १९ ॥

சிதேவ தேஹஸ்து சிதேவ லோகா:
சிதேவ பூதானி சிதிந்த்ரியாணி ।
கர்த்தா சிதந்தக்கரணம் சிதேவ
சிதேவ ஸத்யம் பரமார்த்த ரூபம் ॥

**देहस्तु**–தேஹமும். **चिदेव**–சைதன்யமே, **लोकाः**–உலகங்களும், **चिदेव**–சைதன்யமே, **भूतानि**–பூதங்களும், **चिदेव**-சைதன்யமே. **इन्द्रियाणि**–இந்திரியங்களும், **चित्**-சைதன்யம். **कर्ता**–செய்கிறவன் (அஹங்காரம்) **चित्** சைதன்யம். **अन्तः-करणं**–உள்கருவியான மனமும், **चिदेव**–சைதன்யம்தான். **सत्यं**–ஸத்யமாகவும், **परमार्थरूपं**–வாஸ்தவத்தில் இருக்கும் தன்மையுடையதாகவும் இருப்பது, **चिदेव**–சைதன்யம்தான்.

தேஹமும் சைதன்யமே, உலகங்களும் சைதன்யமே, பூதங்களும் சைதன்யமே, இந்திரியங்களும் சைதன்யமே, செய்கிறவன் (அஹங்காரம்) சைதன்யமே, உள் கருவியான அந்தக்கரணமும் சைதன்யம்தான். ஸத்யமாகவும் வாஸ்தவத்தில் இருக்கும் தன்மையுடையதாகவும் இருப்பது சைதன்யம்தான்.

[ஆத்மாவைத்தவிர்த்து வேருகப் பிரகாசிக்கிறது போல் தோன்றும் ஜகத்தும், தேஹம் முதலானவைகளும் வாஸ்தவத்தில் பிரகாசஸ்வரூபமாயுள்ள சைதன்யமேதான் ஆகும். சைதன்யத்தின் வியாப்தி அவைகளுக்கு இல்லாமலிருந்தால் அவை பிரகாசிக்கவே முடியாது] (19)

न मे बन्धो न मे मुक्तिर्न मे शास्त्रं न मे गुरुः ।
मायामात्रविलासो हि मायातीतोहमद्वयः ॥ २० ॥

ந மே பந்தோ ந மே முக்திர் ந மே மாஸ்த்ரம் ந மே குரு: ।
மாயா மாத்ர விலாஸோ ஹி மாயாதீதோऽஹமத்வய: ॥

मे-எனக்கு, बन्धः-ஸம்ஸாரபந்தம், न-கிடையாது. मे-எனக்கு, मुक्तिः-மோக்ஷமும், न-கிடையாது. मे-எனக்கு, शास्त्रं-சாஸ்திரமும், न-கிடையாது, मे-எனக்கு, गुरुः-குருவும் न-கிடையாது. (இவையெல்லாம்) मायामात्रविलासो हि-மாயையினாலேயே தோன்றுபவைகள். अहं-நான், मायातीतः-மாயைக்கு அப்பால்பட்டவனாய், अद्वयः-இரண்டற்றவனாய் இருப்பவன்.

எனக்கு ஸம்ஸார பந்தம் கிடையாது; (ஆகையால்) எனக்கு மோக்ஷமும் கிடையாது, எனக்கு சாஸ்திரமும் கிடையாது, எனக்கு குருவும் கிடையாது. (இவையெல்லாம்) மாயையினாலேயே தோன்றுபவைகள். நான் மாயைக்கு அப்பால்பட்டவனாய், இரண்டற்றவனாய் இருப்பவன். (20)

राज्यं करोतु विज्ञानी भिक्षामटतु निर्भयः ।
दोषैर्न लिप्यते शुद्धः पद्मपत्रमिवाम्भसा ॥ २१ ॥

ராஜ்யம் கரோது விஜ்ஞானீ பிக்ஷாமடது நிர்பய: ।
தோஷைர் ந லிப்யதே ஶுத்த: பத்மபத்ரமிவாம்பஸா ॥

विज्ञानी-ஆத்மஸாக்ஷாத்காரமடைந்தவர், निर्भयः-பயமில்லாதவராக, राज्यं-ராஜ்யத்தை, करोतु-ஆளட்டும். (அல்லது) भिक्षां-பிக்ஷைக்காக, अटतु-அலையட்டும். पद्मपत्रं-தாமரை இலை, अम्भसा-ஜலத்தினால், इव-(எப்படி அழுக்காக ஆகிறதில்லையோ அதைப் போலவே, शुद्धः-மிகவும் சுத்தராயிருக்கிற ஞானி, दोषैः-எவ்வித தோஷங்களினாலும், न लिप्यते-அழுக்கடைவதில்லை.

ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்தவர் ராஜ்யத்தை ஆளட்டும். அல்லது பிக்ஷைக்காக அலையட்டும். பயமே

வேண்டாம். தாமரை இலை ஜலத்தினல் எப்படி அழுக்காக ஆகிறதில்லையோ அதைப்போலவே மிகவும் சுத்தராயிருக்கிற ஞானி எந்தக்காரியம் செய்தபோதிலும் எவ்வித தோஷங்களினுலும் அழுக்கடைவதில்லை. (21)

**पुण्यानि पापकर्माणि स्वप्नगानि न जाग्रति ।**
**एवं जाग्रत्पुण्यपापकर्माणि न हि मे प्रभोः ॥ २२ ॥**

புண்யானி பாப கர்மாணி ஸ்வப்னகானி ந ஜாக்ரதி ।
ஏவம் ஜாக்ரத் புண்ய பாப கர்மாணி ந ஹி மே ப்ரபோ: ॥

**स्वप्नगानि**-ஸ்வப்ன தசையிலுள்ள, **पुण्यानि**-புண்ணிய கர்மாக்களோ, **पापकर्माणि**-பாபகர்மாக்களோ எல்லாம், **जाग्रति**-விழிப்பு தசையில், **न**-கிடையாது. **एवं**-இவ்விதமாகவே, **जाग्रत्पुण्यपापकर्माणि**-விழிப்பு தசையில் செய்யப்படும் புண்ணிய பாபகர்மாக்கள், **प्रभोः**-எல்லாவற்றிற்கும் மேலாக இருக்கிற, **मे**-எனக்கு, **न हि**-கிடையாது.

ஸ்வப்னவஸ்தையில் செய்யும் புண்ய கர்மாக்களோ, பாப கர்மாக்களோ எல்லாம் விழிப்பு தசையில் கிடையாது. இவ்விதமாகவே, விழிப்பு தசையில் செய்யப்படும் புண்ணிய பாப கர்மாக்களும் எல்லாவற்றிற்கும் மேலாக இருக்கிற எனக்குக் கிடையாது. (22)

**कायः करोतु कर्माणि वृथा वागुच्यतामिह ।**
**राज्यं ध्यायतु वा बुद्धिः पूर्णस्य मम का क्षतिः ॥ २३ ॥**

காய: கரோது கர்மாணி வ்ருதா வாகுச்யதாமிஹ ।
ராஜ்யம் த்யாயது வா புத்தி: பூர்ணஸ்ய மம கா க்ஷதி: ॥

**कायः**-சரீரம், **कर्माणि**-கர்மாக்களை, **करोतु**-செய்யட்டும். **इह**-இங்கே, **वाक्**-வாக்கானது, **वृथा**-வீணுக, **उच्यतां**-சொல்லப்பட்டுக்கொண்டிருக்கட்டும். **बुद्धिः वा**-அல்லது புத்தி, **राज्यं**-ராஜ்யத்தைப்பற்றி, **ध्यायतु**-தியானம் செய்து கொண்டிருக்கட்டும். (அதனுல்), **पूर्णस्य**-பரிபூர்ணஸ்வரூபனை, **मम**-எனக்கு, **का**-என்ன, **क्षतिः**-கெடுதல் ?

சரீரம் கர்மாக்களைச் செய்யட்டும், இங்கே வாக்கானது வீணுக சொல்லப்பட்டுக் கொண்டிருக்கட்டும், அல்லது புத்தி ராஜ்யத்தைப் பற்றி தியானம் செய்துகொண்டிருக்கட்டும். (அதனால்) பரிபூர்ண ஸ்வரூபனை எனக்கு என்ன கெடுதல்?

प्राणाश्चरन्तु तद्धर्मैः कामैर्वा हन्यतां मनः ।
आनन्दामृतपूर्णस्य मम दुःखं कथं भवेत् ॥ २४ ॥

ப்ராணாச்சரந்து தத்தர்மை: காமைர் வா ஹன்யதாம் மந: ।
ஆநந்தாம்ருத பூர்ணஸ்ய மம துக்கம் கதம் பவேத் ॥

**प्राणाः**–பிராணங்கள் (இந்திரியங்கள்), **तद्धर्मैः**–அதன் ஸ்வபாவத்திற்குத் தக்கபடி, **चरन्तु**–ஸஞ்சரிக்கட்டும். **मनः वा**–அல்லது மனஸ் **कामैः**–ஆசைகளினால், **हन्यतां**–பீடிக்கப் படட்டும். (அதனால்) **आनन्दामृतपूर्णस्य**–ஆனந்தமாகிற அமிருதம் நிரம்பிய, **मम**–எனக்கு, **दुःखं**-துக்கமானது, **कथं**–எப்படி, **भवेत्**–ஏற்படும் ?

பிராணங்கள் (இந்திரியங்கள்) அததன் ஸ்வபாவத் திற்குத் தக்கபடி ஸஞ்சரிக்கட்டும், அல்லது மனஸ் ஆசைகளினால் பீடிக்கப்படட்டும். (அதனால்) ஆனந்த மாகிற அமிருதம் நிரம்பிய எனக்கு துக்கமானது எப்படி ஏற்படும் ?

[சரீரம், இந்திரியங்கள், மனஸ், புத்தி, இவைகளுக் கெல்லாம் அதீதமாயிருப்பதே ஆத்மாவானதினால், அவை களுடைய தனித்தனி வியாபாரங்களோ, அவைகளால் ஏற்படக்கூடிய ஸுக துக்கங்களோ ஆத்மாவிற்கு ஸம்பந்தப் பட்டவையல்லவென்று 20 முதல் 24 வரையிலுள்ள ஐந்து சுலோகங்களில் விவரித்துத் கூறப்பட்டது.] (24)

आनन्दाम्बुधिमग्नोऽसौ देही तत्र न दृश्यते ।
लवणं जलमध्यस्थं यथा तत्र लयं गतम् ॥ २५ ॥

ஆநந்தாம்புதி மக்னோஸௌ தேஹீ தத்ர ந த்ருச்யதே ।
லவணம் ஜலமத்யஸ்தம் யதா தத்ர லயம் கதம் ॥

**यथा**-எப்படி, **जलमध्यस्थं**-ஜலத்தின் நடுவில் இருக்கிற **लवणं**-உப்பு, **तत्र**-அங்கே (ஜலத்தில்), **लयं**-லயத்தை, **गतं**-அடைந்துவிடுமோ (அப்படியே), **आनन्दाम्बुधिमग्नः**-ஆனந்த ஸமுத்திரத்தில் மூழ்கியிருக்கும், **असौ**-இந்த, **देही**-தேஹத்தையுடையவன் (ஜீவாத்மா), **तत्र**-அங்கே, **न दृश्यते**-காணப்படுவதில்லை.

எப்படி ஜலத்தின் நடுவில் இருக்கிற உப்பு ஜலத்தில் கரைந்து காணுமல் போய்விடுமோ அப்படியே ஆனந்த ஸமுத்திரத்தில் மூழ்கியிருக்கும் இந்த தேஹத்தை உடையவன் (ஜீவாத்மா) அங்கே காணப்படுவதில்லை.

[உபாதிகளான சரீராதி ஸம்பந்தம் விலகினவுடன், அதற்கு முன் அவைகளையும் சேர்த்துக்கொண்டு "நான்" என்று அபிமானித்து வந்த ஜீவன் அவைகளால் ஏற்பட்ட நாம ரூபங்கள், ஸுக துக்கங்கள் முதலிய கட்டிலிருந்து விடுபட்டு ஸர்வ வியாபகமான ஆனந்த ரூபமான பிரஹ்மத்தோடு கலந்து விடுகிறபடியால், தனியாய் இருப்பதாகத் தெரியாது.] (25)

**इन्द्रियाणि मनः प्राणा अहंकारः परस्परम् ।**
**जाड्यसंगतिमुत्सृज्य मग्ना मयि चिदर्णवे ॥ २६ ॥**

இந்த்ரியாணி மன: ப்ராணு அஹங்கார: பரஸ்பரம் ।
ஜாட்ய ஸங்கதிமுத்ஸ்ருஜ்ய மக்னு மயி சிதர்ணவே ॥

**इन्द्रियाणि**-இந்திரியங்கள், **मनः**-மனஸ், **प्राणाः**-பிராணன்கள், **अहंकारः**-அஹங்காரம் (இவையெல்லாம்) **परस्परं**-ஒன்றுக்கொன்று, **जाड्यसंगतिं**-ஜடத்தன்மையினுல் ஏற்பட்ட சேர்க்கையை, **उत्सृज्य**-விட்டுவிட்டு, **चिदर्णवे**-சைதன்ய ஸமுத்ரமாகிய, **मयि**-என்னிடத்திலேயே, **मग्नाः**-அமிழ்ந்துவிடுகின்றன.

இந்திரியங்கள், மனஸ், பிராணங்கள், அஹங்காரம் (இவையெல்லாம்) ஒன்றுக்கொன்று ஜடத்தன்மையினுல் ஏற்பட்ட சேர்க்கையை விட்டுவிட்டு, சைதன்ய ஸமுத்திரமாகிய என்னிடத்திலேயே அமிழ்ந்துவிடுகின்றன.

[ஜீவனுடைய உபாதிகள் விலகுகின்றன வென்றால் அவைகள் வேறு எங்கேயோ லயமடைகின்றன வென்று நினைக்கக் கூடாதென்பதற்காக அவைகள் மறைவதும் ஆத்மாவில்தான் என்பதை இங்கு குறிப்பிடுகிறார்.] (26)

आत्मानमञ्जसा वेद्मि त्वज्ञानं प्रपलायितम् ।
कर्तृत्वमद्य मे नष्टं कर्तव्यं वाऽपि न क्वचित् ॥ २७ ॥

ஆத்மானமஞ்ஜஸா வேத்மி த்வக்ஞானம் ப்ரபலாயிதம் ।
கர்த்ருத்வமத்ய மே நஷ்டம் கர்தவ்யம் வாபி ந க்வசித் ॥

आत्मानं-ஆத்மாவை, अञ्जसा-நன்கு, वेद्मि-அறிந்து விட்டேன். अज्ञानं तु-அக்ஞானமோ, प्रपलायितं-ஓடிப்போய் விட்டது, अद्य-இப்பொழுது, मे-என்னுடைய, कर्तृत्वं-செய்கிறவன் என்ற தன்மை, नष्टं-போய்விட்டது. कर्तव्यं वाऽपि-செய்யவேண்டியது என்பதும் (எனக்கு), क्वचित्-ஒருபோதும், न-கிடையாது.

ஆத்மாவை நன்கு தெரிந்துகொள்கிறேன். அக்ஞானம் எங்கோ ஓடிவிட்டது, செய்கிறவன் என்ற தன்மை நீங்கி விட்டது. செய்யவேண்டியதும் ஒரு இடத்திலும் இல்லை.

[ஆத்மஞானம் ஏற்பட்டு அக்ஞானம் விலகின பிறகு, அவ்வக்ஞானத்தின் கார்யமான கர்த்ருத்வம் (செய்கிறவன் என்ற தன்மை), அதன் கார்யமான கர்மாக்கள், அவை களின் பலனான ஸுக துக்கங்கள், இவையெல்லாம் ஆத் மாவில்ஒட்டாதென்று 27, 28, 29 சுலோகங்களில் விவரிக்கப் படுகிறது.] (27)

चिदमृतसुखराशौ चित्तफेनं विलीनं
क्षयमधिगत एवं वृत्तिचञ्चत्तरङ्गः ।
स्तिमितसुखसमुद्रो निर्विचेष्टः सुपूर्णः
कथमिह मम दुःखं सर्वदैकोऽहमस्मि ॥ २८ ॥

சிதம்ருத ஸுக ராசௌ சித்த பேனம் விலீனம்
க்ஷயமதிகத ஏவம் வ்ருத்தி சஞ்சத்தரங்கः ।

ஸ்திமித ஸுக ஸமுத்ரோ நிர்விசேஷ்ட: ஸுபூர்ண:
கதமிஹ மம துக்கம் ஸர்வதைகோऽஹமஸ்மி ||

**चिदमृतसुखराशौ**–சைதன்யமாகிற அமிருதமும் ஆனந்தமும் நிரம்பிய ஸமுத்திரத்தில், **चित्तफेनं**–மனஸ்ஸாகிற நுரை **विलीनं**–நன்கு கரைந்துவிட்டது. **एवं**–அப்படியே, **वृत्तिचञ्चत्तरङ्गः**–எப்பொழுதும் சலித்துக்கொண்டிருக்கும் மனோவிருத்தியாகிற அலை, **क्षयं**–நாசத்தை, **अधिगतः**–அடைந்துவிட்டது. **स्तिमितसुखसमुद्रः** – அசைவற்றிருக்கும் ஆனந்த ஸாகரம், **निर्विचेष्टः** - ஒருவித வியாபாரமும் அன்னியில், **सुपूर्णः** – நன்கு நிரம்பியிருக்கிறது. **अहं** – நான், **सर्वदा**–எப்பொழுதும், **एकः** – ஒருவனாகவே, **अस्मि** – இருக்கிறேன். (அப்படியிருக்கையில்), **इह**–இங்கே, **मम**–எனக்கு, **दुःखं**-துக்கம், **कथं**–எப்படி (வரும்)?

சைதன்யமாகிற அமிருதமும் ஆனந்தமும் நிரம்பிய ஸமுத்திரத்தில் மனஸ்ஸாகிற நுரை நன்கு கரைந்து விட்டது. அப்படியே எப்பொழுதும் சலித்துக்கொண்டிருக்கும் மனோவிருத்தியாகிற அலை நாசத்தை அடைந்துவிட்டது. அசைவற்றிருக்கும் ஆனந்த ஸாகரம் ஒருவித வியாபாரமும் அன்னியில் நன்கு நிரம்பியிருக்கிறது எப்பொழுதும் நான் ஒருவனாகவே இருக்கிறேன். அப்படி இருக்கையில் இங்கே எனக்கு துக்கம் எப்படி (வரும்)? (28)

**आनन्दरूपोऽहमखण्डबोधः**
**परात्परोऽहं घनचित्प्रकाशः ।**
**मेघा यथा व्योम न च स्पृशन्ति**
**संसारदुःखानि न मां स्पृशन्ति ॥ २९ ॥**

ஆனந்த ரூபோऽஹமகண்ட போத:
பராத் பரோऽஹம் கனசித் ப்ரகாச: ।
மேகா யதா வ்யோம ந ச ஸ்ப்ருசந்தி
ஸம்ஸார துக்கானி ந மாம் ஸ்ப்ருசந்தி ||

अहं-நான், आनन्दरूपः-ஆனந்தஸ்வரூபன், अखण्डबोधः-பிளவுபடாத ஞானஸ்வரூபன், अहं-நான், परात्-மேலான பதார்த்தத்தைக்காட்டிலும், परः - மேலானவன், घनचित्प्रकाशः - கெட்டியா ஞானஒளியானவன்ன. यथा - எப்படி, मेघाः-மேகங்கள், व्योम च-ஆகாசத்தை, न स्पृशन्ति-தொடுவதில்லையோ, (அப்படியே) संसारदुःखानि - ஸம்ஸாரத்திலுள்ள துக்கங்கள், मां-என்னை, न स्पृशन्ति-தொடாது.

நான் ஆனந்த ஸ்வரூபன், துண்டுப்படாத ஞான ஸ்வரூபன். நான் மேலான பதார்த்தத்திற்கும் மேலானவன், கனமான ஞான ஒளியானவன். எப்படி மேகங்கள் ஆகாசத்தைத் தொடுவதில்லையோ, (அப்படியே) ஸம்ஸாரத்திலுள்ள துக்கங்கள் என்னைத் தொடாது. (29)

अस्थिमांसपुरीषान्त्रचर्मलोमसमन्वितः ।
अन्नादः स्थूलदेहः स्यादतोऽहं शुद्धचिद्घनः ॥ ३० ॥

स्थूलदेहाश्रिता एते स्थूलाद्भिन्नस्य मे न हि ।

அஸ்தி மாம்ஸ புரீஷாந்த்ர சர்ம லோம ஸமன்வித: ।
அந்நாத: ஸ்தூல தேஹ: ஸ்யாத்
அதோ ऽஹம் ஶுத்த சித்கன: ॥

ஸ்தூல தேஹாச்ரிதா ஏதே ஸ்தூலாத்
பின்னஸ்ய மே நஹி ।

अस्थि-எலும்பு, मांस-மாம்ஸம், पुरीष-மலம், आन्त्र-குடல், चर्म-தோல், लोम-ரோமம் இவைகளோடு, समन्वितः-சேர்ந்ததாயும், अन्नादः - அன்னத்தை சாப்பிடுகிறதாயும், स्थूलदेहः-ஸ்தூலசரீரம், स्यात्-இருக்கும். अतः-அதிலிருந்து (வேறாக), अहं-நான், शुद्धचिद्घनः - கெட்டியான நிர்மலமான ஞானஸ்வரூபன். स्थूलदेहाश्रिताः-ஸ்தூலதேஹத்தை ஆசிரயித்திருக்கும், एते-இவைகள், स्थूलात् - ஸ்தூலத்திலிருந்து, भिन्नस्य - வேறுபட்ட, मे - எனக்கு, न हि - கிடையாது.

எலும்பு, மாம்ஸம், மலம், குடல், தோல், ரோமம், இவைகளோடு சேர்ந்ததாயும் அன்னத்தை சாப்பிடுகிறதாயும் ஸ்தூல தேஹம் இருக்கும். அதிலிருந்து (வேருக) நான் கெட்டியான நிர்மலமான ஞான ஸ்வரூபன். ஸ்தூல தேஹத்தை ஆசிரயித்திருக்கும் இவைகள் ஸ்தூலத்திலிருந்து வேறுபட்ட எனக்குக் கிடையாது.

लिङ्गं जडात्मकं नाहं चित्स्वरूपोऽहमद्वयः ॥ ३१ ॥

क्षुत्पिपासान्ध्यबाधिर्यकामक्रोधादयोऽखिलाः ।
लिङ्गदेहाश्रिता ह्येते नैवालिङ्गस्य मे विभोः ॥ ३२ ॥

லிங்கம் ஜடாத்மகம் நாஹம் சித்ஸ்வரூபோऽஹமத்வய: ॥

க்ஷுத்பிபாஸாந்த்ய பாதிர்ய காம க்ரோதாதயோऽகிலா: ।
லிங்க தேஹாச்ரிதா ஹ்யேதே நைவாலிங்கஸ்ய மே விபோ: ॥

**जडात्मकं**-ஜடஸ்வரூபமாயிருக்கும், **लिङ्गं**-(லிங்கம் என்கிற) ஸூக்ஷ்ம சரீரம், **अहं**-நான், **न**-அல்ல, **अहं**-நான் **चित्स्वरूपः**-ஞானஸ்வரூபன், **अद्वयः**-இரண்டற்றவன், **क्षुत्**-பசி, **पिपासा**-தாஹம், **आन्ध्य**-குருட்டுத்தனம், **बाधिर्य**-செவிட்டுத்தனம், **काम**-ஆசை, **क्रोध**-கோபம், **आदयः**-முதலான, **अखिलाः**-எல்லாம், **लिङ्गदेहाश्रिताः**-ஸூக்ஷ்ம சரீரத்தை ஆசிரயித்திருப்பவைகள். **एते हि**-இவைகள், **आलिङ्गस्य**-ஸூக்ஷ்மசரீரமில்லாத, **विभोः**-வியாபகனுன, **मे**-எனக்கு, **नैव**-கிடையவே கிடையாது.

ஜட ஸ்வரூபமாயிருக்கும் லிங்கம் என்கிற ஸூக்ஷ்ம சரீரம் நான் அல்ல. நான் ஞான ஸ்வரூபன், இரண்டற்றவன். பசி, தாஹம், குருட்டுத்தனம், செவிட்டுத்தனம், ஆசை, கோபம் முதலானவைகள் எல்லாம் ஸூக்ஷ்ம சரீரத்தை ஆசிரயித்திருப்பவைகள். ஸூக்ஷ்ம சரீரமில்லாத வியாபகனுன எனக்கு இவைகள் கிடையவே கிடையாது.

अनाद्यज्ञानमेवात्र कारणं देह उच्यते ।
नाहं कारणदेहोऽपि स्वप्रकाशो निरञ्जनः ॥ ३३ ॥

जडत्वप्रियमोदत्वधर्माः कारणदेहगाः ।
न सन्ति मम नित्यस्य निर्विकारस्वरूपिणः ॥ ३४ ॥

அநாத்யக்ஞானமேவாத்ர காரணம் தேஹ உச்யதே ।
நாஹம் காரண தேஹோऽபி ஸ்வப்ரகாஶோ நிரஞ்ஜன: ॥

ஜடத்வ ப்ரிய மோதத்வ தர்மா: காரண தேஹகா: ।
ந ஸந்தி மம நித்யஸ்ய நிர்விகார ஸ்வரூபிண: ॥

**अत्र**-இங்கே, **अनादि**-ஆதியில்லாத, **अज्ञानमेव**-அக்ஞானம்தான், **कारणं** - காரணமான, **देहः** - சரீரம் (என்று), **उच्यते**-சொல்லப்படுகிறது (அந்த) **कारणदेहः अपि** - காரண சரீரமும், **स्वप्रकाशः**-ஸ்வயம்பிரகாசமாய், **निरञ्जनः**-எவ்வித தோஷமுமில்லாத, **अहं**-நான், **न** - இல்லை. **कारणदेहगाः**-காரணதேஹத்திலுள்ள, **जडत्वप्रियमोदत्वधर्माः** -ஜடமாயிருக்கும் தன்மை, பிரியமாயிருக்கும் தன்மை, ஸந்தோஷமாயிருக்கும் தன்மை என்ற தர்மங்கள், **नित्यस्य** - நித்யனாய், **निर्विकारस्वरूपिणः**-ஒருவித மாறுதலுமடையாத் தன்மையுடையவனாய் இருக்கும், **मम**-எனக்கு, **न सन्ति**-கிடையாது.

இங்கே ஆதியில்லாத அக்ஞானம்தான் காரணசரீரம் என்று சொல்லப்படுகிறது. அந்தக் காரண சரீரமும் ஸ்வயம் பிரகாசமாய் எவ்வித தோஷமுமில்லாத நான் இல்லை. காரண தேஹத்திலுள்ள ஜடமாயிருக்கும் தன்மை, பிரியமாயிருக்கும் தன்மை, ஸந்தோஷமாயிருக்கும் தன்மை என்ற தர்மங்கள் நித்யனாய் எவ்வித மாறுதலுமடையாத் தன்மை உடையவனுமாய் இருக்கும் எனக்குக் கிடையாது.

[இவ்விதமாக 30 முதல் 34 சுலோகம் வரையில் ஆத்மா, ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்கிற மூன்று சரீரங்களுடைய தன்மையிலிருந்து வேறுபட்ட தன்மையுடையதாயிருப்பதால் அந்த சரீரங்கள் ஆத்மாவல்ல என்று நிர்வசனம் செய்யப்பட்டது இனி, இவ்விதம் மூன்றுவித சரீரங்களுக்கும் அப்பால்பட்ட ஆத்மாவே பிரஹ்மம் என்று சொல்லும்போது சிலர் ஜீவனும் ஈசுவரனும் எப்படி ஒன்றாக இருக்க முடியு

மென்று ஆக்ஷேபிக்கிருர்கள். அதற்காக ஜீவனுடைய ஸ்வரூபத்தையும் ஈசுவரனுடைய ஸ்வரூபத்தையும் நன்கு அலசிக்காட்டி இரண்டுமே சுத்தப் பிரஹ்மத்தில் கல்பிக்கப் பட்டவை யென்பதை எடுத்துக் காட்டுகிருர்.] (33-34)

**जीवाद्भिन्नः परेशोऽस्ति परेशत्वं कुतस्तव ।**
**इत्यज्ञजनसंवादविचारः क्रियतेऽधुना ॥ ३५ ॥**

ஜீவாத் பின்ன: பரேஶோऽஸ்தி பரேஶத்வம் குதஸ்தவ ।
இத்யக்ஞ ஜன ஸம்வாத விசார: க்ரியதேऽதுநா ॥

**जीवात्** – ஜீவனிடமிருந்து, **भिन्नः** – வேறுபட்டவராக, **परेशः**-பரமேசுவரர், **अस्ति**–இருக்கிருர். **तव**–உனக்கு, **परेशत्वं**–பரமேசுவரராயிருக்கும் தன்மை, **कुतः**–எப்படி (வரும்)? **इति**–என்று, **अज्ञजन**–அறிவில்லாத ஜனங்களுடைய, **संवाद**-பேச்சு விஷயமாய், **विचारः** – விசாரமானது, **अधुना** – இப்பொழுது, **क्रियते**-செய்யப்படுகிறது.

ஜீவனிடமிருந்து வேறுபட்டவராக பரமேசுவரர் இருக்கிருர். உனக்கு பரமேசுவரராயிருக்கும் தன்மை எப்படி வரும்? என்று அறிவில்லாத ஜனங்களுடைய பேச்சு விஷயமாய் விசாரமானது இப்பொழுது செய்யப்படுகிறது. (35)

**अधिष्ठानं चिदाभासो बुद्धिरेतत् त्रयं यदा ।**
**अज्ञानादेकवद्भाति जीव इत्युच्यते तदा ॥ ३६ ॥**

அதிஷ்டானம் சிதாபாஸோ புத்திரேதத் த்ரயம் யதா ।
அக்ஞானாதேகவத் பாதி ஜீவ இத்யுச்யதே ததா ॥

**अधिष्ठानं**–எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமாயுள்ள சுத்த சைதன்யம், **चिदाभासः**–சைதன்யத்தின் தோற்றம், **बुद्धिः**-புத்தி ஆகிய, **एतत्**–இந்த, **त्रयं**-மூன்றும், **यदा**-எப்பொழுது, **अज्ञानात्** -அறியாமையினுல், **एकवत्** – ஒன்ருயிருப்பது போலவே, **भाति**–தோன்றுகிறதோ, **तदा**–அப்பொழுது, **जीवः** ஜீவன், **इति**–என்று, **उच्यते**–சொல்லப்படுகிறது.

எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமாயுள்ள சுத்த சைதன்யம், சைதன்யத்தின் தோற்றம், புத்தி ஆகிய இந்த மூன்றும் எப்பொழுது அறியாமையினால் ஒன்றாயிருப்பது போலவே தோன்றுகிறதோ, அப்பொழுது ஜீவன் என்று சொல்லப்படுகிறது.

[ஸூர்ய கிரணத்திற்கு நேரே கண்ணாடியைக் காட்டினால் அதில் ஸூர்யனுடைய பிரதிபிம்பம் விழும். அதுவும் பிரகாசமாயிருக்கும். அந்தப் பிரகாசத்தை வீட்டிற்குள் விழச்செய்தால் வீட்டிலுள்ள பதார்த்தங்களை பிரகாசிக்கும்படிச் செய்யும். இவ்விதமாக வீட்டிலுள்ள பதார்த்தங்களை எடுத்துக் காட்டுவது ஸூர்யன், ஸூர்யனுடைய பிரதிபிம்பம், கண்ணாடி, ஆகியமூன்றும் சேர்ந்ததேயாகும். இதேமாதிரி சுத்த சைதன்யம், புத்தி, புத்தியில் பிரதிபிம்பிக்கும் சைதன்யத்தோற்றம் இம் மூன்றும் சேர்ந்து உலகத்தை அறிகிறது. இந்த மூன்றும் சேர்ந்து தான் ஜீவன்.] (36)

अधिष्ठानं न जीवः स्यात् प्रत्येकं निर्विकारतः ।
अवस्तु स्याच्चिदाभासो नास्ति तस्य च जीवता ॥ ३७ ॥

प्रत्येकं जीवता नास्ति बुद्धेरपि जडत्वतः ।
जीव आभासकूटस्थबुद्धित्रयमतो भवेत् ॥ ३८ ॥

அதிஷ்டானம் ந ஜீவ: ஸ்யாத் ப்ரத்யேகம் நிர்விகாரத: ।
அவஸ்து ஸ்யாத் சிதாபாஸோ நாஸ்தி தஸ்ய ச ஜீவதா ॥

ப்ரத்யேகம் ஜீவதா நாஸ்தி புத்தேரபி ஜடத்வத: ।
ஜீவ ஆபாஸ கூடஸ்த்த புத்தி த்ரயமதோ பவேத் ॥

**अधिष्ठानं**-அதிஷ்டானமான சுத்த சைதன்யம், **निर्विकारतः** மாறும் தன்மையற்றதால், **प्रत्येकं**-தனித்து, **जीवः**-ஜீவனாக, **न स्यात्**-இருக்கமுடியாது. **चिदाभासः**-(புத்தியில் பிரதிபிம்பிக்கும்) சைதன்யத்தின்தோற்றம், **अवस्तु**-வாஸ்தவமாய் இல்லாத பதார்த்தமே, **स्यात्**-ஆகும். **तस्य च** - அதற்கும்,

जीवत्वं - ஜீவனாயிருக்கும் தன்மை, नास्ति - கிடையாது. जडत्वतः-ஜடமாயிருக்கும் தன்மையுடையதால், बुद्धेः अपि-புத்திக்கும், प्रत्येकं-தனித்து, जीवता-ஜீவனாயிருக்கும் தன்மை नास्ति-கிடையாது அतः-ஆகையினால், आभास-(புத்தியில் தோன்றும்) சைதன்ய ஆபாஸம், कूटस्थ-(நிர்விகாரமாயுள்ள) சுத்த சைதன்யம், बुद्धि-புத்தி ஆகிய, त्रयं-மூன்றும் சேர்ந்து தான், जीवः-ஜீவனாக, भवेत्-இருக்கமுடியும்.

அதிஷ்டானமான சுத்த சைதன்யம் மாறும் தன்மையற்றதால் தனித்து ஜீவனாக இருக்கமுடியாது. (புத்தியில் பிரதிபிம்பிக்கும்) சைதன்யத்தின் தோற்றம் வாஸ்தவமாக இல்லாத பதார்த்தமேயாகும்; அதற்கும் ஜீவனாயிருக்கும் தன்மை கிடையாது. ஜடமாயிருக்கும் தன்மையுடையதால், புத்திக்கும் தனித்து ஜீவனாயிருக்கும் தன்மை கிடையாது. ஆகையினால் (புத்தியில் தோன்றும்) சைதன்ய ஆபாஸம், (நிர்விகாரமாயுள்ள) சுத்த சைதன்யம், புத்தி ஆகிய மூன்றும் சேர்ந்துதான் ஜீவனாக இருக்கமுடியும்.

[ஆகாசத்திலுள்ள ஸூர்யன் இருட்டறைக்குள் பிரகாசிக்காததினால் அங்குள்ள பதார்த்தங்களை பிரகாசிக்கும்படி செய்பவர் ஸூர்யன் அல்ல. கண்ணாடி ஜடமானதினால் அது மற்றொன்றை பிரகாசப்படுத்த முடியாது. கண்ணாடியிலுள்ள ஸூர்யப் பிரதிபிம்பம் வெறும் தோற்றமே தவிர ஒரு பதார்த்தமாக இல்லாததினால் அதற்கும் சக்தியில்லை. ஆகையால் பிரகாசப்படுத்துவது எது என்றால், ஸூர்யன், கண்ணாடி, கண்ணாடியிலுள்ள ஸூர்யப் பிரதிபிம்பம் ஆகிய மூன்றும் சேர்ந்துள்ளதுதான் என்று சொல்லவேண்டியிருக்கிறது. ஜீவனுடைய தன்மையும் அவ்விதமேதான். தனித்தனியாகப் பார்த்தால், சுத்த சைதன்யமோ, புத்தியோ, புத்தியிலுள்ள சைதன்ய பிரதிபிம்பமோ, யாதொன்றும் ஜீவன் ஆகமாட்டாது]. (37–38)

मायाऽऽभासो विशुद्धात्मा त्रयमेतन्महेश्वरः ।
मायाभासोऽप्यवस्तुत्वात् प्रत्येकं नेश्वरो भवेत् ॥ ३९ ॥

पूर्णत्वान्निर्विकारत्वाद्विशुद्धात्मा न चेश्वरः ।
जडत्वहेतोर्मायायामीश्वरत्वं नु दुर्घटम् ॥ ४० ॥

तस्मादेतत् त्रयं मिथ्या तदर्थो नेश्वरो भवेत् ।

மாயாऽऽபாஸோ விசுத்தாத்மா த்ரயமேதன் மஹேச்வர: ।
மாயாऽऽபாஸோऽப்யவஸ்துத்வாத் ப்ரத்யேகம்
நேச்வரோ பவேத் ॥

பூர்ணத்வாத் நிர்விகாரத்வாத் விசுத்தாத்மா ந சேச்வர: ।
ஜடத்வ ஹேதோர் மாயாயாமீச்வரத்வம் நு துர்கடம் ॥

தஸ்மாதேதத் த்ரயம் மித்யா ததர்த்தோ நேச்வரோ பவேத் ।

माया-மாயை, आभासः-(மாயையில் பிரதிபலிக்கும்) சைதன்யத்தின் தோற்றம், विशुद्धात्मा-சுத்த சைதன்யம் ஆகிய, एतत्-இந்த, त्रयं-மூன்றும் சேர்ந்து, महेश्वरः-பரமேசுவரர். (அவைகளில்), मायाभासः अपि-மாயையில் பிரதிபலிக்கும் தோற்றம், अवस्तुत्वात्-வாஸ்தவத்தில் ஒரு பதார்த்தமாக இல்லாததினுல், प्रत्येकं-தனித்து, ईश्वरः-ஈசுவரனுக, न भवेत्-இருக்கமுடியாது. विशुद्धात्मा च-சுத்த சைதன்யமும், पूर्णत्वात्-எங்கும் நிறைந்து இருப்பதினுலும், निर्विकारत्वात्-மாறுதலற்ற தன்மையுடன் கூடியிருப்பதினுலும், ईश्वरः-ஈசுவரன், न-இல்லை. मायायां नु-மாயையிலோ, जडत्वहेतोः-ஜடத் தன்மை இருக்கும் காரணத்தினுல், ईश्वरत्वं-ஈசுவரத்தன்மை, दुर्घटम्-பொருந்தாது. तस्मात्-ஆகையினுல், एतत्-இந்த, त्रयं-மூன்றும், मिथ्या-வாஸ்தவமல்ல. तदर्थः-அவைகளின் பொருள், ईश्वरः-ஈசுவரனுக, न भवेत्-இருக்கமுடியாது.

மாயை, (மாயையில் பிரதிபலிக்கும்) சைதன்யத்தின் தோற்றம், சுத்த சைதன்யம், ஆகிய இந்த மூன்றும் சேர்ந்து பரமேசுவரர். (அவைகளில்) மாயையில் பிரதிபலிக்கும் தோற்றம் வாஸ்தவத்தில் ஒரு பதார்த்தமேயில்லாததினுல் தனித்து ஈசுவரனுக இருக்க முடியாது.

சுத்த சைதன்யமும் எங்கும் நிரம்பி யிருப்பதினலும் மாறுதலற்ற தன்மையுடன் கூடியிருப்பதினலும் ஈசுவரன் இல்லை. மாயையிலோ ஜடத் தன்மை இருக்கும் காரணத்தினல் ஈசுவரத் தன்மை பொருந்தாது. ஆகையினல் இந்த மூன்றும் வாஸ்தவமல்ல அவைகளின் பொருள் ஈசுவரனுக இருக்க முடியாது.

[ஜீவனிடத்தில் எப்படி மூன்று அம்சங்களோ, அப்படியே ஈசுவரனிடத்திலும் மாயை, சுத்த சைதன்யம், மாயையில் சுத்த சைதன்யத்தின் பிரதிபிம்பம், ஆகிய மூன்று அம்சங்கள் இருக்கின்றன. அவைகள் தனித் தனியே ஈசுவரனுகமாட்டா. அக்ஞானத்தினல் மூன்றையும் சேர்த்து ஒன்ருகப் பார்க்கும்போதுதான் ஈசுவரன்.]

**इति जीवेश्वरौ भातः स्वाज्ञानान्न हि वस्तुतः ॥ ४१ ॥**

**घटाकाशमठाकाशौ महाकाशे प्रकल्पितौ ।**
**एवं मयि चिदाकाशे जीवेशौ परिकल्पितौ ॥ ४२ ॥**

இதி ஜீவேச்வரௌ பாதः ஸ்வாக்ஞாநாத் நஹி வஸ்துதः ॥
கடாகாஶ மடாகாஶௌ மஹாகாஶே ப்ரகல்பிதௌ ।
ஏவம் மயி சிதாகாஶே ஜீவேஶௌ பரிகல்பிதௌ ॥

**इति**-இவ்விதமாக, **स्वाज्ञानात्**-ஆத்மதத்துவத்தை அறியாததினல், **जीवेश्वरौ**-ஜீவனும் ஈசுவரனும், **भातः**-தோன்றுகிருர்கள். **वस्तुतः**-வாஸ்தவமாக (இருவரும்) **न हि**-கிடையாது. **महाकाशे**-வியாபகமாயிருக்கிற பெரிய ஆகாசத்தில், **घटाकाश**-குடத்திலுள்ள ஆகாசம், **मठाकाशौ**-மடத்திலுள்ள ஆகாசம் என்ற இரண்டும், **प्रकल्पितौ**-கல்பிக்கப்பட்டவைகளேயாகும். **एवं**-அப்படியே, **चिदाकाशे**-சைதன்ய ஆகாசமாயிருக்கிற, **मयि**-என்னிடத்தில், **जीवेशौ**-ஜீவனும் ஈசுவரனும், **परिकल्पितौ**-கல்பிக்கப்பட்டவைகள்.

இவ்விதமாக ஆத்ம தத்வத்தை அறியாததினல் ஜீவனும் ஈசுவரனும் தோன்றுகிருர்கள், வாஸ்தவமாக

(இருவரும்) கிடையாது. வியாபகமாயிருக்கிற பெரிய ஆகாசத்தில் குடத்திலுள்ள ஆகாசம், மடத்திலுள்ள ஆகாசம் என்ற இரண்டும் கல்பிக்கப்பட்டவைகளே ஆகும். அப்படியே சைதன்ய ஆகாசமாயிருக்கிற என்னிடத்தில் ஜீவனும் ஈசுவரனும் கல்பிக்கப்பட்டவர்கள்.

[ஸர்வ வியாபகமாயிருக்கிற ஆகாசத்தில் மத்தியில் ஒரு வீட்டைக் கட்டினால் வீட்டிலுள்ள ஆகாசம் என்றும், குடத்தை வைத்தால் குடத்திலுள்ள ஆகாசம் என்றும் வியவஹாரம் ஏற்பட்டு விடுகிறது. அப்படியே மாயை என்கிற உபாதியை வைத்து ஈசுவரன் என்றும், அந்தக் கரணம் என்கிற உபாதியை வைத்து ஜீவன் என்றும் வியவஹாரம் ஏற்படுகிறது. இவ்விரு உபாதிகளையும் விலக்கிப் பார்த்தால் இரண்டும் சுத்த சைதன்யமேயாகும்.] (41-42)

मायातत्कार्यविलये नेश्वरत्वं न जीवता ।
ततः शुद्धचिदेवाहं चिद्व्योम निरुपाधितः ॥ ४३ ॥

மாயா தத்கார்ய விலயே நேச்வரத்வம் ந ஜீவதா ।
தத: ஶுத்த சிதேவாஹம் சித்வ்யோம நிருபாதித: ॥

माया-மாயையும், तत्कार्य-அதிலிருந்து உண்டானவைகளும், विलये-மறைந்துவரும்போது, ईश्वरत्वं-ஈசுவரனாக இருக்கும் தன்மை, न-கிடையாது. जीवता-ஜீவனாக இருக்கும் தன்மையும், न-கிடையாது. ततः-ஆகையினால், अहं-நான், निरुपाधितः-உபாதியற்றவனாயிருப்பதால், चिद्व्योम-சைதன்ய ஆகாசமான, शुद्धचित् एव-சுத்தமான சைதன்யமே தான்.

மாயையும் அதிலிருந்து உண்டானவைகளும் மறைந்து விடும்போது ஈசுவரனாயிருக்கும் தன்மை கிடையாது, ஜீவனாக இருக்கும் தன்மையும் கிடையாது. ஆகையினால், நான் உபாதியற்றவனாயிருப்பதால் சைதன்ய ஆகாசமான சுத்தமான சைதன்யமே. (43)

सत्यचिद्घनमनन्तमद्वयं सर्वदृश्यरहितं निरामयम् ।
यत् पदं विमलमद्वयं शिवं तत् सदाऽहमिति मौनमाश्रये ॥

ஸத்ய சித்கனமநந்தமத்வயம்
ஸர்வ த்ருச்ய ரஹிதம் நிராமயம் ।
யத்பதம் விமலமத்வயம் ஶிவம்
தத் ஸதாऽஹமிதி மௌனமாச்ரயே ॥

**सत्यचिद्घनं**-ஸத்யமாகவும் சைதன்யக்கட்டியாகவும், **अनन्तं**-முடிவற்றதாகவும், **अद्वयं**-இரண்டற்றதாகவும், **सर्वदृश्यरहितं**-அனுபவிக்கப்படும் தன்மையுள்ள எல்லா விஷயங்களிலிருந்தும் விடுபட்டதாகவும், **निरामयम्**-எவ்வித தோஷமுமற்றதாகவும், **विमलं**-நிர்மலமாகவும், **अद्वयं**-ஒன்ருகவும், **शिवं**-மங்களமாகவும், **यत्**-எந்த, **पदं**-நிலை(இருக்கிறதோ), **तत्**-அதுவாகவே, **सदा**-எப்பொழுதும், **अहं**-நான் (இருக்கிறேன்), **इति**-என்பதினுல், **मौनं**-மௌனத்தை, **आश्रये**-ஆசிரயிக்கிறேன்.

ஸத்யமாகவும் சைதன்யக்கட்டியாகவும் முடிவற்றதாகவும் இரண்டற்றதாகவும் அனுபவிக்கப்படும் தன்மையுள்ள எல்லா விஷயங்களிலிருந்தும் விடுபட்டதாகவும் எவ்வித தோஷமுமற்றதாகவும் நிர்மலமாகவும் ஒன்ருகவும் மங்களமாகவும் எந்த நிலை (இருக்கிறதோ), அதுவாகவே எப்பொழுதும் நான் (இருக்கிறேன்), என்பதினுல் மௌனத்தை ஆசிரயிக்கிறேன். (44)

पूर्णमद्वयमखण्डचेतनं विश्वभेदकलनादिवर्जितम् ।
अद्वितीयपरसंविदंशकं तत् सदाऽहमिति मौनमाश्रये ॥ ४५ ॥

பூர்ணமத்வயமகண்ட சேதனம்
விச்வ பேத கலனுதி வர்ஜிதம் ।
அத்விதீய பரஸம்விதம்ஶகம்
தத் ஸதாऽஹமிதி மௌனமாச்ரயே ॥

**पूर्णं**-எங்கும் நிறைந்ததும், **अद्वयं**-இரண்டற்றதும், **अखण्डचेतनं**-துண்டுபடாத சைதன்யமும், **विश्वभेदकलनादिवर्जितम्**-ஜகத்திலுள்ள வேற்றுமைத்தோற்றம் முதலியவையற்றதும், **अद्वितीयपरसंविदंशकं**-இரண்டற்ற மேலான ஞானஸ்வரூபத்தின் அம்சமும் (எதுவோ), **तत्**-அதுவே, **सदा**-எப்பொழுதும், **अहं**-நான், **इति**-என்ற காரணத்திஞல், **मौनं**-மௌனத்தை, **आश्रये**-ஆசிரயிக்கிறேன்.

எங்கும் நிரம்பியதும் இரண்டற்றதும் துண்டுபடாத சைதன்யமும் ஜகத்திலுள்ள வேற்றுமைத்தோற்றம் முதலியவையற்றதும் இரண்டற்ற மேலான ஞானஸ்வரூபத்தின் அம்சமும் (எதுவோ) அதுவே எப்பொழுதும் நான் என்ற காரணத்திஞல் மௌனத்தை ஆசிரயிக்கிறேன்.

[உபாதிகளிலிருந்து விலகியிருக்கும் சுத்த சைதன்யமே நான் என்று உணர்ந்த ஞானி தன்னுடைய நிலையை அனுபவித்தே தெரிந்துகொள்ளவேண்டுமேதவிர எடுத்துச் சொல்லக்கூடியதில்லையானதால் மௌனமாகத்தான் இருக்கவேண்டியிருக்கிறது]. (45)

जन्ममृत्युसुखदुःखवर्जितं जातिनीतिकुलगोत्रदूरगम् ।
चिद्विवर्तजगतोऽस्य कारणं तत् सदाऽहमिति मौनमाश्रये ॥

ஜன்மமிருத்யு ஸுக துக்க வர்ஜிதம்
ஜாதி நீதி குல கோத்ர தூரகம் ।
சித்விவர்த்த ஜகதோऽஸ்ய காரணம்
தத் ஸதாऽஹமிதி மௌனமாச்ரயே ॥

**जन्ममृत्युसुखदुःखवर्जितं**-பிறவி, சாவு, ஸுகம், துக்கம், இவையற்றதும், **जातिनीतिकुलगोत्रदूरगम्**-ஜாதி, நீதி, குலம், கோத்திரம், இவைகளுக்கு வெகுதூரத்திலிருப்பதும், **अस्य**-இந்த, **चिद्विवर्तजगतः**-சைதன்யத்தின் வெறும் தோற்றமாயுள்ள ஜகத்திற்கு, **कारणं**-காரணமும் (எதுவோ) **तत्**-அதுவே, **सदा**-எப்பொழுதும், **अहं**-நான், **इति**-என்ற காரணத்திஞல், **मौनं**-மௌனத்தை, **आश्रये**-ஆசிரயிக்கிறேன்.

பிறவி, சாவு, ஸுகம், துக்கம், இவையற்றதும், ஜாதி, நீதி, குலம், கோத்திரம், இவைகளுக்கு வெகுதூரத்தில் இருப்பதும், சைதன்யத்தின் வெறும் தோற்றமாயுள்ள ஜகத்திற்குக் காரணமும் (எதுவோ), அதுவே எப்பொழுதும் நான் என்ற காரணத்தினால் மௌனத்தை ஆசிரயிக்கிறேன்.

[சுத்த சைதன்யத்தைப் பற்றி நேரிடையாகச் சொல்ல முடியாமல் போனாலும் ஜகத்தைக் கொண்டு சொல்லலாமே என்றால், அது ஸாத்யமில்லை. ஜகத்திலுள்ள பிறவி, சாவு, ஸுகம், துக்கம், ஜாதி, நீதி, குலம் கோத்திரம் இவை எதுவும் இல்லாமலிருக்கும் பதார்த்தத்தை எப்படி வர்ணிக்க முடியும்? ஜகத்தே வெறும் தோற்றமாயிருப்பதால் அதைக் கொண்டு அதற்கும் ஆதாரமாயிருக்கும் சைதன்யத்தின் வாஸ்தவ ஸ்வரூபத்தை எப்படிக் காட்டமுடியும்? கயிறு என்றால் என்னவென்று கேட்கிறவனுக்கு இருட்டு வேளையில் பாம்பாகத் தோன்றுகிறதே அது என்று பதில் சொன்னால் கயிற்றின் ஸ்வரூபத்தைச் சொன்னதாக ஆகுமா? ஆகையால் மௌனமாயிருப்பதுதான் நியாயம்.]

**उलूकस्य यथा भानावन्धकारः प्रतीयते ।**
**स्वप्रकाशे परानन्दे तमो मूढस्य भासते ॥ ४७ ॥**

உலூகஸ்ய யதா பாநாவந்தகார: ப்ரதீயதே ।
ஸ்வப்ரகாஶே பராநந்தே தமோ மூடஸ்ய பாஸதே ॥

**यथा**-எப்படி, **भानौ**-ஸூரியனிடம் (ஸூரியன் பிரகாசிக்கிற ஸமயத்தில்), **उलूकस्य**-கோட்டானுக்கு, **अन्धकारः**-இருட்டே, **प्रतीयते**-தெரிகிறதோ, (அப்படியே) **परानन्दे**-மேலான ஆனந்தஸ்வரூபமாய், **स्वप्रकाशे**-ஸ்வயம்பிரகாசமான ஆத்மாவினிடம் (சைதன்யம் பிரகாசித்துக்கொண்டேயிருக்கும்போது), **मूढस्य** மூடனுக்கு, **तमः**-இருட்டுதான், **भासते**-தோன்றுகிறது.

எப்படி ஸூர்யன் பிரகாசிக்கிற ஸமயத்தில் கோட்டானுக்கு இருட்டே தெரிகிறதோ, (அப்படியே) மேலான

ஆனந்த ஸ்வரூபமாய் ஸ்வயம்பிரகாசமாயிருக்கிற ஆத்மாவில் (சைதன்யம் பிரகாசித்துக்கொண்டே யிருக்கும் போது) மூடனுக்கு இருட்டுத்தான் தெரிகிறது.

[43 முதல் 46 வரை சுலோகங்களில் உபாதிகளிலிருந்து விலகின சுத்த சைதன்யத்தின் ஸ்வரூபத்தைக் காட்டியதிலிருந்து அது எல்லோருக்கும் தானுகவே தெளிவாகத் தெரியவேண்டியதுதானே என்று கேட்கலாம். தெரிய வேண்டியது என்பது வாஸ்தவம். ஆனுல் அறிய வேண்டிய கருவியான புத்தியில் தோஷமிருக்கும்போது எப்படி அறியமுடியும் என்று இந்த சுலோகத்திலும் அடுத்த சுலோகத்திலும் ஸமாதானம் சொல்கிருர்.] (47)

यथा दृष्टिनिरोधार्तः सूर्यो नास्तीति मन्यते ।
तथाऽज्ञानावृतो देही ब्रह्म नास्तीति मन्यते ॥ ४८ ॥

யதா த்ருஷ்டி நிரோதார்த: ஸூர்யோ நாஸ்தீதி மன்யதே ।
ததாऽக்ஞாணுவ்ருதோ தேஹீ ப்ரஹ்ம நாஸ்தீதி மன்யதே ॥

**यथा**-எப்படி, **दृष्टिनिरोधार्तः**-கண்பார்வை தடைபட்டு சிரமப்படுகிறவன், **सूर्यः**-ஸூர்யன், **नास्ति**-இல்லை, **इति**-என்று, **मन्यते**-நினைக்கிருனே, **तथा**-அப்படியே, **अज्ञानावृतः**-அக்ஞானத்திஞல் மூடப்பட்டிருக்கும், **देही**-ஜீவன், **ब्रह्म**-பிரஹ்மமானது, **नास्ति**-இல்லை, **इति**-என்று, **मन्यते**-எண்ணுகிருன்.

எப்படிக் கண் பார்வை தடைபட்டுச் சிரமப்படுகிறவன் ஸூர்யன் இல்லையென்று நினைக்கிருனே, அப்படியே அக்ஞானத்திஞல் மூடப்பட்டிருக்கும் ஜீவன், பிரஹ்மமானது இல்லையென்று எண்ணுகிருன். (48)

यथाऽमृतं विषाद्भिन्नं विषदोषैर्न लिप्यते ।
न स्पृशामि जडाद्भिन्नो जडदोषान् प्रकाशयन् ॥ ४९ ॥

யதாऽம்ருதம் விஷாத் பின்னம் விஷ தோஷைர் ந லிப்யதே ।
ந ஸ்ப்ருசாமி ஜடாத் பின்னோ ஜட தோஷான் ப்ரகாசயன் ॥

**यथा**-எப்படி, **अमृतं**-அமிருதமானது, **विषात्**-விஷத்திலிருந்து, **भिन्नं**-வேறுபட்டதாயிருந்து, **विषदोषैः**-விஷத்தினுடைய தோஷங்களினால், **न लिप्यते**-தூஷிக்கப்படுகிறதில்லையோ (அப்படியே), **जडात्**-ஜடமான பதார்த்தத்திலிருந்து, **भिन्नः**-வேறுபட்டு, **जडदोषान्**-ஜட பதார்த்தங்களின் தோஷங்களை, **प्रकाशयन्**-விளக்கிக்காட்டிக்கொண்டு இருக்கும் நான் (அவைகளை), **न स्पृशामि**-தொடுவதில்லை.

எப்படி விஷத்திலிருந்து வேறுபட்டதாக இருக்கும் அமிருதமானது விஷத்தினுடைய தோஷங்களினால் தூஷிக்கப்படுகிறதில்லையோ, (அப்படியே) ஜடமான பதார்த்தத்திலிருந்து வேறுபட்டு ஜட பதார்த்தங்களின் தோஷங்களை விளக்கிக் காட்டிக்கொண்டு இருக்கும் நான் அவைகளைத் தொடுவதில்லை. (49)

**स्वल्पाऽपि दीपकणिका बहुलं नाशयेत् तमः ।**
**स्वल्पोऽपि बोधो महतीमविद्यां शमयेत् तथा ॥ ५० ॥**

ஸ்வல்பாऽபி தீபகணிகா பஹுளம் நாஶயேத் தம: ।
ஸ்வல்போऽபி போதோ மஹதீமவித்யாம் ஶமயேத் ததா ॥

**दीपकणिका**-சிறிய தீபம், **स्वल्पा अपि**-வெகுசிறியதாயிருந்தாலும், **बहुलं**-மிகவும் அதிகமான, **तमः**-இருட்டை, **नाशयेत्**-போக்கடித்துவிடும். **तथा**-அப்படியே, **बोधः**-ஞானமானது, **स्वल्पोऽपि**-வெகுசிறியதாயிருந்தாலும், **महतीं**-பெரியதான, **अविद्यां**-அஞ்ஞானத்தை, **शमयेत्**-போக்கடித்துவிடும்.

சிறிய தீபம் வெகுசிறியதாயிருந்தாலும் மிகவும் அதிகமான இருட்டைப் போக்கடித்துவிடும். அப்படியே ஞானமானது வெகுசிறியதாயிருந்தாலும் பெரியதான அஞ்ஞானத்தைப்போக்கடித்துவிடும்.

[அநாதிகாலமாக இருந்துவரும் அஞ்ஞானம் மிகவும் திடப்பட்டிருப்பதால் அதை இப்பொழுது புதிதாக வந்துள்ள ஞானம் போக்கடிக்க முடியுமா என்ற

ஸந்தேஹத்தை நிவிருத்தி செய்து வைப்பதற்காக இந்த தீப திருஷ்டாந்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. பூமியை ஸ்ருஷ்டிக்கும் காலத்தில் ஏற்பட்ட மலையின் குகையிலுள்ள இருட்டு வெகுநாள்பட்டதென்பது வாஸ்தவம்; ஆனாலும் இப்பொழுது ஒரு சிறிய விளக்கை அங்குகொண்டுபோனாலும் அந்த இருட்டு விலகுவதில் லையா என்கிறார்.] (50)

**चिद्रूपत्वान्न मे जाड्यं सत्यत्वान्नानृतं मम ।**
**आनन्दत्वान्न मे दुःखमज्ञानाद्भाति तत् त्रयम् ॥ ५१ ॥**

*சித்ரூபத்வாத் ந மே ஜாட்யம் ஸத்யத்வாத் நாந்ருதம் மம ।*
*ஆனந்தத்வாத் ந மே துக்கமஜ்ஞாநாத் பாதி தத் த்ரயம் ॥*

**चिद्रूपत्वात्**-ஞானஸ்வரூபனாயிருப்பதினால், **मे**-எனக்கு, **जाड्यं**-ஜடத்தன்மை, **न**-கிடையாது. **सत्यत्वात्**-ஸத்ய ஸ்வரூபனாயிருப்பதினால், **मम**-எனக்கு (என்னிடத்தில்) **अनृतं**-பொய், **न**-கிடையாது. **आनन्दत्वात्**-ஆனந்தஸ்வரூபியான தினால், **मे**-எனக்கு, **दुःखं**-துக்கம், **न**-கிடையாது. **तत्**-அந்த, **त्रयं**-மூன்றும், **अज्ञानात्**-அக்ஞானத்தினால்தான், **भाति**-தோன்றுகிறது.

ஞானஸ்வரூபனாயிருப்பதினால் எனக்கு ஜடத்தன்மை கிடையாது. ஸத்யஸ்வரூபனாயிருப்பதினால் எனக்கு (என்னிடத்தில்) பொய் கிடையாது. ஆனந்தஸ்வரூபியான தினால் எனக்கு துக்கம் கிடையாது. அந்த மூன்றும் அக்ஞானத்தினால்தான் தோன்றுகிறது. (51)

**कालत्रये यथा सर्पो रज्जौ नास्ति तथा मयि ।**
**अहङ्कारादि देहान्तं जगन्नास्त्यहमद्वयः ॥ ५२ ॥**

*காலத்ரயே யதா ஸர்போ ரஜ்ஜௌ நாஸ்தி ததா மயி ।*
*அஹங்காராதி தேஹாந்தம் ஜகந்நாஸ்த்யஹமத்வய: ॥*

**यथा**-எப்படி, **कालत्रये**-(சென்றகாலம், நிகழ்காலம், வரும் காலம் என்ற) மூன்று காலங்களிலும், **रज्जौ**-கயிற்றில், **सर्पः**-

பாம்பு, नास्ति-கிடையவே கிடையாதோ, तथा-அப்படியே, मयि-என்னிடத்தில், अहंकारादि-அஹங்காரம் முதல், देहान्तं-சரீரம்வரையுள்ள, जगत्-ஜகத்தானது, नास्ति-கிடையாது. अहं-நான், अद्वयः-இரண்டற்றவன்.

எப்படி (சென்றகாலம், நிகழ்காலம், வரும்காலம் என்ற) மூன்று காலங்களிலும் கயிற்றில் பாம்பு கிடையவே கிடையாதோ, அப்படியே என்னிடத்தில் அஹங்காரம் முதல் சரீரம்வரையுள்ள ஜகத்தானது கிடையாது. நான் இரண்டற்றவன். (52)

भानौ तमःप्रकाशत्वं नाङ्गीकुर्वन्ति सज्जनाः ।
तमस्तत्कार्यसाक्षीति भ्रान्तबुद्धिरहो मयि ॥ ५३ ॥

பானௌ தம:ப்ரகாஶத்வம் நாங்கீகுர்வந்தி ஸஜ்ஜநா: ।
தமஸ்தத்கார்ய ஸாக்ஷீதி ப்ராந்த புத்திரஹோ மயி ॥

भानौ-ஸூர்யனிடத்தில், तमःप्रकाशत्वं-இருட்டை பிரகாசிக்கும் தன்மை இருப்பதாக, सज्जनाः-அறிவாளிகள், न अङ्गीकुर्वन्ति-ஒப்புக்கொள்ளுவதில்லை. (ஆகையால்) तमस्तत्कार्यसाक्षी-அக்ஞானத்தையும் அதன் கார்யங்களையும் நேரில் பார்த்துக்கொண்டிருப்பவன், इति-என்று, मयि-என்னிடத்தில், भ्रान्तबुद्धिः-நினைப்பது பிராந்தியேயாகும். अहो-இது வெகு ஆச்சர்யம்.

ஸூர்யனிடத்தில் இருட்டைப் பிரகாசிக்கும் தன்மை இருப்பதாக அறிவாளிகள் ஒப்புக்கொள்வதில்லை. (ஆகையால்) அக்ஞானத்தையும் அதன் கார்யங்களையும் நேரில் பார்த்துக்கொண்டிருப்பவன் என்று என்னிடத்தில் நினைப்பது பிராந்தியேயாகும். இது வெகு ஆச்சர்யம்.

[ஞானஸ்வரூபனான ஆத்மாவும் அக்ஞான கார்யமான ஜடப்பிரபஞ்சமும் பரஸ்பரம் விரோதமாயிருப்பதால் அவை இரண்டிற்கும் எவ்வித ஸம்பந்தமும் இருக்கமுடியாது என்பதுதான் வாஸ்தவம். ஸம்பந்தமிருப்பதாகத் தோன்று

வது பிராந்தியினுல்தான், என்று 49 முதல் 53 வரை சுலோகங்களில் காட்டிவிட்டு 54வது சுலோகத்தில் அந்த பிராந்திக்கு நிமித்தமென்னவென்பதைக் கூறுகிருர்,] (53)

यथा शीतं जलं वह्निसंबन्धादुष्णवत् भवेत् ।
बुद्धितादात्म्यसंबन्धात् कर्तृत्वं वस्तुतो नहि ॥ ५४ ॥

யதா ஶீதம் ஜலம் வஹ்நி ஸம்பந்தா துஷ்ணவத் பவேத் ।
புத்தி தாதாத்ம்ய ஸம்பந்தாத் கர்த்ருத்வம் வஸ்துதோ நஹி ॥

यथा-எப்படி, शीतं-குளிர்ந்த, जलं-ஜலமானது, वह्नि-संबन्धात्-நெருப்பின் ஸம்பந்தத்தினுல், उष्णवत् -சூடு உள்ளதாக भवेत्-ஆகிறதோ, (அப்படியே) बुद्धितादात्म्यसंबन्धात्-புத்தியோடு ஒன்ருகத்தோன்றும் ஸம்பந்தம் என்ற காரணத்தினுல் (ஆத்மாவிற்கு), कर्तृत्वं-செய்கிறவன் என்ற தன்மை (ஏற்படுகிறது), वस्तुतः-வாஸ்தவத்தில், न हि-கிடையாது.

எப்படிக் குளிர்ந்த ஜலமானது நெருப்பின் ஸம்பந்தத்தினுல் சூடு உள்ளதாக ஆகிறதோ, (அப்படியே) புத்தியோடு ஒன்ருகத் தோன்றும் ஸம்பந்தம் என்ற காரணத்தினுல் (ஆத்மாவிற்கு) செய்கிறவன் என்ற தன்மை (ஏற்படுகிறது). வாஸ்தவத்தில் கிடையாது.

[பிரபஞ்சம் கல்பிதமானதினுல், அதனுல் ஆத்மாவிற்கு அனுகூலமும் கிடையாது, பிரதிகூலமும் கிடையாது, என்று மேலுள்ள மூன்று சுலோகங்களில் காட்டுகிருர்.] (54)

जलबिन्दुभिराकाशं न सिक्तं न च शुध्यति ।
तथा गङ्गाजलेनाहं न शुद्धो नित्यशुद्धतः ॥ ५५ ॥

ஜலபிந்துபிராகாஶம் ந ஸிக்தம் ந ச ஶுத்யதி ।
ததா கங்கா ஜலேநாஹம் ந ஶுத்தோ நித்யஶுத்தத: ॥

आकाशं-ஆகாசமானது, जलबिन्दुभिः-நீர்த்திவிலைகளால், न सिक्तं-நனைக்கப்படுகிறதில்லை, न च शुध्यति-சுத்தமாவதும்

இல்லை. तथा- அப்படியே, अहं-நான், नित्यशुद्धतः-எப்பொழுதும் சுத்தமாகவேயிருப்பதால், गङ्गाजलेन-கங்காநதியின் ஜலத்திஞல், न शुद्धः-சுத்தமாவதில்லை.

ஆகாசமானது நீர்த்திவலைகளால் நனைக்கப்படுகிறதில்லை, சுத்தமாவதும் இல்லை. அப்படியே நான் எப்பொழுதும் சுத்தமாகவே இருப்பதால் கங்கா நதியின் ஜலத்திஞல் சுத்தமாவதில்லை. (55)

वृक्षोत्पन्नफलैर्वृक्षो यथा तृप्तिं न गच्छति ।
मय्यध्यस्तान्नपानाद्यैस्तथा तृप्तिर्न विद्यते ॥ ५६ ॥

வ்ருக்ஷோத்பன்ன பலைர் வ்ருக்ஷோ யதா த்ருப்திம் ந கச்சதி।
மய்யத்யஸ்தாந்ந பாஞத்யைஸ்ததா த்ருப்திர் ந வித்யதே ॥

वृक्षोत्पन्नफलैः-மரத்திலிருந்து உண்டான பழங்களிஞல் वृक्षः-அந்த மரமானது, यथा-எப்படி, तृप्तिं-திருப்தியை, न गच्छति-அடைகிறதில்லையோ, तथा-அப்படியே, मयि-என்னிடத்தில், अध्यस्त-கல்பிக்கப்பட்ட, अन्नपानाद्यैः-அன்னம், பானம் முதலியவைகளால் (எனக்கு) तृप्तिः-திருப்தியானது, न विद्यते-ஏற்படுகிறதில்லை.

ஒரு மரத்திலிருந்து உண்டான பழங்களிஞல் அந்த மரமானது எப்படி திருப்தியை அடைகிறதில்லையோ, அப்படியே என்னிடத்தில் கல்பிக்கப்பட்ட அன்னம், பானம் முதலியவைகளால் (எனக்கு) திருப்தியானது ஏற்படுகிறதில்லை.

(56)

स्थाणौ प्रकल्पितश्चोरः स स्थाणुत्वं न बाधते ।
स्वस्मिन् कल्पितजीवश्च बाधितुं स्वं न शक्यते ॥ ५७ ॥

ஸ்தாணௌ ப்ரகல்பிதச்சோர: ஸ ஸ்தாணுத்வம் ந பாததே।
ஸ்வஸ்மின் கல்பித ஜீவச்ச பாதிதும் ஸ்வம் ந ஶக்யதே ॥

स्थाणौ-கட்டையில், चोरः-திருடன், प्रकल्पितः-கல்பிக்கப்பட்டவன். सः-அவன், स्थाणुत्वं-கட்டையாயிருக்கும்

தன்மையை, न बाधते-பாதிப்பது கிடையாது. (அப்படிப் போலவே), स्वस्मिन्-தன்னிடத்தில், कल्पितजीवश्च-கல்பித மான ஜீவனும், स्वं-தன்னை, बाधितुं-பாதிப்பதற்கு, न शक्यते-முடியாது.

மரக்கட்டையில் ப்ராந்தியால் திருடன் கல்பிக்கப்பட்டவன். அதிலுள்ள கட்டையாயிருக்கும் தன்மையை அந்தத் திருடனுல் போக்கடிக்க முடியாது இதுபோலவே தன்னிடத்தில் அக்ஞானத்தால் கல்பிக்கப்பட்ட ஜீவனும் தன் உண்மை ஸ்வரூபத்தை பாதிக்க முடியாது.

[ஜாக்கிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்கிற நிலைகளும் ஆத்மாவிற்கு ஸம்பந்தப்பட்டவையல்ல என்று மேல் மூன்று சுலோகங்களில் காட்டப்படுகிறது.] (57)

अज्ञाने बुद्धिविलये निद्रा सा भण्यते बुधैः ।
विलीनाज्ञानतत्कार्ये मयि निद्रा कथं भवेत् ॥ ५८ ॥

அக்ஞானே புத்தி விலயே நித்ரா ஸா பண்யதே புதை: ।
விலீனுக்ஞான தத்கார்யே மயி நித்ரா கதம் பவேத் ॥

अज्ञाने-அக்ஞானத்தினிடத்தில், बुद्धिविलये-புத்தி நன்கு லயமடைந்திருக்கும்போது, सा-அந்த நிலை, निद्रा-தூக்கம் என்று, बुधैः-அறிவாளிகளால், भण्यते-சொல்லப்படுகிறது. विलीनाज्ञानतत्कार्ये-அக்ஞானமும் அதிலிருந்து ஏற்படுபவைகளும் நசித்துப்போயிருக்கிற, मयि-என்னிடத்தில், निद्रा-தூக்கம், कथं-எப்படி, भवेत्-இருக்கும் ?

அக்ஞானத்தினிடத்தில் புத்தி நன்கு லயம் அடைந்திருக்கும்போது அந்த நிலை தூக்கம் என்று அறிவாளிகளால் சொல்லப்படுகிறது. அக்ஞானமும் அதிலிருந்து ஏற்படுகிறவைகளும் நசித்துப்போயிருக்கிற என்னிடத்தில் தூக்கம் எப்படி இருக்கும் ? (58)

बुद्धेः पूर्णविकासोऽयं जागरः परिकीर्त्यते ।
विकारादिविहीनत्वाज्जागरो मे न विद्यते ॥ ५९ ॥

புத்தே: பூர்ண விகாஸோऽயம் ஜாகர: பரிகீர்த்யதே ।
விகாராதி விஹீனத்வாத் ஜாகரோ மே ந வித்யதே ॥

**बुद्धेः**-புத்தியினுடைய, **पूर्णविकासः**-நன்கு பிரகாசமாயுள்ள, **अयं**-இந்த நிலை, **जागरः**-ஜாக்கிரத்து என்று, **परिकीर्त्यते**-சொல்லப்படுகிறது. **विकारादिविहीनत्वात्**-மாறுதல் முதலானதுகளெல்லாம் இல்லாமலிருக்கும் தன்மையுடையவனுதலால், **मे**-எனக்கு, **जागरः**-ஜாக்கிரத் என்கிற நிலை, **न विद्यते**-கிடையாது.

புத்தியினுடைய நன்கு பிரகாசமாயுள்ள இந்த நிலை ஜாக்கிரத்து என்று சொல்லப்படுகிறது. மாறுதல் முதலானதுகளெல்லாம் இல்லாமலிருக்கும் தன்மையுடையவனுதலால் எனக்கு ஜாக்கிரத் என்கிற நிலை கிடையாது.(59)

सूक्ष्मनाडीषु सञ्चारो बुद्धेः स्वप्नः प्रजायते ।
संचारधर्मरहिते स्वप्नो नास्ति तथा मयि ॥ ६० ॥

ஸூக்ஷ்ம நாடீஷு ஸஞ்சாரோ புத்தே: ஸ்வப்ன:
ப்ரஜாயதே ।
ஸஞ்சார தர்ம ரஹிதே ஸ்வப்னோ நாஸ்தி ததா மயி ॥

**सूक्ष्मनाडीषु**-ஸூக்ஷ்ம நாடிகளில், **बुद्धेः**-புத்தியினுடைய, **संचारः**-ஸஞ்சரிப்பதானது, **स्वप्नः**-ஸ்வப்னமாக, **प्रजायते**-ஆகிவிடுகிறது. **तथा**-அவ்விதம், **संचारधर्मरहिते**-ஸஞ்சாரம் என்ற தர்மமில்லாத, **मयि**-என்னிடத்தில், **स्वप्नः**-ஸ்வப்னம், **नास्ति**-கிடையாது.

ஸூக்ஷ்ம நாடிகளில் புத்தி ஸஞ்சரிப்பதானது ஸ்வப்னமாக ஆகிவிடுகிறது. அவ்விதம் ஸஞ்சாரமில்லாத என்னிடத்தில் ஸ்வப்னம் கிடையாது.

[ஜாக்கிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்னும் மூன்று அவஸ்தைகள் ஆத்மாவிற்குக்கிடையாது என்று சொன்னதிலேயே அவைகளை ஒட்டிய மற்ற தர்மங்களும் கிடையாது என்று ஏற்பட்டபோதிலும் ஜாக்கிரத் அவஸ்தையில் சேர்ந்த ஸ்நாநம், போக்குவரத்து, பசி, தாஹம் இவைகள் கிடையாதென்பதை ஸ்பஷ்டமாகவே மேல் நான்கு சுலோகங்களில் காட்டுகிருர்.] (60)

परिपूर्णस्य नित्यस्य शुद्धस्य ज्योतिषो मम ।
आगन्तुकमलाभावात् किं स्नानेन प्रयोजनम् ॥ ६१ ॥

பரிபூர்ணஸ்ய நித்யஸ்ய ஶுத்தஸ்ய ஜ்யோதிஷோ மம ।
ஆகந்துக மலாபாவாத் கிம் ஸ்நாநேன ப்ரயோஜனம் ॥

**परिपूर्णस्य**–எங்கும் நிறைந்தவனுகவும், **नित्यस्य**-நித்தியனுகவும், **शुद्धस्य**-சுத்தனுகவும், **ज्योतिषः**–பிரகாசஸ்வரூபமாயும் உள்ள, **मम**–எனக்கு, **आगन्तुक**-வந்துசேரக்கூடிய, **मल**–அழுக்கு, **अभावात्**–கிடையாததினுல், **स्नानेन**–ஸ்நாநத்தினுல், **किं**–என்ன, **प्रयोजनम्**–பிரயோஜனம்?

எங்கும் நிறைந்தவனுகவும் நித்தியனுகவும் சுத்தனுகவும் பிரகாச ஸ்வரூபமாயுமுள்ள எனக்கு வந்து சேரக்கூடிய அழுக்கு கிடையாததினுல் ஸ்நாநத்தினுல் என்னப் பிரயோஜனம்? (61)

देशाभावात् क्व गन्तव्यं स्थानाभावात् क्व वा स्थितिः ।
पूर्णे मयि स्थानदेशौ कल्पितावहमद्वयः ॥ ६२ ॥

தேஶாபாவாத் க்வ கந்தவ்யம் ஸ்தாநாபாவாத் க்வ வா ஸ்திதி: ।
பூர்ணே மயி ஸ்தான தேஶௌ கல்பிதாவஹமத்வய: ॥

**देशाभावात्**–இடமென்பதே கிடையாதபடியால், **क्व**–எங்கே, **गन्तव्यं**–போகவேண்டும்? **स्थानाभावात्**–இருப்பிடமென்றே கிடையாதபடியால், **क्व वा**–எங்கேதான், **स्थितिः**–

இருப்பு வேண்டும்? **पूर्णे**-எங்கும் நிறைந்த, **मयि**-என்னிடத்தில், **स्थानदेशौ**-இடம் இருப்பிடம் என்ற இரண்டும், **कल्पितौ**-கல்பிக்கப்பட்டவை. **अहं**-நான், **अद्वयः**-இரண்டற்றவன்.

இடம் என்பதே கிடையாதபடியால் எங்கே போக வேண்டும்? இருப்பிடம் என்றே கிடையாதபடியால் எங்கே தான் இருப்பு வேண்டும்? எங்கும் நிறைந்த என்னிடத்தில் இடம், இருப்பிடம் என்ற இரண்டும் கல்பிக்கப்பட்டவைகள். நான் இரண்டற்றவன். (62)

**प्राणसंचारसंशोषात् पिपासा जायते खलु ।**
**शोषणानर्हचिद्रूपे मय्येषा जायते कथम् ॥ ६३ ॥**

ப்ராண ஸஞ்சார ஸம்ஶோஷாத் பிபாஸா ஜாயதே கலு ।
ஶோஷணார்ஹ சித்ரூபே மய்யேஷா ஜாயதே கதம் ॥

**प्राणसंचारसंशोषात्**-பிராணவாயு ஸஞ்சரிப்பதினால் ஏற்படும் வரட்சியினால், **पिपासा**-தாஹம், **जायते खलु**-ஏற்படுகிறதல்லவா? **शोषणानर्हचिद्रूपे**-வரண்டுபோவதற்கு இடமில்லாத ஞானஸ்வரூபனான, **मयि**-என்னிடத்தில், **एषा**-இந்த தாஹம், **कथं**-எப்படி, **जायते**-ஏற்படும்?

பிராணவாயு ஸஞ்சரிப்பதினால் ஏற்படும் வரட்சியினால் தாஹம் ஏற்படுகிறதல்லவா? வரண்டுபோவதற்கு இடமில்லாத ஞான ஸ்வரூபனான என்னிடத்தில் இந்த தாஹம் எப்படி ஏற்படும்? (63)

**नाडीषु पीड्यमानासु वाय्वग्निभ्यां भवेत् क्षुधा ।**
**तयोः पीडनहेतुत्वं संविद्रूपे कथं मयि ॥ ६४ ॥**

நாடீஷு பீட்யமாநாஸு வாய்வக்னிப்யாம் பவேத் க்ஷுதா ।
தயோ: பீடன ஹேதுத்வம் ஸம்வித்ரூபே கதம் மயி ॥

**वाय्वग्निभ्यां**-வாயுவினாலும் அக்னியினாலும், **नाडीषु**-நாடிகள், **पीड्यमानासु**-பீடிக்கப்படும்போது, **क्षुधा**-பசி, **भवेत्**-

ஏற்படும். **संविद्रूपे**-ஞானஸ்வரூபியான, **मयि**-என்னிடத்தில், **तयोः**-அவைகளுக்கு (வாயுவிற்கும் அக்னிக்கும்), **पीडनहेतुत्वं**-பீடிப்பதற்குக்காரணமாயிருக்கும் தன்மை, **कथं**-எப்படி இருக்கும்?

வாயுவினாலும் அக்னியினாலும் நாடிகள் பீடிக்கப்படும் போது பசி ஏற்படும். ஞான ஸ்வரூபியான என்னிடத்தில் அவைகளுக்கு (வாயுவிற்கும் அக்னிக்கும்) பீடிப்பதற்குக் காரணமாயிருக்கும் தன்மை எப்படி இருக்கும்?

[ஆத்மா சரீரமில்லாததினால் சரீரத்தை யொட்டியதான பால்யம், யௌவனம், வார்த்தகம் என்ற அவஸ்தைகளும் ஆத்மாவிற்குக் கிடையாது என்று மேல் மூன்று சுலோகங் களினால் காட்டுகிறார்.] (64)

शरीरस्थितिशैथिल्यं श्वेतलोमसमन्वितम् ।
जरा भवति सा नास्ति निरंशे मयि सर्वगे ॥ ६५ ॥

ஶரீர ஸ்திதி ஶைதில்யம் ச்வேதலோம ஸமந்விதம் ।
ஜரா பவதி ஸா நாஸ்தி நிரம்ஶே மயி ஸர்வகே ॥

**श्वेतलोमसमन्वितं**-வெளுப்பாய்ப்போன ரோமத்துடன் கூடின, **शरीरस्थितिशैथिल्यं**-சரீரத்தின் கட்டுக்குத் தளர்ச்சி என்பது, **जरा**-ஜரை (மூப்பு), **भवति**-ஆகிறது. **सा**-அந்த ஜரை, **निरंशे**-அம்சங்கள் இல்லாத, **सर्वगे**-எங்கேயும் இருக்கிற **मयि**-என்னிடத்தில், **नास्ति**-கிடையாது.

வெளுப்பாய்ப்போன ரோமத்துடன் சரீரத்தின் கட்டுக்குத் தளர்ச்சி என்பது ஜரை (மூப்பு) ஆகிறது. அந்த ஜரை அம்சங்களேயில்லாத எங்கும் இருக்கிற என்னிடத்தில் கிடையாது. (65)

योषित्क्रीडासुखस्यान्तर्गर्वाढ्यं यौवनं किल ।
आत्मानन्दे परे पूर्णे मयि नास्ति हि यौवनम् ॥ ६६ ॥

யோஷித் க்ரீடா ஸுகஸ்யாந்தர் கர்வாட்யம் யௌவனம் கில ।
ஆத்மானந்தே பரே பூர்ணே மயி நாஸ்தி ஹி யௌவனம் ॥

**योषित्क्रीडासुखस्य**-பெண்களுடன் கிரீடை செய்வதில் ஸுகமுள்ளவனுக்கு, **किल**-அல்லவா, **अन्तर्गर्वाढ्यं**-மனதிற்குள் கர்வம் நிரம்பியதான, **यौवनं**-யௌவனம்என்பது ? **परे**-எல்லாவற்றிற்கும் மேலாகவும், **पूर्णे**-நிறைந்தவனுகவும், **आत्मानन्दे**-தன்னிடத்திலேயே ஆனந்தத்தையுடையவனுமான, **मयि**-என்னிடத்தில், **यौवनं**-யௌவனம், **नास्ति हि**-கிடையாது.

பெண்களுடன் கிரீடை செய்வதில் ஸுகமுள்ளவனுக்கு அல்லவா மனதிற்குள் கர்வம் நிரம்பியதான யௌவனம் என்பது ? எல்லாவற்றிற்கும் மேலாகவும் நிறைந்தவனுகவும் தன்னிடத்திலேயே ஆனந்தத்தை உடையவனுமான என்னிடத்தில் யௌவனம் கிடையாது. (66)

मूढबुद्धिपरिव्याप्तं दुःखानामालयं सदा ।
बाल्यं कोपनशीलान्तं न मे सुखजलाम्बुधेः ॥ ६७ ॥

மூடபுத்தி பரிவ்யாப்தம் துக்காநுமாலயம் ஸதா ।
பால்யம் கோபன ஶீலாந்தம் ந மே ஸுகஜலாம்புதே: ॥

**मूढबुद्धिपरिव्याप्तं**-அறிவில்லாத புத்தியினுல் வியாபிக்கப்பட்டதாயும், **सदा**-எப்பொழுதும், **दुःखानां**-துக்கங்களுக்கு **आलयं**-இருப்பிடமாயும், **कोपनशीलान्तं**-கோபித்துக்கொள்வதிலேயே முடிவுற்றதாயும் உள்ள, **बाल्यं**-பால்யம், **सुखजलाम्बुधेः**-ஸுகமாகிய ஜலம் நிரம்பிய ஸமுத்திரமாகிய, **मे**-எனக்கு, **न**-கிடையாது.

அறிவில்லாத புத்தியினுல் வியாபிக்கப்பட்டதாயும் எப்பொழுதும் துக்கங்களுக்கு இருப்பிடமாயும் கோபித்துக் கொள்வதிலேயே முடிவுள்ளதாயும் உள்ள பால்யம் ஸுகமாகிய ஜலம் நிரம்பிய ஸமுத்திரமாகிய எனக்கு கிடையாது,

[இவ்விதமாக எது எல்லாம் ஆத்மாவல்லவென்றும், ஆத்மாவின் வாஸ்தவ ஸ்வரூபம் என்னவென்றும் அதை அறிய வொட்டாமல் செய்கிற அக்ஞானம், அதன் கார்யங்களான அந்த:கரணம், முதலானவைகளிலிருந்து விலக்கி சுத்தமான சைதன்ய ரூபமாயுள்ள ஆத்ம ஸ்வரூபத்தை உணரவேண்டுமென்றும் அப்படி உணர்ந்தவனுடைய நிலை எப்படி இருக்குமென்றும் விஸ்தாரமாகச் சொல்லிவிட்டு இந்த பிரகரணத்தை உபஸம்ஹாரம் செய்கிறார்.] (67)

**एवं तत्त्वविचाराब्धौ निमग्नानां सदा नृणाम् ।**
**परमाद्वैतविज्ञानमपरोक्षं न संशयः ॥ ६८ ॥**

ஏவம் தத்வ விசாராப்தௌ நிமக்னானாம் ஸதா ந்ருணாம் ।
பரமாத்வைத விஜ்ஞானமபரோக்ஷம் ந ஸம்ஶய: ॥

**एवं**–இவ்விதமாக, **सदा**–எப்பொழுதும், **तत्त्वविचाराब्धौ**–தத்துவ விசாரமாகிற ஸமுத்திரத்தில், **निमग्नानां**–நன்கு மூழ்கியிருக்கும், **नृणाम्**–மனிதர்களுக்கு, **परमाद्वैतविज्ञानं**–மேலான இரண்டற்றதான பிரஹ்மத்தின் அனுபவ ஞானம், **अपरोक्षं**–நேரிலேயே ஏற்படும். **संशयः**–(இவ்விஷயத்தில்) ஸந்தேஹம், **न**–இல்லை.

இவ்விதமாக தத்துவ விசாரமாகிற ஸமுத்திரத்தில் எப்பொழுதும் நன்கு மூழ்கியிருக்கும் மனிதர்களுக்கு மேலான இரண்டற்றதான பிரஹ்மத்தின் அனுபவஞானம் நேரிலேயே ஏற்படும். (இவ்விஷயத்தில்) ஸந்தேஹம் இல்லை. (68)



॥ श्रीः ॥

# ॥ अनात्मश्रीविगर्हणम् ॥

## அநாத்ம ஸ்ரீ விகர்ஹணம்

*[ஆத்மா ஒன்றைத்தவிற வேறு எவ்வித ஐசுவரியமும் நிந்திக்கத் தக்கதேயாகும். அதனால் பரம புருஷார்த்தமான மோக்ஷம் கிட்டமாட்டாது. என்பதை இப் பிரகரணத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துக் காட்டுகிறார்].*

**लब्धा विद्या राजमान्या ततः किं प्राप्ता संपत् प्राभवाढ्या ततः किम्।
भुक्ता नारी सुन्दराङ्गी ततः किं येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत्॥**

லப்தா வித்யா ராஜ மான்யா தத: கிம்
ப்ராப்தா ஸம்பத் ப்ராபவாட்யா தத: கிம் ।
புக்தா நாரீ ஸுந்தராங்கீ தத: கிம்
யேன ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

**राजमान्या**–அரசர்களால் வெகுமானிக்கத்தகுந்த, **विद्या**–வித்யை, **लब्धा**–ஸம்பாதிக்கப்பட்டு விட்டது, **ततः**–அதனால், **किं**–என்ன? **प्राभवाढ्या**–பிரபுத்தன்மையுடன் (ஆளும் சக்தியுடன்)கூடி சிறப்புற்ற, **संपत्**-ஐசுவரியம், **प्राप्ता**–அடையப்பட்டுவிட்டது. **ततः**–அதனால், **किं**–என்ன? **सुन्दराङ्गी**–அழகான அங்கத்தோடுகூடின, **नारी**–ஸ்திரீ, **भुक्ता**–அனுபவிக்கப்பட்டுவிட்டாள், **ततः**-அதனால், **किं**-என்ன பயன்? **येन**-எவனொருவனால், **स्वात्मा**–தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம், **साक्षात्कृतो**-ஸாக்ஷாத்கரித்ததாக, **नैव अभूत्**-ஆகவேயில்லையோ (அவனுக்கு).

எவனொருவனால் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவேயில்லையோ அவனால் அரசர்களால் வெகுமானிக்கத் தகுந்த வித்யை ஸம்பாதிக்கப்பட்டு விட்டது, அதனால் என்ன பயன்? அதிகாரத்தோடுகூட ஐசுவரியம் அடையப்பட்டுவிட்டது, அதனால் என்ன?

அழகான அங்கத்தோடு கூடிய ஸ்திரீ அனுபவிக்கப்பட்டு விட்டாள், அதனுல்தான் என்ன ? (1)

**केयूराद्यैर्भूषितो वा ततः किं कौशेयाद्यैरावृतो वा ततः किम् ।**
**तृप्तो मृष्टान्नादिना वा ततः किं येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥**

கேயூராத்யைர் பூஷிதோ வா தத: கிம்
கௌஶேயாத்யைராவ்ருதோ வா தத: கிம் ।
த்ருப்தோ ம்ருஷ்டான்னாதினு வா தத: கிம்
யேன ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

**केयूराद्यैः**-தோள்வளை முதலானவைகளால், **भूषितो वा**-அலங்காரம் செய்யப்பட்டு விட்டான் **ततः**-அதனுல், **किं**-என்ன ? **कौशेयाद्यैः**-பட்டு முதலானவைகளால், **आवृतो वा**-போர்த்தப்பட்டு விட்டான், **ततः**-அதனுல், **किं**-என்ன? **मृष्टान्नादिना**-சுத்தமான அன்னம் முதலியவற்ருல், **तृप्तो वा**-திருப்தி அடைந்துவிட்டான், **ततः**-அதனுல், **किं**-என்ன பயன் ? **येन**-எவனொருவனுல், **स्वात्मा**-தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம், **साक्षात्कृतो**-ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதாக, **नैव अभूत्** ஆகவே யில்லையோ (அவனுக்கு).

எவன் ஒருவனுல் தன் ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத் கரிக்கப்படவில்லையோ அவன் தோள்வளை முதலானவை களால் அலங்காரம் செய்யப்பட்டுவிட்டான், அதனுல் என்ன ? பட்டு முதலானவைகளால் போர்த்தப்பட்டு விட்டான், அதனுல் என்ன ? சுத்தமான ஆஹாரத்தால் திருப்தியடைந்துவிட்டான், அதனுல்தான் என்ன பயன் ?

**दृष्टा नाना चारुदेशास्ततः किं पुष्टाश्चेष्टा बन्धुवर्गास्ततः किम् ।**
**नष्टं दारिद्र्यादिदुःखं ततः किं येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥**

த்ருஷ்டா நாநா சாருதேஶாஸ்தத: கிம்
புஷ்டாச்சேஷ்டா பந்துவர்காஸ்தத: கிம் ।
நஷ்டம் தாரித்ர்யாதி துக்கம் தத: கிம்
யேன ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

नाना-பல்விதமான், चारुदेशाः-அழகான தேசங்கள், दृष्टाः-பார்க்கப்பட்டுவிட்டன, ततः-அதனல், किं-என்ன? इष्टाः-ஸ்நேஹிதர்களும், बन्धुवर्गाः च-பந்து வர்க்கங்களும், पुष्टाः-போஷிக்கப்பட்டு விட்டார்கள், ततः-அதனல், किं-என்ன? दारिद्र्यादिदुःखं-ஏழ்மைமுதலான துன்பம், नष्टं-போய்விட்டது, ततः-அதனல், किं-என்ன பயன்? येन - எவனொருவனல், स्वात्मा தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம், साक्षात्कृतो-ஸாக்ஷாத் கரிக்கப்பட்டதாக், नैव अभूत्-ஆகவே இல்லையோ (அவனுக்கு)

எவனொருவனல் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவில்லையோ அவனல் அழகான பல தேசங்கள் பார்வையிட்டாய்விட்டது, அதனல் என்ன? ஸ்நேஹிதர்களும் பந்து வர்க்கங்களும் போஷிக்கப்பட்டு விட்டார்கள், அதனல் என்ன? தரித்திரத்தன்மை முதலிய துக்கங்களெல்லாம் போய்விட்டது, அதனல்தான் என்ன?

स्नातस्तीर्थे जह्नुजादौ ततः किं दानं दत्तं व्यष्टसंख्यं ततः किम् ।
जप्ता मन्त्राः कोटिशो वः ततः किं येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

ஸ்நாதஸ்தீர்த்தே ஜஹ்னுஜாதௌ தத: கிம்
தானம் தத்தம் த்வ்யஷ்ட ஸங்க்யம் தத: கிம் ।
ஜப்தா மந்த்ரா: கோடிசோ வா தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

जह्नुजादौ-கங்கை முதலான, तीर्थे-புண்ய தீர்த்தத்தில், स्नातः-ஸ்நாநம் செய்தாகிவிட்டது. ततः-அதனல் किं-என்ன? व्यष्टसंख्यं - இரு எட்டு எண்ணிக்கை கொண்ட அதாவது பதினறு, दानं-தானம், दत्तं-கொடுத்தாகிவிட்டது. ततः-அதனல், किं-என்ன? कोटिशः-கோடிக்கணக்காக, मन्त्राः-மந்திரங்கள், जप्ताः-ஜபிக்கப்பட்டு விட்டன. ततः-அதனல், किं-என்ன? येन-எவனொருவனல், स्वात्मा - தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம், साक्षात्कृतो - ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதாக, नैव अभूत्-ஆகவேயில்லையோ (அவனுக்கு)

எவனொருவனால் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவேயில்லையோ அவனால் கங்கை முதலான புண்ய தீர்த்தங்களில் ஸ்நாநம் செய்தாகிவிட்டது, அதனால் என்ன? பதினாறுவிதமான தானங்களும் கொடுத்தாய்விட்டன, அதனால் என்ன? கோடிக்கணக்காக மந்திரங்களும்தான் ஜபிக்கப்பட்டுவிட்டன, அதனால்தான் என்ன பயன்? (4)

**गोत्रं सम्यग्भूषितं वा ततः किं गात्रं भस्माच्छादितं वा ततः किम् ।**
**रुद्राक्षादिः संधृतो वा ततः किं येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥**

கோத்ரம் ஸம்யக்பூஷிதம் வா தத: கிம்
காத்ரம் பஸ்மாச்சாதிதம் வா தத: கிம் ।
ருத்ராக்ஷாதி: ஸந்த்ருதோ வா தத: கிம்
யேன ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

**गोत्रं**-வம்சமானது, **सम्यक्**-நன்றாக, **भूषितं वा**-அலங்கரிக்கப்பட்டுவிட்டது, **ततः**-அதனால், **किं**-என்ன? **गात्रं**-சரீரம், **भस्माच्छादितं वा**-விபூதியினால் பூராவும் பூசப்பட்டு விட்டது, **ततः**-அதனால், **किं**-என்ன? **रुद्राक्षादिः**-ருத்ராக்ஷம் முதலானவை, **संधृतो वा**-நன்கு தரித்துக்கொள்ளப்பட்டுவிட்டது, **ततः**-அதனால், **किं**-என்ன பயன்? **येन**-எவனொருவனால், **स्वात्मा**-தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம், **साक्षात्कृतो**-ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதாக, **नैव अभूत्** - ஆகவேயில்லையோ (அவனுக்கு)

எவனொருவனால் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவேயில்லையோ அவன் தன் வம்சத்திற்குத் தான் அலங்காரமாக இருந்து சிறப்பை உண்டு பண்ணிவிட்டான், அதனால் என்ன? சரீரம் பூராவும் விபூதியினால் பூசியாகிவிட்டது, அதனால் என்ன? ருத்ராக்ஷம் முதலானவைகள் நன்கு தரித்துக்கொள்ளப்பட்டுவிட்டன, அதனால்தான் என்ன பயன்? (5)

अन्नैर्विप्रास्तर्पिता वा ततः किं यज्ञैर्देवास्तोषिता वा ततः किम् ।
कीर्त्या व्याप्ताः सर्वलोकास्ततः किं येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

அன்னைர் விப்ராஸ்தர்பிதா வா ததः கிம்
யக்ஞைர் தேவாஸ்தோஷிதா வா ததः கிம் ।
கீர்த்யா வ்யாப்தாः ஸர்வலோகாஸ்ததः கிம்
யேன ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

**अन्नैः**-அன்னங்களால், **विप्राः**-பிராஹ்மணர்கள், **तर्पिता वा**-திருப்தி செய்யப்பட்டு விட்டார்கள், **ततः**-அதனால், **किं**-என்ன? **यज्ञैः**-யாகங்களினால், **देवाः**-தேவர்கள், **तोषिता वा**-ஸந்தோஷிக்கப்பட்டு விட்டார்கள். **ततः**-அதனால், **किं**-என்ன ? **कीर्त्या**-புகழால், **सर्वलोकाः**-எல்லா உலகங்களும், **व्याप्ताः**-வியாபிக்கப்பட்டுவிட்டன. **ततः**-அதனால், **किं**-என்ன பயன் ? **येन**-எவனொருவனால், **स्वात्मा**-தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம், **साक्षात्कृतो**-ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதாக, **नैव अभूत्**-ஆகவில்லையோ (அவனுக்கு)

எவனொருவனால் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவில்லையோ அவனால் அன்னங்களால் பிராஹ்மணர்கள் திருப்தி செய்யப்பட்டுவிட்டார்கள், அதனால் என்ன? யக்ஞங்களால் தேவர்கள் ஸந்தோஷிக்கப் பட்டுவிட்டார்கள், அதனால் என்ன ? கீர்த்தியினால் எல்லா உலகங்களும் வியாபிக்கப்பட்டுவிட்டன, அதனால்தான் என்ன பயன் ?

(6)

कायः क्लिष्टश्चोपवासैस्ततः किं लब्धाः पुत्राः स्वीयपत्न्यास्ततः किम् ।
प्राणायामः साधितो वा ततः किं येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

காயः க்லிஷ்டச்சோபவாஸைஸ்ததः கிம்
லப்தாः புத்ராः ஸ்வீய பத்ந்யாஸ் ததः கிம் ।
ப்ராணாயாமः ஸாதிதோ வா ததः கிம்
யேன ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

उपवासैः-உபவாஸங்களினால், कायः च-சரீரமும், क्लिष्टः-துன்புறுத்தப்பட்டு விட்டது, ततः-அதனால், किं-என்ன ? स्वीयपत्न्याः-தன் பத்னியின் மூலமாக, पुत्राः-புத்திரர்கள், लब्धाः-அடையப்பட்டுவிட்டார்கள். ततः-அதனால், किं-என்ன ? प्राणायामः-பிராணாயாமம், साधितो वा-ஸாதிக்கப் பட்டுவிட்டது, ततः-அதனால், किं-என்ன ? येन-எவனொருவனால் स्वात्मा-தன்னுடைய ஆத்மஸ்வரூபம், साक्षात्कृतो-ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதாக, नैव अभूत्-ஆகவேயில்லையோ (அவனுக்கு)

எவனொருவனால் தன் ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத் கரிக்கப்படவே இல்லையோ, அவனால் உபவாஸங்களினால் சரீரம் துன்புறுத்தப்பட்டுவிட்டது அதனால் என்ன ? தன் பத்னியின் மூலமாக புத்திரர்கள் அடையப்பட்டு விட்டார்கள், அதனால் என்ன ? பிராணாயாமம் ஸாதிக்கப் பட்டுவிட்டது, அதனால்தான் என்ன பயன் ? (7)

युद्धे शत्रुर्निर्जितो वा तत किं भूयो मित्रैः पूरितो वा ततः किम् ।
योगैः प्राप्ताः सिद्धयो वा ततः किं येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

யுத்தே ஶத்ருர் நிர்ஜிதோ வா ததః கிம்
பூயோ மித்ரைః பூரிதோ வா ததః கிம் ।
யோகைః ப்ராப்தாஃ ஸித்தயோ வா ததః கிம்
யேன ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோபூத் ॥

युद्धे-யுத்தத்தில், शत्रुः-சத்ரு, निर्जितो वा-ஜயிக்கப்பட்டு விட்டான், ततः-அதனால், किं-என்ன ? भूयः-ஏராளமாக, मित्रैः-ஸ்நேஹிதர்களால், पूरितो वा-நிரப்பப்பட்டுவிட்டான், ततः-அதனால், किं-என்ன ? योगैः-யோகானுஷ்டானங்களினால், सिद्धयो-அணிமாதி ஸித்திகள், प्राप्ताः-கிடைத்து விட்டன, ततः-அதனால், किं-என்ன பயன் ? येन-எவனொருவனால், स्वात्मा-தன்னுடைய ஆத்மஸ்வரூபம், साक्षात्कृतो-ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதாக, नैव अभूत् ஆகவேயில்லையோ (அவனால்.)

எவனொருவனால் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவேயில்லையோ அவனால் யுத்தத்தில் சத்ரு ஜயிக்கப்பட்டுவிட்டான், அதனால் என்ன? ஏராளமாக ஸ்நேஹிதர்களால் நிரப்பப்பட்டுவிட்டான், அதனால் என்ன? யோகானுஷ்டானங்களினால் அணிமாதி ஸித்திகளெல்லாம் கிடைத்துவிட்டன, அதனால்தான் என்ன பயன்? (8)

अब्धिः पद्भ्यां लङ्घितो वा ततः किं वायुः कुम्भे स्थापितो वा ततः किम् ।
मेरुः पाणावुद्धृतो वा ततः किं येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

அப்திः பத்ப்யாம் லங்கிதோ வா தத: கிம்
வாயு: கும்பே ஸ்தாபிதோ வா தத: கிம் ।
மேரு: பாணாவுத்த்ருதோ வா தத: கிம்
யேன ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

**पद्भ्यां**-இரண்டு கால்களினாலேயே, **अब्धिः**-ஸமுத்திரம், **लङ्घितो वा**-தாண்டப்பட்டுவிட்டது, **ततः**-அதனால், **किं**-என்ன? **वायुः**-காற்று, **कुम्भे**-கும்பத்தில், **स्थापितो वा**-நிலைநிறுத்தப்பட்டுவிட்டது, **ततः**-அதனால், **किं**-என்ன? **मेरुः**-மேருபர்வதம், **पाणौ**-உள்ளங்கையில், **उद्धृतो वा**-தூக்கிவைத்துக்கொள்ளப்பட்டுவிட்டது, **ततः**-அதனால், **किं**-என்ன? **येन**-எவனொருவனால், **स्वात्मा**-தன்னுடைய ஆத்மஸ்வரூபம், **साक्षात्कृतो**-ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதாக, **नैव अभूत्**-ஆகவேயில்லையோ (அவனுக்கு)

எவனொருவனால் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவில்லையோ அவனால் கால்நடையாகவே ஸமுத்திரம் தாண்டப்பட்டுவிட்டது, அதனால் என்ன? வாயு கும்பத்தில் நிறுத்திவைக்கப்பட்டுவிட்டது, அதனால் என்ன பயன்? மேருபர்வதமே உள்ளங்கையில் தூக்கி வைத்துக்கொள்ளப்பட்டுவிட்டது, அதனால்தான் என்ன பயன்? (9)

क्ष्वेलः पीतो दुग्धवद्वा ततः किं वह्निर्जग्धो लाजवद्वा ततः किम् ।
प्राप्तश्चारः पक्षिवत् खे ततः किं येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

க்ஷ்வேள: பீதோ துக்தவத் வா தத: கிம்
வஹ்னிர் ஜக்தோ லாஜவத் வா தத: கிம் ।
ப்ராப்தச்சார: பக்ஷிவத் கே தத: கிம்
யேன ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

**दुग्धवत्**–கறந்த பாலைப்போல, **क्ष्वेलः**-விஷம், **पीतः**–குடிக்கப்பட்டுவிட்டது, **ततः**–அதனால், **किं**–என்ன? **लाजवत्**–பொரியைப்போல, **वन्हिः**–நெருப்பு, **जग्धो वा**–தின்றுவிடப்பட்டது, **ततः**-அதனால், **किं**–என்ன? **पक्षिवत्**–பக்ஷியைப்போல, **खे**–ஆகாசத்தில், **चारः**–ஸஞ்சாரம், **प्राप्तः**–கிடைத்துவிட்டது, **ततः**–அதனால், **किं**-என்ன? **येन**–எவனொருவனால், **स्वात्मा**–தன்னுடைய ஆத்மஸ்வரூபம், **साक्षात्कृतो**-ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதாக, **नैव अभूत्**–ஆகவேயில்லையோ (அவனுக்கு).

எவனொருவனால் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவேயில்லையோ அவனால் கறந்த பாலைப் போல விஷம் குடிக்கப்பட்டுவிட்டது, அதனால் என்ன? பொரியைப்போல நெருப்பு தின்றுவிடப்பட்டது, அதனால் என்ன? பக்ஷியைப்போல ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் சக்தி கிடைத்துவிட்டது, அதனால்தான் என்ன பயன்? (10)

बद्धाः सम्यक् पावकाद्यास्ततः किं साक्षाद्विद्धा लोहवर्यास्ततः किम् ।
लब्धो निक्षेपोऽञ्जनाद्यैस्ततः किं येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥

பத்தா: ஸம்யக் பாவகாத்யாஸ்தத: கிம்
ஸாக்ஷாத் வித்தா லோஹவர்யாஸ் தத: கிம் ।
லப்தோ நிக்ஷேபோऽஞ்ஜனாத்யைஸ்தத: கிம்
யேன ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

**पावकाद्याः**-அக்னி முதலானவைகள், **सम्यक्**-நன்கு, **बद्धाः**-கட்டப்பட்டுவிட்டன, **ततः**-அதனுல், **किं**-என்ன ? **लोहवर्याः**-சிரேஷ்டமான லோஹங்கள், **साक्षात्**-நேராகவே, **विद्धाः**-கட்டிவிடப்பட்டன, **ततः**-அதனுல், **किं**-என்ன ? **अञ्जनाद्यैः**-மை முதலானவைகளால், **निक्षेपो**-புதையல், **लब्धो**-எடுக்கப்பட்டுவிட்டது, **ततः**-அதனுல், **किं**-என்ன ? **येन**-எவனொருவனுல், **स्वात्मा**-தன்னுடைய ஆத்மஸ்வரூபம், **साक्षात्कृतो**-ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதாக, **नैव अभूत्**-ஆகவேயில்லையோ (அவனுக்கு)

எவனொருவனுல் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவேயில்லையோ அவனுல் அக்னி முதலானவைகள் நன்கு கட்டப்பட்டுவிட்டன, அதனுல் என்ன பயன் ? லோஹங்களையும் அப்படியே நன்கு கட்டியாகிவிட்டது, அதனுல் என்ன பயன் ? மை முதலானவைகளின் உதவியால் புதையல் எடுக்கப்பட்டுவிட்டது, அதனுல்தான் என்ன பயன் ? (11)

**भूपेन्द्रत्वं प्राप्तमुर्व्यां ततः किं देवेन्द्रत्वं संभृतं वा ततः किम् ।**
**मुण्डीन्द्रत्वं चोपलब्धं ततः किं येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥**

பூபேந்த்ரத்வம் ப்ராப்தமுர்வ்யாம் தத: கிம்
தேவேந்த்ரத்வம் ஸம்ப்ருதம் வா தத: கிம் ।
முண்டீந்த்ரத்வம் சோபலப்தம் தத: கிம்
யேன ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

**उर्व्यां**-பூமியில், **भूपेन्द्रत्वं**-அரசர்களுக்கு அரசராயிருக்கும் தன்மை, **प्राप्तं**-அடையப்பட்டுவிட்டது, **ततः**-அதனுல், **किं**-என்ன ? **देवेन्द्रत्वं**-தேவர்களுக்கு அரசனுயிருக்கும் தன்மை, **संभृतं वा**-ஸம்பாதிக்கப்பட்டுவிட்டது, **ततः**-அதனுல், **किं**-என்ன ? **मुण्डीन्द्रत्वं च**-ஸன்யாஸிகளுக்குள் சிரேஷ்டராயிருக்கும் தன்மையும், **उपलब्धं**-அடையப்பட்டுவிட்டது, **ततः**-அதனுல், **किं**-என்ன ? **येन**-எவனொருவனுல், **स्वात्मा**-தன்னுடைய ஆத்மஸ்வரூபம், **साक्षात्कृतो**-ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதாக, **नैव अभूत्**-ஆகவேயில்லையோ (அவனுக்கு)

எவனொருவனால் தன்னுடைய ஆத்மாவின் ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவில்லையோ அவனுக்கு பூமியில் உள்ள அரசர்களுக்கெல்லாம் அரசராயிருக்கும் தன்மை கிடைத்து விட்டது, அதனால் என்ன? தேவர்களுக்கு அரசனாயிருக்கும் தன்மையேதான் ஸம்பாதிக்கப்பட்டது. அதனால் என்ன? ஸன்யாஸிகளுக்குள் சிரேஷ்டராயிருக்கும் தன்மை அடையப்பட்டுவிட்டது, அதனால்தான் என்ன பயன்? (12)

**मन्त्रैः सर्वः स्तम्भितो वा ततः किं बाणैर्लक्ष्यो भेदितो वा ततः किम् ।**
**कालज्ञानं चापि लब्धं ततः किं येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥**

மந்த்ரை: ஸர்வ: ஸ்தம்பிதோ வா தத: கிம்
பாணைர் லக்ஷ்யோ பேதிதோ வா தத: கிம் ।
காலஞானம் சாபி லப்தம் தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

**मन्त्रैः**-மந்திரங்களினால், **सर्वः**-எல்லாம், **स्तम्भितो वा**-ஸ்தம்பிக்கும்படி செய்யப்பட்டுவிட்டது, **ततः**-அதனால், **किं**-என்ன? **बाणैः**-பாணங்களினால், **लक्ष्यो**-குறியானது, **भेदितो वा**-பிளக்கப்பட்டுவிட்டது, **ततः**-அதனால், **किं**-என்ன? **कालज्ञानं चापि**-சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலம், எல்லா விஷயமான அறிவும், **लब्धं**-அடையப்பட்டுவிட்டது, **ततः**-அதனால், **किं**-என்ன? **येन**-எவனொருவனால், **स्वात्मा**-தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம், **साक्षात्कृतो**-ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதாக, **नैव अभूत्**-ஆகவேயில்லையோ (அவனுக்கு).

எவனொருவனால் தன்னுடைய ஆத்மாவின் ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவில்லையோ அவனால் மந்திரங்களினால் எல்லாரையும் ஸ்தம்பிக்கும்படி செய்தாகிவிட்டது, அதனால் என்ன? பாணங்களினால் குறியை அடித்தாகிவிட்டது, அதனால் என்ன? சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலம் எல்லாம் அறியப்பட்டுவிட்டது, அதனால்தான் என்ன? (13)

**कामातङ्कः खण्डितो वा ततः किं कोपावेशः कुण्ठितो वा ततः किम् ।**
**लोभाश्लेषो वर्जितो वा ततः किं येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥**

காமாதங்க: கண்டிதோ வா தத: கிம்
கோபாவேஶ: குண்டிதோ வா தத: கிம் ।
லோபாச்லேஷோ வர்ஜிதோ வா தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

**कामातङ्कः**-காமமாகிற ஜ்வரம், **खण्डितो वा**-நிறுத்தியாகி விட்டது, **ततः**-அதனால், **किं**-என்ன ? **कोपावेशः**-கோபத்தின் வேகம், **कुण्ठितो वा**-குறைக்கப்பட்டுவிட்டது, **ततः**-அதனால், **किं**-என்ன ? **लोभाश्लेषो**-பேராசையின் சேர்க்கை, **वर्जितो वा**-தடுக்கப்பட்டுவிட்டது, **ततः**-அதனால், **किं**-என்ன ? **येन**-எவனொருவனால், **स्वात्मा**-தன்னுடைய ஆத்மஸ்வரூபம், **साक्षात्कृतो**-ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதாக, **नैव अभूत्**-ஆக வில்லையோ (அவனுக்கு).

எவனொருவனால் தன்னுடைய ஆத்மாவின் ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவில்லையோ, அவனால் காமமாகிற ஜ்வரத்தை நிறுத்தியாகிவிட்டது, அதனால் என்ன ? கோபத்தின் வேகம் குறைக்கப்பட்டுவிட்டது, அதனால் என்ன ? பேராசையின் சேர்க்கை தடுக்கப்பட்டுவிட்டது, அதனால்தான் என்ன ? (14)

**मोहध्वान्तः पेषितो वा ततः किं जातो भूमौ निर्मदो वा ततः किम् ।**
**मात्सर्यार्तिर्मीलिता वा ततः किं येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥**

மோஹத்வாந்த: பேஷிதோ வா தத: கிம்
ஜாதோ பூமௌ நிர்மதோ வா தத: கிம் ।
மாத்ஸர்யார்திர் மீளிதா வா தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

**मोहध्वान्तः**-மோஹமாகிற இருட்டு, **पेषितो वा**-போக்கடிக்கப்பட்டுவிட்டது, **ततः**-அதனால், **किं**-என்ன ? **भूमौ**-பூமியில் **निर्मदो वा**-மதமில்லாதவனாக, **जातः**-ஏற்பட்டுவிட்டான், **ततः**-அதனால், **किं**-என்ன ? **मात्सर्यार्तिः**-பொறாமை என்கிற தொந்திரவும், **मीलिता वा**-விலக்கப்பட்டுவிட்டது, **ततः**-அதனால், **किं**-என்ன ? **येन**-எவனொருவனால், **स्वात्मा**-

தன்னுடைய ஆத்மஸ்வரூபம், साक्षात्कृतो-ஸாக்ஷாத்கரிக்கப் பட்டதாக, नैव अभूत्-ஆகவே இல்லையோ (அவனுக்கு).

எவனொருவனால் தன்னுடைய ஆத்மாவின் ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவில்லையோ அவனால் மோஹமாகிற இருட்டைப் போக்கடித்தாகிவிட்டது, அதனால் என்ன? பூமியிலேயே மதமில்லாதவனாக ஏற்பட்டு விட்டான், அதனால் என்ன? பொறுமை என்கிற தொந்திரவும் விலக்கப்பட்டுவிட்டது, அதனால் என்ன? (15)

**धातुर्लोकः साधितो वा ततः किं विष्णोर्लोको वीक्षितो वा ततः किम् ।**
**शंभोर्लोकः शासितो वा ततः किं येन स्वात्मा नैव साक्षात्कृतोऽभूत् ॥**

தாதுர்லோக: ஸாதிதோ வா தத: கிம்
விஷ்ணோர் லோகோ வீக்ஷிதோ வா தத: கிம் ।
ஶம்போர் லோக: ஶாஸிதோ வா தத: கிம்
யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோऽபூத் ॥

**धातुः**-பிரஹ்மாவினுடைய, **लोकः**-உலகமானது, **साधितो वा**-ஸம்பாதிக்கப்பட்டுவிட்டது. **ततः**-அதனால், **किं**-என்ன? **विष्णोः**-விஷ்ணுவினுடைய, **लोको**-உலகமானது, **वीक्षितो वा**-நன்கு பார்க்கப்பட்டுவிட்டது, **ततः**-அதனால், **किं**-என்ன? **शम्भोः**-பரமசிவனுடைய, **लोकः**-உலகமானது, **शासितो वा**-ஆளவேபட்டது, **ततः**-அதனால்தான், **किं**-என்ன? **येन**-எவனொருவனால், **स्वात्मा**-தன்னுடைய ஆத்மஸ்வரூபம், **साक्षात्कृतो**-ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதாக, **नैव अभूत्**-ஆகவே இல்லையோ? (அவனுக்கு).

எவனொருவனால் தன்னுடைய ஆத்மாவின் ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவில்லையோ அவனால் பிரஹ்மாவின் லோகமான ஸத்ய லோகம் ஸம்பாதிக்கப்பட்டு விட்டது, அதனால் என்ன? விஷ்ணுவின் லோகமான வைகுண்டம் நன்கு பார்க்கப்பட்டுவிட்டது, அதனால் என்ன? பரமசிவனுடைய லோகமான கைலாஸம் ஆளப்பட்டுவிட்டது, அதனால்தான் என்ன? (16)

यस्येदं हृदये सम्यगनात्मश्रीविगर्हणम् ।
सदोदेति स एवात्मसाक्षात्कारस्य भाजनम् ॥ १७ ॥

யஸ்யேதம் ஹ்ருதயே ஸம்யகநாத்மஸ்ரீவிகர்ஹணம் ।
ஸதோதேதி ஸ ஏவாத்ம ஸாக்ஷாத்காரஸ்ய பாஜனம் ॥

**यस्य**-எவனுடைய, **हृदये**-ஹ்ருதயத்தில், **इदं**-இந்த, **अनात्मश्रीविगर्हणं** - ஆத்மாவைத்தவிற வேறான ஐசுவர்யத்தைப் பற்றிய நிந்தை, **सम्यक्**-நன்றாக, **सदा**-எப்பொழுதும், **उदेति**-உதித்துக்கொண்டேயிருக்குமோ, **सः एव**-அவன்தான், **आत्मसाक्षात्कारस्य**-ஆத்மாவை ஸாக்ஷாத்கரிப்பதற்கு, **भाजनम्**-தகுதியுள்ளவன்.

எவனுடைய ஹ்ருதயத்தில் ஆத்மாவைத் தவிற வேறு எந்த ஐசுவர்யத்தையும் பற்றிய நிந்தனை நன்றாக எப்பொழுதும் தோன்றிக்கொண்டே யிருக்கிறதோ அவன்தான் ஆத்மாவை ஸாக்ஷாத்கரிப்பதற்குத் தகுதியுள்ளவன். (17)

अन्ये तु मायिकजगद्भ्रान्तिव्यामोहमोहिताः ।
न तेषां जायते क्वापि स्वात्मसाक्षात्कृतिर्भुवि ॥ १८ ॥

அந்யே து மாயிக ஜகத் ப்ராந்தி வ்யாமோஹ மோஹிதா: ।
ந தேஷாம் ஜாயதே க்வாபி ஸ்வாத்ம ஸாக்ஷாத்க்ருதிர்புவி ॥

**अन्ये तु**-மற்றவர்களோவென்றால், **मायिकजगद्भ्रान्तिव्यामोहमोहिताः**-மாயையினால் ஏற்பட்ட இந்த ஜகத்தாகிற பொய்த் தோற்றத்தினால் ஏற்பட்ட ஏமாற்றத்தினால் மயங்கியிருக்கிறார்கள். **तेषां**-அவர்களுக்கு, **भुवि**-இவ்வுலகத்தில், **क्वापि**-எப்பொழுதும்கூட, **स्वात्मसाक्षात्कृतिः**-தன்னுடைய ஆத்மாவின் ஸாக்ஷாத்காரம், **न जायते**-ஏற்படாது.

மற்றவர்களோ வென்றால் மாயையினால் ஏற்பட்ட இந்த ஜகத்தாகிற பொய்த் தோற்றத்தினால் ஏமாற்றப்பட்டு மயங்கி இருக்கிறார்கள். அவர்களுக்கு இவ்வுலகத்தில் எப்பொழுதும் தன்னுடைய ஆத்மாவின் ஸாக்ஷாத்காரம் ஏற்படாது. (18)

அநாத்ம ஸ்ரீவிகர்ஹணம் முற்றிற்று.

|| श्रीः ||

# || निर्वाणषट्कम् ||

## நிர்வாணஷட்கம்

[ஜகத்திலுள்ள ஸகலப்பிராணிகளுக்கும் 'நான்' என்பது அனுபவஸித்தமாகவும் பிரஸித்தமாகவும் இருந்தும்கூட அதன் வாஸ்தவஸ்வரூபம் என்ன என்கிற விஷயத்தில் எல்லாரும் ஒரேவிதமாக எண்ணுவதில்லை. சரீரம்தான் நான் என்றும், இந்திரியங்கள்தான் நான் என்றும், மனஸ்தான் நான் என்றும் இவ்விதம் பலவாறாக நினைக்கிறார்கள். அவை யாதொன்றும் ஆத்மாவாகாது. அவைகளுக்கெல்லாம் மேல் பட்டதாக, அவைகளுடன் ஸம்பந்தப்பட்டதுபோல் தோன்றி னும் வாஸ்தவத்தில் ஸம்பந்தப்படாததாக இருக்கும் சைதன்யமேதான் "நான்" என்கிற ஆத்மா என்று இங்கு ஆறு சுலோகங்களில் ஸ்ரீமத்ஆசார்யார் விளக்கிக்காட்டுகிறார்.]

**मनोबुद्ध्यहंकारचित्तानि नाहं न कर्णं न जिह्वा न च घ्राणनेत्रे ।**
**न च व्योम भूमिर्न तेजो न वायुः चिदानन्दरूपः शिवोऽहं शिवोऽहम् ॥**

மனோ புத்த்யஹங்கார சித்தானி நாஹம்
ந கர்ணம் ந ஜிஹ்வா ந ச க்ராண நேத்ரே ।
ந ச வ்யோம பூமிர் ந தேஜோ ந வாயுः
சிதானந்தரூபः ஶிவோऽஹம் ஶிவோऽஹம் ॥

**मनोबुद्ध्यहंकारचित्तानि**-மனஸ், புத்தி, அஹங்காரம், சித்தம், என்பவைகள், **अहं**-நான், **न**-அல்ல, **कर्णं**-காதும், **न**-அல்ல, **जिह्वा**-நாக்கும், **न**-அல்ல, **घ्राणनेत्रे च**-மூக்கும் கண்ணும், **न**-அல்ல. **व्योम च**-ஆகாசமும், **न**-(நான்) அல்ல, **भूमिः**-பூமியும் (அல்ல), **तेजः**-தேஜஸ்ஸும், **न**-அல்ல, **वायुः**-வாயுவும், **न**-அல்ல. **चिदानन्दरूपः**-ஞானத்தையும் ஆனந்தத்தையும் ஸ்வரூபமாயுடைய, **शिवः**-மங்களரூபியான பரமாத்மாவே **अहं**-நான். **शिवः**-மங்களரூபியான பரமாத்மாவே, **अहं**-நான்,

மனஸ், புத்தி, அஹங்காரம், சித்தம், என்பவைகள் நான் அல்ல, காதும் அல்ல, நாக்கும் அல்ல, மூக்கும் அல்ல, கண்ணும் அல்ல, ஆகாசமும் நான் அல்ல, பூமியும் அல்ல, தேஜஸ்ஸும் அல்ல, வாயுவும் அல்ல. ஞானத்தையும் ஆனந்தத்தையும் ஸ்வரூபமாயுடைய மங்கள ரூபியான பரமாத்மாவே நான். மங்களரூபியான பரமாத்மாவே நான்.

[ஜீவனுக்கு வியவஹார ஸாதனங்களாக சில கருவிகள் இருந்து வருகின்றன. அவைகளில் உள் கருவிக்கு அந்தக் கரணம் என்று பெயர். அதற்கே, ஆலோசிக்கும்போது மனஸ் என்றும், தீர்மானம் செய்யும்போது புத்தி என்றும், "தான்" என்று எண்ணும்போது அஹங்காரம் என்றும், ஸம்ஸ்காரங்களோடு அடங்கி இருக்கும்போது சித்தம் என்றும், நான்கு விதமான பெயர்கள் ஏற்படுகின்றன. வெளிக்கருவிகள் இந்திரியங்கள் எனப்படும். அவைகளில் வெளிப் பிரபஞ்சத்திலுள்ள விஷயங்களை கிரஹித்து உள்ளே அனுப்புவதற்கு உபயோகப்படுபவைகள் ஞானேந்திரியங்கள். அவை ஐந்து. சப்தத்தை கிரஹிக்க காது, ஸ்பர்சத்தை கிரஹிக்க த்வக் (தோல்), ரூபத்தை கிரஹிக்க கண், ரஸத்தை கிரஹிக்க நாக்கு, வாசனையை கிரஹிக்க மூக்கு. வெளிக்கருவிகளான இந்திரியங்களில் உள்ளேயுள்ள எண்ணங்களைக்கொண்டு வெளிப் பிரபஞ்சத்தின்பேரில் தாக்குவதற்காக உபயோகப்படுபவைகள் கர்மேந்திரியங்கள். அவைகளும் ஐந்து. எண்ணத்தை வெளிப்படுத்த வாக்கு, வெளிப் பதார்த்தங்களை எடுக்கவும் தள்ளவும் கை, ஸஞ்சரிக்க கால், மலமூத்திர விஸர்ஜனம் செய்ய பாயு, ஸ்திரீ ஸம்போகம் செய்ய உபஸ்தம். ஆக இந்திரியங்கள் மொத்தம் பத்து. அந்தக்கரணமோ, இந்த இந்திரியங்களோ எல்லாம் ஸூக்ஷ்ம பதார்த்தங்களா யிருப்பதால் அவைகள் இருந்துகொண்டு வேலை செய்வதற்கு ஸ்தூலமாக ஒரு இருப்பிடம் வேண்டியிருக்கிறது. அதுவே இந்த ஸ்தூல சரீரம். அதுவும் ஸ்தூலமான ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம், பூமி என்ற ஐந்து பூதங்களால் செய்யப்பட்டதே யாகும். வெளிப் பிரபஞ்சமும் அந்த ஐந்து பூதங்களாலேயே செய்

யப்பட்டிருக்கிறபடியால் ஒன்றுக்கொன்று ஸம்பந்தம் ஏற்படுவது ஸுலபமாயிருக்கிறது. "நான் நினைக்கிறேன்", "நான் தீர்மானிக்கிறேன்", "நான் பார்க்கிறேன்", "நான் முகர்கிறேன்" என்றெல்லாம் உலக வியவஹாரம் இருப்பதால் "நான்" என்பது இருவித கருவிகள் தானோ, பஞ்சபூத கார்யமான சரீரம் தானோ, என்று தோன்றக்கூடிய படியால், "அது ஸரியல்ல, ஆத்மா ஞானஸ்வரூபர், ஆனந்தஸ்வரூபர்" என்றும், "நான்" என்று நாம் தவறுதலாக நினைக்கக்கூடியது யாவற்றும் "நான்" அல்ல என்பதுடன், ஒருவிதப் பற்றுமற்ற "நான்" என்கிற சுத்த சைதன்யத்தில் ஸம்பந்தப்பட்டிருப்பதாகத் தோன்றி 'என்னுடையது" என்ற வியவஹாரத்திற்கு விஷயமான பதார்த்தங்களும் வாஸ்தவத்தில் "என்னுடையது அல்ல" என்றும், விஸ்தாரமாக இந்தப் பிரகரணத்தில் காட்டப்பட்டிருக்கிறது. இந்த முதல் சுலோகத்தில் ஞானேந்திரியங்களில் குறிப்பிடப்படாத த்வக் (தோல்) என்பதையும், பஞ்சபூதங்களில் குறிப்பிடப்படாத அப்பு (ஜலம்) என்பதையும் சொல்லப்பட்டுவிட்டதாக வைத்துக்கொள்ள வேண்டும்.]

**न च प्राणसंज्ञो न वै पञ्चवायुः न वा सप्तधातुर्न वा पञ्चकोशः ।**
**न वाक् पाणिपादौ न चोपस्थपायू चिदानन्दरूपः शिवोऽहं शिवोऽहम् ॥**

ந ச ப்ராண ஸம்ஜ்ஞோ நவை பஞ்ச வாயுர்-
நவா ஸப்த தாதுர் நவா பஞ்ச கோம்ʼ: ।
ந வாக் பாணி பாதௌ ந சோபஸ்த பாயூ
சிதானந்தரூப: ம்ʼிவோ2ஹம் ம்ʼிவோ3ஹம் ॥

**प्राणसंज्ञः च**-பிராணன் என்ற பெயருள்ளதும், **न**-(நான்) அல்ல, **पञ्चवायुः वै**-ஐந்துவித வாயுவும், **न**-அல்ல, **सप्तधातुः वा**-ஏழுவித தாதுக்களும், **न**-அல்ல, **पञ्चकोशः वा**-ஐந்து கோசங்களும், **न**- அல்ல. **वाक्**-வாக்கு, **न**-அல்ல, **पाणिपादौ**-கையும் (அல்ல), காலும் (அல்ல), **उपस्थपायू च**-உபஸ்தமும் பாயுவும் **न**-அல்ல, **चिदानन्दरूपः**-ஞானானந்தஸ்வரூபரான, **शिवः**-மங்களரூபியான பரமாத்மா, **अहं**-நான், **शिवः**-மங்களரூபியான பரமாத்மா, **अहं**-நான்.

பிராணன் என்பதும் (நான்) அல்ல, ஐந்துவிதமான வாயுவும் அல்ல, ஏழுவித தாதுக்களும் அல்ல, ஐந்து கோசங்களும் அல்ல, வாக்கு அல்ல, கையும் அல்ல, காலும் அல்ல, உபஸ்தமும் அல்ல, பாயுவும் அல்ல, ஞானனந்த ஸ்வரூபரான மங்களரூபியான பரமாத்மாவே நான். மங்களரூபியான பரமாத்மாவே நான்.

[ உள்ளிருக்கும் ஆத்மஸ்வரூபத்தை மறைத்துக் கொண்டு கத்தியின் உரைபோல் ஐந்து கோசங்கள் என்ற உபாதிகள் இருக்கின்றன. அவைகளில் மிகவும் வெளியிலுள்ளதும் ஸ்தூலமுமானது இந்த சரீரம் என்கிற மாம்ஸ பிண்டம். அதில் அடங்கியவை ஏழு தாதுக்கள் என்பவை. 1 மஜ்ஜா (தசை) 2 அஸ்தி (எலும்பு) 3. மேதஸ் (கொழுப்பு) 4 பலம் (மாம்ஸம்) 5 ரக்தம் (இரத்தம்) 6 சர்ம (தோல்) 7 த்வக் (உள் தோல்). ஜடமாய் அசுத்தமாயிருக்கும் இவை எதுவும் ஆத்மாவாக இருக்கமுடியாது. இவைகளைச் சேர்த்தே செய்யப்பட்டிருக்கும் அன்னமய கோசமென்ற ஸ்தூல சரீரம் ஆத்மாவாக இருக்கமுடியாது. இந்த கோசத்திற்குள் ஸூக்ஷ்மமாக இருந்துகொண்டு இந்த ஸ்தூல சரீரத்தை சேஷ்டிக்கும்படிச் செய்யும் இரண்டாவதுகோசத்தை பிராணமய கோசம் என்று சொல்வார்கள். அதுவும் வாயுவின் விகாரமேயானதால் ஜடம்தான். அது செய்யும் வேலைகளிலுள்ள வித்தியாஸத்தினல் அது ஐந்துவிதமாகும். 1. உள்ளிருக்கும் காற்றை வெளியில் தள்ளும்போது பிராணன், 2. வெளியிலுள்ள காற்றை உள்ளே இழுக்கும்போது அபானன், 3. சரீரம் பூராவும் வியாபித்திருப்பது வியானன், 4. மேல்கிளம்ப ஸித்தமாயிருப்பது உதானன், 5. சரீரத்திலுள்ள அந்தந்த பாகங்களுக்கு வேண்டிய பதார்த்தங்களைக் கொண்டுபோய் சேர்ப்பது ஸமானன். எப்படியும் எல்லாம் வாயுவின் விகாரமாகவே இருப்பதால் பொதுவான பிராணனே, தனித்தனி வேலை செய்யும் ஐந்துவித வாயுக்களோ ஆத்மாவாக இருக்கமுடியாது. இந்த பிராணமய கோசத்தில் பிராணனே முக்யமாயிருந்தபோதிலும், அதன் ஸஹாயத்தினல்தான் முன் சொன்ன கர்மேந்திரியங்கள்

சேஷ்டிக்கிறபடியால், அந்த வாக், பாணி, பாதம், பாயு, உபஸ்தம் என்கிற ஐந்து கர்மேந்திரியங்களும் ஆத்மாவல்ல. பிராணமய கோசத்திற்கும் உள்ளே அதையும்விட ஸூக்ஷ்மமாக, ஆலோசனை செய்யும் மனஸும் ஞானேந்திரியங்களும் சேர்ந்து மனோமய கோசம் என்ற மூன்றாவது கோசம் இருக்கிறது. மனோமய கோசத்திற்கும் உள்ளே, அதையும் விட ஸூக்ஷ்மமாக, தீர்மானிக்கும் தன்மையுள்ள புத்தியும், ஞானேந்திரியங்களும் சேர்ந்து விஞ்ஞானமய கோசம் என்ற நான்காவது கோசமாகும். அதற்கும் உள்ளே, அதையும்விட ஸூக்ஷ்மமாக, மனஸ், புத்தி இந்திரியங்கள் எல்லாம் அடங்கியிருக்கிற காலமாகிய நல்ல தூக்க சமயத்தில் ஒன்றும் தெரியவில்லையென்று கூறுவதால் அக்ஞானரூபமாகவும், ஸுகமாய்த் தூங்கினேன் என்று சொல்லிக்கொள்வதால் ஆனந்தரூபமாகவும், அனுபவிக்கப்படுகிறதும் எல்லா ஸம்ஸ்காரங்களையும் தன்னிடம் அடக்கிக்கொண்டிருக்கிறதுமான காரண சரீரம் என்ற ஆனந்தமய கோசம் ஐந்தாவது கோசமாகும். இவ்வைந்து கோசங்களும் ஜடமாயிருந்து ஆத்மாவை மறைக்கின்றனவே தவிர அவைகள் ஆத்மாவாக இருக்கமுடியாது. இவைகளுக்கெல்லாம் விலக்ஷணமாக இருந்துகொண்டு பிரகாசிக்கிற வஸ்துவே ஆத்மா.] (2)

न मे द्वेषरागौ न मे लोभमोहौ
मदो नैव मे नैव मात्सर्यभावः ।
न धर्मो न चार्थो न कामो न मोक्षः
चिदानन्दरूपः शिवोऽहं शिवोऽहम् ॥ ३ ॥

ந மே த்வேஷ ராகௌ ந மே லோப மோஹௌ
மதோ நைவ மே நைவ மாத்ஸர்ய பாவ: ।
ந தர்மோ ந சார்த்தோ ந காமோ ந மோக்ஷ:
சிதானந்தரூப: ஶிவோऽஹம் ஶிவோऽஹம் ॥

मे-எனக்கு, द्वेषरागौ-வெறுப்பும் விருப்பமும், न-கிடையாது. मे-எனக்கு, लोभमोहौ-பேராசையும் மோஹமும்

न-கிடையாது. मे-எனக்கு, मदः-திமிரானது, नैव-கிடையவே கிடையாது. मात्सर्यभावः-பொருமையும், नैव-கிடையவே கிடையாது. धर्मः-தர்மமும், न-கிடையாது अर्थः च- அர்த்த மும், न-கிடையாது. कामः-காமமும், न-கிடையாது. मोक्षः-மோக்ஷமும், न-கிடையாது. चिदानन्दरूपः-ஞானனந்தரூபி யான, शिवः-மங்களமான பரமாத்மாவே, अहं-நான். शिवः-மங்களமான பரமாத்மாவே, अहं-நான்.

எனக்கு வெறுப்பும் கிடையாது, விருப்பமும் கிடை யாது. எனக்குப் பேராசையும் கிடையாது. மோஹமும் கிடையாது. மதம் (திமிர்) கிடையவே கிடையாது, பொருமையும் கிடையவே கிடையாது. தர்மமும் கிடை யாது, அர்த்தமும் கிடையாது, காமமும் கிடையாது, மோக்ஷமும் கிடையாது. ஞானனந்த ஸ்வரூபராய் மங்கள ரூபியான பரமாத்மாவே நான். மங்கள ரூபியான பரமாத் மாவே நான்.

[ஆத்மா மனஸ் இல்லையென்று முதல் சுலோகத்திலும், பஞ்சகோசத்தில் அடங்கிய மனோமய கோசமும் இல்லை என்று இரண்டாவது சுலோகத்திலும், சொல்லிவிட்டபடி யால் அந்த மனஸ்ஸைச் சேர்ந்த ஷட் ஊர்மிகள் என்று சொல்லப்படும் அலைகள்போல மனஸ்ஸை ஸஞ்சரிக்கச் செய்யும் ராகம் (விருப்பம்), த்வேஷம் (வெறுப்பு), லோபம் (பேராசை), மோஹம் (மயங்குதல்), மதம் (திமிர்), மாத் ஸர்யம் (பொருமை), என்று ஆறுவிதமான மனோவிகாரங் களும் ஆத்மாவிற்குக் கிடையாது என்பது நிச்சயம். ஆத்மாவின் ஸ்வரூபமே ஆனந்தமாயிருப்பதால் அவருக்கு வேருக ஒரு ஆனந்தமிருப்பதாக நினைத்துத் தேடவேண்டிய அவசியம் கிடையாது. அநித்யமான ஸுகத்திலோ அதற்கு ஸாதனமான அர்த்தத்திலோ ஆத்மாவிற்கு நோக்கம் இருக்க முடியாது. நித்ய ஸுகமான மோக்ஷமும் ஆத்மாவின் தன்மையேயானதினுல் புதிதாக ஸம்பாதிக்க வேண்டிய தில்லை. அர்த்தம், காமம், மோக்ஷம் இம் மூன்றுக்குமே ஸாதனமாயிருக்கிற தர்மத்தை ஆசிரயிக்கவேண்டிய அவசியமும் இல்லை. இவ்விதமாக, ஸாதாரணமாக உலகத்

தில் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம், என்று சொல்லப் படுகிற நான்கு புருஷார்த்தங்களினுல் அடையத்தக்கது ஆத்மாவிற்கு ஒன்றும் கிடையாது ] (3)

न पुण्यं न पापं न सौख्यं न दुःखं
न मन्त्रो न तीर्थं न वेदा न यज्ञाः ।
अहं भोजनं नैव भोज्यं न भोक्ता
चिदानन्दरूपः शिवोऽहं शिवोऽहम् ॥ ४ ॥

ந புண்யம் ந பாபம் ந ஸௌக்யம் ந துஃக்கம்
ந மந்த்ரோ ந தீர்த்தம் ந வேதா ந யஜ்ஞாஃ ।
அஹம் போஜனம் நைவ போஜ்யம் ந போக்தா
சிதாநந்தரூபஃ ஶிவோऽஹம் ஶிவோऽஹம் ॥.

(எனக்கு) **पुण्यं**-புண்ணியம், **न**-கிடையாது, **पापं**-பாபம், **न**-கிடையாது, **सौख्यं**-ஸுகம், **न**-கிடையாது, **दुःखं**-துக்கம், **न**-கிடையாது. **मन्त्रः**-மந்திரம் (ஜபம் முதலானது), **न**-கிடையாது, **तीर्थं**-தீர்த்தம் (தீர்த்தஸ்நாநம் முதலானது), **न**-கிடையாது, **वेदाः**-வேதங்கள் (வேதாத்ய்யனம்), **न**-கிடையாது, **यज्ञाः**-யக்ஞங்கள் (வைதிக யாகாதி கர்மானுஷ்டானம்), **न**-கிடையாது. **अहं**-நான், **भोजनं**-அனுபவிக்கும் கிரியை, **नैव**-இல்லவே இல்லை, **भोज्यं**-அனுபவிக்கப்படும் விஷயமும் (இல்லை), **भोक्ता**-அனுபவிக்கிறவனும், **न**-இல்லை. **चिदानन्दरूपः**-ஞானனந்த ஸ்வரூபரான, **शिवः**-மங்களரூபியாயுள்ள பரமாத்மாவே, **अहं**-நான். **शिवः**-மங்களரூபியான பரமாத்மாவே, **अहं**-நான்.

(எனக்கு) புண்ணியமும் கிடையாது, பாபமும் கிடையாது, ஸுகமும் கிடையாது, துக்கமும் கிடையாது, மந்திரம் (ஜபம் முதலானது) கிடையாது, தீர்த்தம் (தீர்த்தஸ்நாநம் முதலானது) கிடையாது, வேதங்கள் (வேதாத்யயனம்) கிடையாது, யக்ஞங்கள் (வைதிகயாகாதி கர்மாநுஷ்டானம்) கிடையாது, நான் அனுபவிக்கும் கிரியை இல்லை, அனுபவிக்

கப்படும் விஷயமும் இல்லை. அனுபவிக்கிறவனும் இல்லை, ஞானனந்த ஸ்வரூபராய் மங்கள ரூபியாயுள்ள பரமாத்மாவே நான். மங்கள ரூபியாயுள்ள பரமாத்மாவே நான்.

[ஆத்மாவிற்கு தர்மம் இல்லையானல் அதர்மமும் இடையாதுதான். தர்மாதர்மங்கள் இல்லாதபோது அவைகளால் முறையே ஏற்படும் புண்ணிய பாபங்களும் கிடையாது, புண்ணிய பாபங்களின் பலனை ஸுகதுக்கங்களும் கிடையாதுதான். எப்பொழுது புண்ணியம் கிடையாதோ அப்பொழுது அதற்கு ஸாதனமான மந்திர ஜபம், தீர்த்தாடனம், வேதாத்யயனம், யாகாதி அனுஷ்டானம் இவைகளும் இல்லை. புண்ணியம் பாபம் இரண்டும் இல்லையென்றும், அவைகளின் பலனை ஸுகம் துக்கம் இரண்டும் இல்லையென்றும் ஆகிவிட்டதால் அவைகளின் அனுபவமே இருக்க நியாயமில்லை. அனுபவமே இல்லாதபோது அனுபவிக்கப்படும் பதார்த்தம், அனுபவிக்கிறவன் என்ற வியவஹாரத்திற்கு இடம் ஏது?] (4)

न मृत्युर्न शङ्का न मे जातिभेदः
पिता नैव मे नैव माता च जन्म ।
न बन्धुर्न मित्रं गुरुर्नैव शिष्यः
चिदानन्दरूपः शिवोऽहं शिवोऽहम् ॥ ५ ॥

ந ம்ருத்யுர் ந ஶங்கா ந மே ஜாதிபேத:
பிதா நைவ மே நைவ மாதா ச ஜன்ம ।
ந பந்துர் ந மித்ரம் குருர் நைவ ஶிஷ்ய:
சிதாநந்தரூப: ஶிவோऽஹம் ஶிவோऽஹம் ॥

मे–எனக்கு, मृत्युः–மிருத்யு, न–கிடையாது, शङ्का–ஸந்தேஹம், न–கிடையாது, जातिभेदः–ஜாதி வேற்றுமை, न–கிடையாது. पिता–தந்தையும், नैव–கிடையவே கிடையாது, मे–எனக்கு, माता–தாயும், नैव–கிடையவே கிடையாது. जन्म च–பிறவியும் (கிடையாது.) बन्धुः–உறவினரும், न–

கிடையாது, मित्रं-ஸ்நேஹிதனும், न-கிடையாது. गुरुः-குருவும் (கிடையாது), शिष्यः-சிஷ்யனும், नैव-கிடையவே கிடையாது. चिदानन्दरूपः-ஞானனந்த ஸ்வரூபியாய், शिवः-மங்களஸ்வரூபியாயுள்ள பரமாத்மாவே, अहं-நான். शिवः-மங்களரூபியாயுள்ள பரமாத்மாவே, अहं-நான்.

எனக்கு மிருத்யு கிடையாது, ஸந்தேஹம் கிடையாது, ஜாதி வேற்றுமை கிடையாது, தந்தையும் கிடையாது, தாயும் கிடையாது. பிறவியே கிடையாது. பந்துவும் கிடையாது, ஸ்நேஹிதனும் கிடையாது. குருவும் கிடையாது, சிஷ்யனும் கிடையாது. ஞானனந்த ஸ்வரூபியாய் மங்கள ரூபியாயுள்ள பரமாத்மாவே நான். மங்கள ரூபியாயுள்ள பரமாத்மாவே நான்.

[ஆத்ம ஸ்வரூபத்தை அனுபவிக்கும் நிலையில் நான் சரீரமில்லை என்ற தீர்மானமுள்ளபடியால் அந்த சரீரத்தை ஒட்டின பிறவி, சாவு என்பதும் ஆத்மாவிற்குக் கிடையாது பிறவியே இல்லாதபோது தாய் ஏது, தந்தை ஏது, ஜாதி பேதம் ஏது? பிறவியே இல்லாதபோது பந்துக்கள், ஸ்நேஹிதர்கள் என்ற வியவஹாரம் ஏது? ஞான ஸ்வரூபனுயிருக்கும் ஆத்மாவிற்கு ஸந்தேஹம் ஏது? ஸந்தேஹத்தை நிவிருத்தி செய்வித்து தத்வோபதேசம் செய்யத்தான் குரு எதற்கு? இரண்டாவது பதார்த்தமே இருப்பதாகத்தோன்ருத நிலையில் சிஷ்யன் தான் ஏது?] (5)

अहं निर्विकल्पो निराकाररूपो विभुत्वाच्च सर्वत्र सर्वेन्द्रियाणाम् ।
न चासंगतं नैव मुक्तिर्न बन्धः चिदानन्दरूपः शिवोऽहं शिवोऽहम् ॥

அஹம் நிர்விகல்போ நிராகார ரூபோ
விபுத்வாச்ச ஸர்வத்ர ஸர்வேந்த்ரியாணும் ।
ந சாஸங்கதம் நைவ முக்திர் ந பந்த:
சிதானந்தரூப: ஶிவோऽஹம் ஶிவோऽஹம் ॥

अहं-நான், निर्विकल्पः-(அப்படியோ இப்படியோ என்று) ஸந்தேஹிப்பதற்கு இடமில்லாதவன், सर्वत्र-எல்லா பதார்த்

தங்களிலும், विभुत्वाच्च-வியாபித்திருப்பதினுலேயே, निराकार-रूपः-(சொந்தமான) உருவமற்றவன். सर्वेन्द्रियाणां-எல்லா இந்திரியங்களுடன் (வாஸ்தவத்தில் ஸம்பந்தப்படாமல் இருந்தபோதிலும்), असंगतं च (वस्तु)-சேராமலிருக்கும் வஸ்துவும், न-இல்லை. (எனக்கு) मुक्तिः-மோக்ஷமென்பது, नैव-கிடையாது, बन्धः-பந்தமென்பதும், न-கிடையாது. चिदानन्दरूपः-ஞானனந்தஸ்வரூபியாய், शिवः-மங்களரூபியாயுள்ள பரமாத்மாவே, अहं-நான், शिवः-மங்களரூபியாயுள்ள பரமாத்மாவே, अहम् -நான்.

நான் (அப்படியோ இப்படியோவென்று) ஸந்தேஹிப்பதற்கு இடமில்லாதவன், எல்லாப் பதார்த்தங்களிலும் வியாபித்திருப்பதினுலேயே (சொந்தமான) உருவமற்றவன். எல்லா இந்திரியங்களுடனும் (வாஸ்தவத்தில் ஸம்பந்தப்படாமல் இருந்தபோதிலும்) சேராமலிருக்கும் வஸ்துவும் இல்லை. (எனக்கு) மோக்ஷம் என்பது கிடையாது, பந்தம் என்பதும் கிடையாது. ஞானனந்த ஸ்வரூபியாய் மங்களரூபியாயுள்ள பரமாத்மாவே நான். மங்களரூபியாயுள்ள பரமாத்மாவே நான்.

[நான் இருக்கிறேனு, இல்லையா, நான் அறிவுள்ளவனு, அறிவில்லாதவனு, என்றெல்லாம் யாருக்கும் ஸந்தேஹம் ஏற்படாததினுல் ஆத்மா எல்லோருக்கும் பிரஸித்தமான வஸ்துவேயாகும். தவிரவும் எல்லாப் பதார்த்தங்களிலும் வியாபித்துக்கொண்டு அந்தந்த பதார்த்தங்களுடைய ரூபத்திலேயே பிரகாசிக்கிறபடியால், தனக்கென்று வாஸ்தவத்தில் ஒரு ரூபமும் இல்லாவிட்டாலும் எல்லாருக்கும் நன்கு பிரஸித்தமான வஸ்துவேயாகும். அப்படியே ஆத்மாவிற்கு கை, கால், கண், காது முதலிய இந்திரியங்கள் இல்லாமல் போனுலும் அந்தந்த இந்திரியங்களுடன் சேர்ந்திருப்பதுபோல் பிரகாசித்துக் கொண்டிருப்பதினுலும் எல்லாருக்கும் பிரஸித்தமான வஸ்துவேயாகும். சரீரம், இந்திரியம், மனஸ் முதலான உபாதிகளுடன் ஸம்பந்தப்

பட்டிருக்கும் நிலையில்தான் ஸுக துக்கானுபவ ரூபமான ஸம்ஸாரம் உண்டு. அவ்விதம் ஸம்பந்தப்பட்டிருப்பதாகத் தோன்றும் தசையே கல்பிதம், வாஸ்தவமில்லை, என்று உணர்ந்துகொண்டவனுக்கு அந்த ஸுக துக்க ரூபமான ஸம்ஸாரம் கிடையாது. எப்பொழுதும் பந்தத்திற்கு உட்படாமல் இருக்கும் தன்மையே ஆத்மாவினுடையது. அறியப்படும் பதார்த்தங்களை எதிர்பாராமல் கேவலம் அறிவு ஸ்வரூபியாயும், ஸுகத்தைக் கொடுக்கும் பதார்த்தங்களென்று தோன்றும் யாவற்றையும் எதிர்பாராமல் தானே நிரதிசயமான ஸுக ரூபியாயும், அஞ்ஞானம் துக்கம் என்ற அசுபங்கள் ஒரு பொழுதும் ஒட்டாத ஸர்வோத்கிருஷ்டமான மங்களரூபியாயும் இருந்துவரும் ஸச்சிதானந்த ஸ்வரூபியான பரமாத்மாவேதான் நான்.] (6)

நிர்வாண ஷட்கம் முற்றும்.



|| श्रीः ||

# || स्वरूपानुसन्धानाष्टकम् ||

## ஸ்வரூபானுஸந்தானுஷ்டகம்

[தன்னுடைய வாஸ்தவ ஸ்வரூபமான ஸச்சிதாநந்த லக்ஷணத்தோடு கூடிய பரப்ரஹ்மத்திற்கு வேறுபடாத நிலையை அனுஸந்தானம் செய்யும் ரீதியானது இந்த எட்டு சுலோகங்களில் சுருக்கமாக ஸ்ரீமத் ஆசார்யாரால் விளக்கப்படுகிறது. பொதுவாகவே ஒரு விஷயத்தைப்பற்றி அனுஸந்தானம் செய்ய வேண்டுமானுல் அவ்விஷயத்தை நன்கு அறிந்திருக்கும் ஒரு பெரியாரை அண்டி, அவர்மூலமாகத் தெரிந்துகொண்டு, தானும் தன் புத்திக்கு எட்டியவரை அதைப்பற்றிச் சிந்தனை செய்து, தன்னுடையதாக ஆக்கிக்கொள்ள வேண்டும். அப்பெரியாரை அண்டுவதற்குரிய யோக்கியதையை முன்னுலேயே ஸம்பாதித்துக்கொள்ள வேண்டும். ஆத்மஞான விஷயத்தில், முதலில் வேதவிஹிதமான கர்மாக்களை நிஷ்காமமாக அனுஷ்டித்துப் பாபங்களைப் போக்கி, ராகத்வேஷாதிகளில்லாமல் மனஸ்ஸை சுத்தமாகச் செய்துகொண்டு, எது நித்யம் எது அநித்யம் என்று நன்கு விசாரம்செய்து, அநித்யத்திலுள்ள பற்றுதல் யாவற்றையும் விட்டுவிட்டு, நித்யத்தை அறிந்துகொள்ள வேண்டிய ஆவலுடன் நித்யமான பிரஹ்மத்தை அறிந்த ஒருவரிடம் சென்று அவரை ஆராதித்துத் திருப்தி செய்து, அவர்மூலமாய் விஷயத்தை அறியவேண்டும். இவ்விதம் முன்னுல் ஸம்பாதிக்கவேண்டிய ஸாதனங்களைப்பற்றியும், முன்னுல் செய்யவேண்டிய பிரயத்தினங்களைப்பற்றியும் இதன் முதல் இரண்டு சுலோகங்களில் குறிப்பிடுகிருர். பின் உள்ள ஆறு சுலோகங்களில் அனுஸந்தானம் செய்யவேண்டிய முறையைக் காட்டுகிருர். அதன் பின்னுள்ள ஒன்பதாவது சுலோகத்தில் இந்தப் பிரகரணத்தை பக்தியோடு வாசிப்போருக்கும் கேட்போருக்கும் ஏற்படும் உத்தமமான பலனை வர்ணிக்கிருர்.]

तपोयज्ञदानादिभिः शुद्धबुद्धि-
र्विरक्तो नृपादेः पदे तुच्छबुद्ध्या ।

परित्यज्य सर्वं यदाप्नोति तत्त्वं
परं ब्रह्म नित्यं तदेवाहमस्मि ॥ १ ॥

தபோ யஜ்ஞ தாநாதிபி: ஶுத்த புத்திர்
விரக்தோ ந்ருபாதே: பதே துச்ச புத்த்யா ।
பரித்யஜ்ய ஸர்வம் யதாப்நோதி தத்வம்
பரம் ப்ரஹ்ம நித்யம் ததேவாஹமஸ்மி ॥

**तपोयज्ञदानादिभिः**–தபஸ், யக்ஞம், தானம் முதலானவைகளை அனுஷ்டானம் செய்வதினுல், **शुद्धबुद्धिः**–பரிசுத்தமான புத்தியோடு கூடியவனுகி, **नृपादेः**-அரசன் முதலானவர்களுடைய, **पदे**-ஸ்தானத்தில், **तुच्छबुद्ध्या**–பிரயோஜனமற்ற தோற்றம் என்கிற எண்ணத்தினுல், **विरक्तः**–வைராக்யத்தை அடைந்து, **सर्वं**-எல்லாவற்றையும், **परित्यज्य**-நன்கு விட்டு விட்டு, **तत्त्वं**-வாஸ்தவமாய், **परं**-உத்கிருஷ்டமாய், **नित्यं**-சாசுவதமாயுள்ள, **यत्**-எந்த, **ब्रह्म**-பிரஹ்மத்தை, **आप्नोति**-ஒருவன் அடைகிருனே, **अहं**-நான், **तदेव**-அதுவாகவே, **अस्मि**–இருக்கிறேன்.

தபஸ், யக்ஞம், தானம் முதலானவைகளை அனுஷ்டானம் செய்வதினுல் பரிசுத்தமான புத்தியோடு கூடியவனுகி, அரச பதவி முதலியவற்றில் பிரயோஜனமற்ற தோற்றம் என்கிற எண்ணத்தினுல் வைராக்கியத்தை அடைந்து, எல்லாவற்றையும் நன்கு விட்டுவிட்டு, வாஸ்தவமாய் உத்கிருஷ்டமாய் சாசுவதமாயுள்ள எந்த பிரஹ்மத்தை ஒருவன் அடைகிருனே, நான் அதுவாகவே இருக்கிறேன்.

[பாபமும் பாப புத்தியும் இருக்கும்வரை மனஸ் அழுக்கடைந்தே இருக்குமாதலால், ஆத்மா அங்கு பிரதிபலிக்காது; அதாவது ஆத்மஞானம் ஏற்படாது. அதற்காக முதலில் தபஸ், யக்ஞம், தானம், வேதாத்யயனம் முதலான விஹித கர்மாக்களை எவ்வித ஆசையுமன்னியில் அனுஷ்டித்துவர வேண்டும். அதன்பலனுக மனஸ் சுத்தமான பிறகு நித்திய ஸுகத்தையடையக் கருதி எல்லா அநித்ய

ஸங்கங்களிலும் வைராக்யமடைந்து அவைகளிலிருந்து விலகிவிட வேண்டும். இவ்விதம் ஆரம்பித்து கிரமமாய் மேல் மேல் சென்றால் கடைசியில் நிர்திசயமான பிரஹ்ம ஸ்வரூபம் தென்படும். அதுதான் வாஸ்தவத்தில் நான் என்று சொல்லப்படுகிற ஆத்மாவின் ஸ்வரூபம்.] (1)

दयालुं गुरुं ब्रह्मनिष्ठं प्रशान्तं
समाराध्य मत्या विचार्य स्वरूपम् ।
यदाप्नोति तत्त्वं निदिध्यास्य विद्वान्
परं ब्रह्म नित्यं तदेवाहमस्मि ॥ २ ॥

தயாளும் குரும் ப்ரஹ்ம நிஷ்டம் ப்ரசாந்தம்
ஸமாராத்ய மத்யா விசார்ய ஸ்வரூபம் ।
யதாப்நோதி தத்வம் நிதித்யாஸ்ய வித்வான்
பரம் ப்ரஹ்ம நித்யம் ததேவாஹமஸ்மி ॥

**दयालुं**-தயை நிறைந்தவராய், **प्रशान्तं**-நன்கு சாந்தராய், **ब्रह्मनिष्ठं**-பிரஹ்மத்தில் நிலைத்தவராயுள்ள, **गुरुं**-குருவை, **समाराध्य**-நன்கு ஆராதித்து, **स्वरूपं**-தன்னுடைய ஸ்வரூபத்தை, **मत्या**-புத்தியினால், **विचार्य**-விசாரித்து, **निदिध्यास्य**-நன்கு தியானம் செய்து, **विद्वान्**-அறிந்து கொண்டவர், **तत्त्वं**-வாஸ்தவமாய், **परं**-உத்கிருஷ்டமாய், **नित्यं**-சாசுவதமாயுள்ள **यत्**-எந்த, **ब्रह्म**-பிரஹ்மத்தை, **आप्नोति**-அடைகிறாரோ, **अहं**-நான், **तदेव**-அதுவாகவே **अस्मि**-இருக்கிறேன்.

தயாளுவாய் நன்கு சாந்தராய் ப்ரஹ்மத்தில் நிலைத்தவராயுள்ள குருவை நன்கு ஆராதித்து, தன்னுடைய ஸ்வரூபத்தை புத்தியினால் விசாரம் செய்து, நன்கு தியானம் செய்து, அறிந்துகொண்டவர் வாஸ்தவமாய் உத்கிருஷ்டமாய் சாசுவதமாயுள்ள எந்த பிரஹ்மத்தை அடைகிறாரோ அதுவே நான்.

[ஆத்மஞானமடைந்தவர்களில் சிலர் ஜகத்து வெறும் தோற்றமென்று ஸாக்ஷியாகவிருந்து பார்த்துக்கொண்டிருப்

பார்கள், சிலர் அந்தத் தோற்றம்கூட இல்லாமல் சில ஸமயம் பிரஹ்மத்திலேயே ஈடுபட்டு ஸமாதி நிலையிலும், சில ஸமயம் தாளுக வெளிப்பட்டு ஜகத்தைத் தோற்றமென்று பார்த்துக்கொண்டும் இருப்பர். சிலர் ஸமாதி நிலையி லிருந்து தாளுக எழுந்திருக்காமல் மற்றவர்களால் எழுப்பப் படுவார்கள். மற்றும் சிலர் ஸமாதிநிலையிலிருந்து தாளுக வும் எழுந்திருக்காமல், மற்றவர்களாலும் எழுப்பமுடியாத நிலையில் இருந்துவிடுவார்கள். இவ்விதம் பிரஹ்மவித், பிரஹ்மவித்வரன், பிரஹ்மவித்வரீயான், பிரஹ்மவித் வரிஷ்டன் என்கிற நால்வருமே பிரஹ்மநிஷ்டர்களாக இருந்தபோதிலும், ஸமாதி நிலையிலிருந்து வெளிப்படாமலே இருக்கும் பிரஹ்மவித்வரிஷ்டனுக்கு பிரபஞ்சம் தோன்ருத திளுல் தன்னையண்டி ஒரு சிஷ்யன் வந்திருக்கிருன் என்ற பாவனையே அவனுக்கு ஏற்படாததிளுல், அவர் உபதேசம் செய்யக்கூடிய குருவாகமாட்டார். மற்ற மூவர்கள்தான் உலகத் தோற்றமிருக்கும் ஸமயத்தில் குருவாக இருந்து உபதேசம்செய்ய முடியும். அவர்களிலும் சிலர் ஒன்றும் தெரியாத பாலர்போலவும், பைத்தியம் பிடித்தவர்போல வும், பிசாசுபோலவும் இருப்பார்கள் என்று சாஸ்திரம் சொல்கிறபடியால், அவர்களிடம் நெருங்கி உபதேசம் பெற்றுக்கொள்ளும்படி தோன்ருது. ஆகையால் அவர் மிகவும் சாந்தரூபராகவும் இருக்கவேண்டும். ஒருவருக்கு ஆத்ம ஞானமிருந்தும் அக்ஞானிகளின் மனோநிலைக்குத் தக்கபடி போதிக்கும் சக்தி இல்லாமலிருக்கலாம். ஆகையால் சிஷ்ய னுடைய அக்ஞானத்தைப் போக்கடிக்கக்கூடிய முறையில் உபதேசம்செய்ய வல்லமையுடன் இருக்கவேண்டும். அவரே குரு என்பப்படுவார். இவ்வளவு இருந்தும், வந் திருக்கும் சிஷ்யனிடம் அனுக்ரஹ புத்தி ஏற்படாமலிருந்தால் பிரயோஜனம் இல்லையாதலிளுல், அவர் தயாளுவாகவும் இருக்கவேண்டும். அவ்விதமான குருவைத் தேடியடைந்து, அவரை நமஸ்கரித்து, அவருக்கு சுசுரூஷைசெய்து திருப்தி செய்வித்து, தன்னுடைய நிலையை அவரிடம் நன்கு தெரியப்படுத்தி, தனக்கு வேண்டியதைப் பிரார்த்தித்துக் கேட்டுக்கொண்டு, அவருடைய கருணையிளுல் தத்வோப

தேசம்பெற வேண்டும். அவர் உபதேசித்த விஷயத்தைத் தன் புத்தியினுலும் இடைவிடாது ஆராய்ந்து உறுதிப் படுத்திக்கொள்ள வேண்டும். இவ்விதம் உபதேசத்தினுலும் விசாரத்தினுலும் திடப்பட்டிருக்கும் விஷயத்தை இடை விடாமல் மனஸில் திரும்பத் திரும்ப தியானம் செய்து கொண்டு வரவேண்டும். அதன்பிறகே தத்வஸ்வரூபம் நன்கு விளங்கும். அப்பொழுது தன்னுடைய வாஸ்தவமான ஸ்வரூபம் பரப்பிரஹ்மமே என்ற அனுபவம் ஏற்படும்.] (2)

**यदानन्दरूपं प्रकाशस्वरूपं निरस्तप्रपञ्चं परिच्छेदहीनम् ।**
**अहंब्रह्मवृत्त्येकगम्यं तुरीयं परं ब्रह्म नित्यं तदेवाहमस्मि ॥ ३ ॥**

யதாநந்தரூபம் ப்ரகாஶ ஸ்வரூபம்
நிரஸ்த ப்ரபஞ்சம் பரிச்சேத ஹீநம் ।
அஹம்ப்ரஹ்மவ்ருத்த்யேக கம்யம் துரீயம்
பரம் ப்ரஹ்ம நித்யம் ததேவாஹமஸ்மி ॥

**यत्**-எது, **आनन्दरूपं**-ஆனந்த ரூபமாயும், **प्रकाशस्वरूपं**-பிரகாசஸ்வரூபமாயும், **निरस्तप्रपञ्चं** பிரபஞ்சத்திற்கு அதீதமாயும், **परिच्छेदहीनं**-எவ்விதப்பிரிவுமற்றதாயும், **अहंब्रह्मवृत्त्येकगम्यं**-நான் பிரஹ்மம் என்கிற விருத்தியினுலேயே அறியக் கூடியதாயும், **तुरीयं**- நான்காவதாயும், **परं**- உத்கிருஷ்டமாயும், **नित्यं**-சாசுவிதமாயுமுள்ள, **ब्रह्म**-பிரஹ்மமோ, **अहं**-நான் **तदेव**-அதாகவே, **अस्मि**-இருக்கிறேன்.

எது ஆனந்தரூபமாயும், பிரகாச ஸ்வரூபமாயும், பிரபஞ்சத்திற்கு அதீதமாயும், எவ்விதப் பிரிவுமற்றதாயும், 'நான் பிரஹ்மம்' என்கிற விருத்தியினுல் மாத்திரம் அறியக் கூடியதாயும், நான்காவதாயும், உத்கிருஷ்டமாயும், சாசுவதமாயுமுள்ள பிரஹ்மமோ அதுவே நான்.

[கேவலம் ஞானஸ்வரூபமாயும் ஆனந்த ஸ்வரூபமாயும் இருக்கிற ஆத்ம தத்வத்தில் காலத்தினுலோ, தேசத்தினுலோ, வஸ்துவினுலோ ஏற்படக்கூடிய குறுகிய அளவு கிடையாது. இதெல்லாம் பிரபஞ்சத்தில்தான் உண்டு,

பிரபஞ்சமாகிற அநாத்ம பதார்த்தத்திலிருந்து விலக்கி எடுத்த ஆத்மஸ்வரூபம் ஸர்வ வியாபகமான பிரஹ்மமே என்கிற ஞானம் ஏற்படும். அந்த சுத்தமான ஆத்ம ஸ்வரூபம் ஜாக்கிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளுக்கு உட்பட்டதில்லையாதலாலும், ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்கிற முக்குணங்களுக்கும் மேலுள்ளதாலும், அதை "நான்காவது" என்று சாஸ்திரத்தில் வியவஹரிக்கிருர்கள். வாஸ்தவமாக எல்லாமாகத் தோன்றுவதும் அதுவே.] (3)

**यदज्ञानतो भाति विश्वं समस्तं विनष्टं च सद्यो यदात्मप्रबोधे ।**
**मनोवागतीतं विशुद्धं विमुक्तं परं ब्रह्म नित्यं तदेवाहमस्मि ॥ ४ ॥**

யதக்ஞானதோ பாதி விச்வம் ஸமஸ்தம்
விநஷ்டம் ச ஸத்யோ யதாத்ம ப்ரபோதே ।
மனோவாகதீதம் விசுத்தம் விமுக்தம்
பரம் ப்ரஹ்ம நித்யம் ததேவாஹமஸ்மி ॥

**यदज्ञानतः**-எதை அறியாததினால், **समस्तं**-எல்லா, **विश्वं**-பிரபஞ்சமும், **भाति**-தோன்றுகிறதோ, **यदात्मप्रबोधे**-எதனுடைய ஸ்வரூபம் அறியப்படும்போது, **सद्यः**-உடனேயே (அந்தபிரபஞ்சம்) **विनष्टं च**-மறைந்தும் விடுகிறதோ, (எது) **मनोवागतीतं**-மனதிற்கும் வாக்குக்கும் எட்டாததாய், **विशुद्धं**-நன்கு சுத்தமாய், **विमुक्तं**-(எல்லாக் கட்டுப்பாடுகளிலிருந்தும்) விடுபட்டதோ, **तत्**-அந்த, **परं**-உத்கிருஷ்டமான, **नित्यं**-சாசுவதமான, **ब्रह्म एव**-பிரஹ்மமாகவே, **अहं**-நான், **अस्मि**-இருக்கிறேன்.

எதை அறியாததினால் எல்லாப் பிரபஞ்சமும் தோன்றுகிறதோ, எதனுடைய ஸ்வரூபம் அறியப்படும்போது உடனேயே (அந்தப் பிரபஞ்சம்) மறைந்துவிடுகிறதோ, (எது) மனதிற்கும் வாக்குக்கும் எட்டாததாய், நன்கு சுத்தமாய், (எல்லாக் கட்டுப்பாடுகளிலிருந்தும்) விடுபட்டதோ, அந்த உத்கிருஷ்டமான சாசுவதமான பிரஹ்மமே நான்.

[வாஸ்தவமாக இருக்கும் கயிறு தெரியாததினுல் பாம்பு தோன்றுவதுபோலவும், கயிறு தெரிந்தவுடன் பாம்பு மறைவதுபோலவுமே பிரஹ்மத்தினிடத்தில் ஜகத்தின் தோற்றமும் மறைதலும். மனஸ், வாக்கு இவ்விரண்டும் ஜகத்திலுள்ள பதார்த்தங்களை விஷயீகரிக்குமே தவிர, பிரஹ்மத்தினிடம் செல்லாது]. (4)

**निषेधे कृते नेति नेतीति वाक्यैः समाधिस्थितानां यदाभाति पूर्णम् ।**
**अवस्थात्रयातीतमद्वैतमेकं परं ब्रह्म नित्यं तदेवाहमस्मि ॥ ५ ॥**

நிஷேதே க்ருதே நேதி நேதீதி வாக்யை:
ஸமாதி ஸ்திதாநாம் யதாபாதி பூர்ணம் ।
அவஸ்தாத்ரயாதீதமத்வைதமேகம்
பரம் ப்ரஹ்ம நித்யம் ததேவாஹமஸ்மி ॥

**वाक्यैः**-(உபநிஷத்துகளிலுள்ள) வாக்கியங்களினுல் **इति**-"இவ்விதம்" **न**-"இல்லை", **इति**-"இவ்விதம்" **न**-"இல்லை", **इति**-என்று, **निषेधे कृते**-தடை செய்யப்படும் போது, **समाधिस्थितानां**-ஸமாதிநிலையில் உள்ளவர்களுக்கு **यत्**-எது, **पूर्ण**-பரிபூர்ணமாக, **आभाति**-எங்கும் பிரகாசிக்கிறதோ, **अवस्थात्रयातीतं**-(ஜாக்கிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற) மூன்று அவஸ்தைகளுக்கும் அப்பால்பட்டதாய், **अद्वैतं**-இரண்டற்றதாய், **एकं**-ஒன்ருயும் (எது இருக்கிறதோ) **तत्**-அந்த, **परं**-உத்கிருஷ்டமான, **नित्यं**-சாசுவதமான, **ब्रह्म एव**-பிரஹ்மமாகவே, **अहं**-நான், **अस्मि**-இருக்கிறேன்.

(உபநிஷத்துகளிலுள்ள) வாக்கியங்களினுல் "இவ்விதம் இல்லை, இவ்விதம் இல்லை" என்று தடைசெய்யப்படும் போது ஸமாதி நிலையிலுள்ளவர்களுக்கு எது பரிபூர்ணமாக எங்கும் பிரகாசிக்கிறதோ, (ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளுக்கும் அப்பாற்பட்டதாய், இரண்டற்றதாய், ஒன்ருகவே (எது இருக்கிறதோ) அந்த உத்கிருஷ்டமான சாசுவதமான பிரஹ்மமே நான்.

[பிரபஞ்சத்தில் எது அனுபவத்திற்கு விஷயமானாலும் அது இப்படி, அது இப்படி என்று எடுத்துச்சொல்ல முடியும். அவ்விதம் எடுத்துச்சொல்லக் கூடியதெல்லாம் பிரஹ்மம் அல்ல என்று உபநிஷத் வாக்கியங்கள் சொல்கிறபடியால், பிரபஞ்சத்தில் திருஷ்டியைச் செலுத்தாமல் அதிலிருந்து இழுத்து அந்த திருஷ்டியைத் தனக்குள்ளேயே செலுத்திப் பார்க்கும்போது எல்லாவித விருத்திகளும் நின்று பிரஹ்மாகார விருத்தி ஒன்றுமாத்திரம் நிலைக்கும். அதுவே ஸமாதி எனப்படும். அந்நிலையில்தான் ஆத்மாவின் பரிபூர்ணத் தன்மை நன்கு விளங்கும். ஜாக்கிரத் காலத்தில் சரீரம், மனஸ் முதலிய உபாதிகளினாலும், ஸ்வப்னத்தில் ஸம்ஸ்கார ஸஹிதமான மனஸ் என்கிற உபாதியினாலும், ஸுஷுப்தியில் எல்லாம் ஒடுங்கியிருந்தபோதிலும், நாசம் அடையாமல் அவித்யை என்ற பீஜாவஸ்தை இருப்பதினாலும், இம்மூன்று அவஸ்தைகளிலும் ஆத்மதத்வம் நன்கு விளங்காது. இம்மூன்று அவஸ்தைகளிலும் சேராததான ஸமாதிநிலையில்தான் தனித்து விளங்கும்.] (5)

**यदानन्दलेशैः समानन्दि विश्वं यदाभानसत्त्वे सदाभाति सर्वम् ।**
**यदालोकने रूपमन्यत्समस्तं परं ब्रह्म नित्यं तदेवाहमस्मि ॥ ६ ॥**

யதாநந்த லேசை: ஸமாநந்தி விச்வம்
யதாபாந ஸத்வே ஸதாபாதி ஸர்வம் ।
யதாலோகநே ரூபமந்யத் ஸமஸ்தம்
பரம் ப்ரஹ்ம நித்யம் ததேவாஹமஸ்மி ॥

**यदानन्दलेशैः**–எதனுடைய ஆனந்தத்தின் திவிலைகளால், **विश्वं**–ஜகத்து, **समानन्दि**–நன்கு ஆனந்தத்தோடு கூடினதாக (இருக்கிறதோ), **यदाभानसत्त्वे**–எதனுடைய பிரகாசம் இருக்கும்போது, **सर्वं**–எல்லாம், **सत्**–ஸத்தாக (இருக்கும் பொருளாக) **आभाति**–தோன்றுகிறதோ, **यदालोकने**–எதனுடைய வெளிச்சம் இருக்கும்போது, **अन्यत्**–வேறு, **समस्तं**–எல்லா, **रूपं**–ரூபமும், (**आभाति**–பிரகாசிக்கிறதோ) **तत्**–அந்த, **परं**–உத்கிருஷ்டமான, **नित्यं**–சாசுவதமான, **ब्रह्म एव**–பிரஹ்மமாகவே, **अहं**–நான், **अस्मि** இருக்கிறேன்.

எதனுடைய ஆனந்தத்தின் திவிலைகளால் ஜகத்து நன்கு ஆனந்தத்தோடு கூடினதாக (இருக்கிறதோ), எதனுடைய பிரகாசம் இருக்கும்போது எல்லாம் ஸத்தாகத் தோன்றுகிறதோ, எதனுடைய வெளிச்சம் இருக்கும்போது வேறு எல்லா ரூபமும் பிரகாசிக்கிறதோ, அந்த உத்கிருஷ்டமான சாசுவதமான பிரஹ்மமே நான்.

[ஜகத்தில் ஆனந்தம் இருக்கிறதேயென்றால் அதுவும் ஜகத்திற்கு சொந்தமானதில்லை; ஆனந்த ஸ்வரூபியான பிரஹ்மத்தின் ஆனந்தத்தில் ஒரு துளிதான் ஜகத்தில் தோன்றுகிறது. அப்படியே ஜகத் பிரகாசிக்கிறதே என்றால், அதுவும் ஜகத்திற்குச் சொந்தமில்லை, பிரகாச ஸ்வரூபமாயிருக்கும் பிரஹ்மத்தின் பிரகாசத்தின் சிறிதளவு தான் ஜகத்தில் தோன்றுகிறது. ப்ரஹ்மத்திலுள்ள ஸத்தை தான் பிரபஞ்சத்திலும் தோன்றுகிறது. பிரபஞ்சத்திற்குத் தனியாக ஸத்தை (இருப்பு) கிடையாது.] (6)

अनन्तं विभुं निर्विकल्पं निरीहं शिवं संगहीनं यदोंकारगम्यम् ।
निराकारमत्युज्ज्वलं मृत्युहीनं परं ब्रह्म नित्यं तदेवाहमस्मि ॥ ७ ॥

அநந்தம் விபும் நிர்விகல்பம் நிரீஹம்
ஶிவம் ஸங்க ஹீனம் யதோங்கார கம்யம் ।
நிராகாரமத்யுஜ்வலம் ம்ருத்யு ஹீநம்
பரம் ப்ரஹ்ம நித்யம் ததேவாஹமஸ்மி ॥

अनन्तं–முடிவற்றதாயும், विभुं–வியாபகமாயும், निर्विकल्पं–ஸந்தேஹத்திற்கு இடமில்லாததும், निरीहं–ஆசையற்றதாயும், शिवं–மங்களமாயும், सङ्गहीनं–எவ்விதப் பற்றுமில்லாததாயும், ओंकारगम्यं–பிரணவத்தினுல் அறியத்தக்கதாயும், निराकारं–உருவமற்றதாயும், अत्युज्ज्वलं – நன்கு பிரகாசிக்கிறதாயும், मृत्युहीनं – நாசமற்றதாயும், यत् – எது (இருக்கிறதோ), तत् – அந்த, परं – உத்கிருஷ்டமான, नित्यं – சாசுவதமான, ब्रह्म एव–பிரஹ்மமாகவே, अहं–நான், अस्मि – இருக்கிறேன்.

முடிவற்றதாயும், வியாபகமாயும், ஸந்தேஹத்திற்கு இடமற்றதாயும், ஆசையற்றதாயும், மங்களமாயும், எவ்விதப் பற்றுமில்லாததாயும், பிரணவத்தினுல் அறியத்தக்கதாயும், உருவமற்றதாயும், நன்கு பிரகாசிக்கிறதாயும், நாசமற்றதாயும், எது (இருக்கிறதோ) அந்த உத்கிருஷ்டமான சாசுவதமான பிரஹ்மமே நான்.

[ஸர்வ வியாபியாய் உருவமற்று இருக்கும் வஸ்துவை அறிவதற்கு ஸாதனமென்னவென்றுல், பிரணவத்தை வாசக சப்தமாகவும் பிரதீகமாகவும் வைத்துக்கொள்ளலாமென்று உபநிஷத்தில் கண்டிருக்கிறது.] (7)

यदाऽऽनन्दसिन्धौ निमग्नः
पुमान्स्यादविद्याविलासः समस्तप्रपञ्चः ।
तदा न स्फुरत्यद्भुतं यन्निमित्तं
परं ब्रह्म नित्यं तदेवाहमस्मि ॥ ८ ॥

யதாZZநந்த ஸிந்தௌ நிமக்ந: புமான் ஸ்யாத்
அவித்யா விலாஸ: ஸமஸ்த ப்ரபஞ்ச: ।
ததா ந ஸ்புரத்யத்புதம் யந்நிமித்தம்
பரம் ப்ரஹ்ம நித்யம் ததேவாஹமஸ்மி ॥

**पुमान्**-மனிதன், **यदा**-எப்பொழுது, **आनन्दसिन्धौ**-ஆனந்தமாகிற ஸமுத்திரத்தில், **निमग्नः**-நன்கு மூழ்கினவனுக, **स्यात्**-இருப்பானே, **तदा**-அப்பொழுது, **यन्निमित्तं**-எதன் காரணமாக **अविद्याविलासः**-அக்ஞானத்தின் விலாஸமான, **समस्तप्रपञ्चः**-எல்லா பிரபஞ்சமும், **न स्फुरति**-பிரகாசிக்கிறதில்லை (என்ற) **अद्भुतं**-ஆச்சர்யமான விஷயம் (ஏற்படுகிறதோ), **तत्**-அந்த **परं**-உத்கிருஷ்டமான, **नित्यं**-சாசுவதமான, **ब्रह्म एव**-பிரஹ்மமாகவே, **अहं**-நான், **अस्मि**-இருக்கிறேன்.

மனிதன் எப்பொழுது ஆனந்தமாகிற ஸமுத்திரத்தில் நன்கு மூழ்கினவனுக இருப்பானே, அப்பொழுது எதன்

காரணமாக அக்ஞானத்தின் விலாஸமான எல்லாப் பிரபஞ்சமும் பிரகாசிக்கிறதில்லை என்ற ஆச்சர்யமான விஷயம் ஏற்படுகிறதோ அந்த உத்கிருஷ்டமான சாசுவத மான பிரஹ்மமே நான்.

[ஸமுத்திரத்தில் மூழ்கினுல் கரையிலுள்ள பதார்த்தங் கள் தெரியாமல்போவது நியாயம். ஆத்மாவோ ஆனந்த ஸாகரம். ஆனாலும் அது ஸ்வயம்பிரகாசம், அதில் மூழ்கினுல் எல்லாம் முன்னைவிட நன்ருகவே தெரியவேண்டும். அப்படி இருந்தும் ஜகத்து தெரியாமல் மறைந்தே விடுகிறதென்பது ஆச்சர்யமில்லையா? அவ்விதம் மறைவதற்குக் காரணம் ஜகத்து வாஸ்தவமல்ல, அக்ஞானத்தினுல் தோன்றும் தோற்றமேயாகும் என்பதே. ஆகவே ஞானம் வந்தவுடன் மறைவது நியாயமே. இருட்டு ஸமயத்தில் கயிற்றில் தோன்றின பாம்பு, வெளிச்சம் வந்தவுடன் முன்னைவிட நன்கு தெரிவதில்லை, மறைந்தே விடுகிறது.] (8)

स्वरूपानुसंधानरूपां स्तुतिं यः
पठेदादराद्भक्तिभावो मनुष्यः ।
शृणोतीह वा नित्यमुद्युक्तचित्तो
भवेद्विष्णुरत्रैव वेदप्रमाणात् ॥ ९ ॥

ஸ்வரூபாநுஸந்தாநரூபாம் ஸ்துதிம் ய:
படேதாதராத் பக்தி பாவோ மநுஷ்ய: ।
ச்ருணோதீஹ வா நித்யமுத்யுக்த சித்தோ
பவேத் விஷ்ணுரத்ரைவ வேத ப்ரமாணாத் ॥

य:—எந்த, मनुष्य:—மனிதன், भक्तिभाव:—பக்தியுள்ள எண்ணத்துடன், आदरात्—ஆதரவுடன், स्वरूपानुसन्धानरूपां—ஆத்மஸ்வரூபத்தை அனுஸந்தானம் செய்யும் முறையான स्तुतिं—(இந்த) ஸ்தோத்திரத்தை, पठेत्—படிக்கிருனே, वा—அல்லது, इह—இங்கே, नित्यं—எப்பொழுதும், उद्युक्तचित्त:—அக்கரையோடு மனஸை செலுத்தி, शृणोति—கேட்கிருனே,

(அவன்) **वेदप्रमाणात्**-வேதம் ஸத்யமான பிரமாணமாயிருப்பதால், **अत्रैव**-இங்கேயே, **विष्णुः**-ஸர்வ வியாபகமான பிரஹ்மமாக, **भवेत्**-ஆவான்.

எந்த மனிதன் பக்தியுள்ள மனோபாவத்துடன் ஆதரவுடன் ஆத்மஸ்வரூபத்தை அனுஸந்தானம் செய்யும் முறையான இந்த ஸ்தோத்திரத்தைப் படிக்கிறானோ, அல்லது இங்கே எப்பொழுதும் அக்கரையோடு மனதைச் செலுத்திக் கேட்கிறானோ, (அவன்) வேதம் ஸத்யமான பிரமாணமாக இருப்பதால் இங்கேயே ஸர்வவியாபகமான பிரஹ்மமாக ஆவான். (9)

ஸ்வரூபானுஸந்தானுஷ்டகம் முற்றும்.



|| श्रीः ||

# || निर्वाणमञ्जरी ||

## நிர்வாணமஞ்ஜரீ

[ஆத்மஸ்வரூபத்தை அனுஸந்தானம் செய்யவேண்டிய முறையை ஸ்ரீமத் ஆசார்யார் வெகு சுருக்கமாக இதில் விளக்குகிறார். ஆத்மஸாக்ஷாத்காரம் ஏற்படும்வரை ஆத்மாவல்லாத அனாத்மாக்களிலேயே ஆத்மா என்கிற எண்ணம், அநாதியான அவித்யையினால் ஊறிக்கிடக்கிறபடியால் அவ்வெண்ணத்தைப் போக்கடிப்பதற்கு இரண்டுவித அப்யாஸங்கள் அவசியமாகிறது. எதையெல்லாம் நாம் தவறாக ஆத்மா என்று நினைத்துக் கொண்டிருக்கிறோமோ அவையெல்லாம் ஆத்மாவல்ல என்று முதலில் நன்கு உணரவேண்டும். பிறகு ஆத்மாவென்பது வாஸ்தவத்தில் யார் என்பதை உணரவேண்டும். இவ்விதமான இரண்டு விதங்களிலும் இதில் ஆத்மஸ்வரூபம் எடுத்துக்காட்டப்படுகிறது.]

**अहं नामरो नैव मर्त्यो न दैत्यो न गन्धर्वरक्षःपिशाचप्रभेदः ।**
**पुमान्नैव न स्त्री तथा नैव षण्डः प्रकृष्टप्रकाशस्वरूपः शिवोऽहम् ॥**

அஹம் நாமரோ நைவ மர்த்யோ ந தைத்யோ
ந கந்தர்வ ரக்ஷ:பிஶாச ப்ரபேத: ।
புமான் நைவ ந ஸ்த்ரீ ததா நைவ ஷண்ட:
ப்ரக்ருஷ்ட ப்ரகாஶ ஸ்வரூப: ஶிவோऽஹம் ॥

**अहं**-நான், **अमरः**-தேவன், **न**-அல்ல, **मर्त्यः**-மனிதன், **नैव**-இல்லவேயில்லை, **दैत्यः**-அஸுரன், **न**-அல்ல, **गन्धर्वरक्षःपिशाचप्रभेदः**-கந்தர்வன் ராக்ஷஸன் பிசாசம் என்கிற பிரிவில் சேர்ந்தவன், **न**-அல்ல, **पुमान्**-ஆண், **नैव**-இல்லவேயில்லை, **स्त्री**-பெண், **न**-அல்ல; **तथा**-அப்படியே, **षण्डः**-அலியும், **नैव**-இல்லவேயில்லை (வாஸ்தவத்தில்). **प्रकृष्टप्रकाशस्वरूपः**-உத்தமமான ஞானத்தையே ஸ்வரூபமாயுடைய, **शिवः**-மங்கள ஸ்வரூபியான பரப்பிரஹ்மமே, **अहम्**-நான்.

நான் தேவன் அல்ல, மனிதனும் அல்ல, அஸுரனும் அல்ல, கந்தர்வன் ராக்ஷஸன் பிசாசம் என்கிற வகுப்பில் சேர்ந்தவனும் அல்ல, ஆணும் அல்ல, பெண்ணும் அல்ல, அப்படியே அலியும் அல்ல. (வாஸ்தவத்தில்) உத்தமமான ஞானத்தையே ஸ்வரூபமாயுடைய மங்கள ஸ்வரூபியான பரப்பிரஹ்மமே நான்.

[தேவன் அஸுரன் மனிதன் முதலான வேற்றுமைகள் எல்லாம் சரீரத்தையே சேர்ந்தவை. அப்படியே ஆண் பெண் என்கிற வியவஹாரமும் சரீரத்தையே ஒட்டியிருக்கிறது. இவை யாவும் சரீர விலக்ஷணரான ஆத்மாவிடத்தில் ஸம்பந்திக்காது. ஆத்மா கேவலம் ஞானஸ்வரூபரே.] (1)

**अहं नैव बालो युवा नैव वृद्धो न वर्णी न च ब्रह्मचारी गृहस्थः ।**
**वनस्थोऽपि नाहं न संन्यस्तधर्मा जगज्जन्मनाशैकहेतुः शिवोऽहम् ॥**

அஹம் நைவ பாலோ யுவா நைவ வ்ருத்தோ
ந வர்ணீ நச ப்ரஹ்மசாரீ க்ருஹஸ்த: ।
வநஸ்தோऽபி நாஹம் ந ஸந்யஸ்த தர்மா
ஜகஜ்ஜன்ம நாசைக ஹேது: சிவோऽஹம் ॥

**अहं**–நான், **बालः**–பாலனும், **युवा**–யௌவனத்திலுள்ளவனும், **नैव**–இல்லவேயில்லை, **वृद्धः**–கிழவனும், **नैव**–இல்லவேயில்லை, **वर्णी**–(பிராஹ்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என்ற) வர்ணங்களில் சேர்ந்தவனும், **न**–இல்லை, (பிரஹ்மசாரீ, கிருஹஸ்தன் வானப்பிரஸ்தன், ஸன்யாஸி என்கிற நான்கு ஆசிரமங்களில் சேர்ந்த), **ब्रह्मचारी**–பிரஹ்மசாரியும், **गृहस्थः**–கிருஹஸ்தனும், **न च**–இல்லை, **वनस्थोऽपि**–வானப்பிரஸ்தனும், **अहं**–நான், **न**–இல்லை, **संन्यस्तधर्मा**–எல்லா கர்மங்களையும்விட்ட ஸன்யாஸியும், **न**–இல்லை. (வாஸ்தவத்தில்) **जगज्जन्मनाशैकहेतुः**–பிரபஞ்சத்தின் உத்பத்திக்கும் நாசத்திற்கும் ஒரே காரணமாயிருக்கிற, **शिवः**–மங்களரூபியான பரப்பிரஹ்மமே, **अहम्**–நான்.

நான் பாலனும் அல்ல, யுவாவும் அல்ல, கிழவனும் அல்ல, (பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரர் என்கிற நான்கு) ஜாதிகளில் சேர்ந்தவனுமல்ல, (பிரஹ்மசாரீ கிருஹஸ்தன் வானப்பிரஸ்தன் ஸன்யாஸி என்கிற நான்கு ஆசிரமங்களில்) பிரஹ்மசாரி அல்ல, கிருஹஸ்தனும் அல்ல வானப்பிரஸ்தனும் அல்ல, எல்லாக் கர்மாக்களையும் விட்ட ஸன்யாஸியும் அல்ல. (வாஸ்தவத்தில்) பிரபஞ்சத்தின் உத்பத்திக்கும் நாசத்திற்கும் ஒரே காரணமாயிருக்கிற மங்கள ரூபியான பரப்பிரஹ்மமே நான். (2)

**अहं नैव मेयस्तिरोभूतमायस्तथैवेक्षितुं मां पृथङ्नास्त्युपायः।**
**समाश्लिष्टकायत्रयोऽप्यद्वितीयः सदाऽतीन्द्रियः सर्वरूपः शिवोऽहम् ॥**

அஹம் நைவ மேயஸ்திரோபூத மாய:
தைவேக்ஷிதும் மாம் ப்ருதங்நாஸ்த்யுபாய:।
ஸமாச்லிஷ்ட காய த்ரயோऽப்யத்விதீய:
ஸதாऽதீந்த்ரிய: ஸர்வரூப: ஶிவோऽஹம் ॥

**अहं**-நான், **मेयः**-பிரமாணங்களினால் அறியக்கூடியவன், **नैव**-இல்லவேயில்லை, **तथैव**-அப்படியே, **तिरोभूतमायः**-மாயையினால் மறைக்கப்பட்டவனும் (அல்ல), **मां**-என்னை, **ईक्षितुं**-அறிவதற்கு, **पृथक्**-வேறு தனியாக, **उपायः**-உபாயமும் **न अस्ति**-கிடையாது. **समाश्लिष्टकायत्रयोऽपि**-(ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்கிற) மூன்று சரீரங்களால் நன்கு சூழப்பட்டவராய் இருந்தபோதிலும், **अद्वितीयः**-இரண்டாவதென்பது இல்லாதவராய், **सदा**-எப்பொழுதும், **अतीन्द्रियः**-இந்திரியங்களுக்கு எட்டாதவராய், **सर्वरूपः**-எல்லா வஸ்து ஸ்வருபமாக இருக்கும், **शिवः**-மங்களஸ்வரூபியான பரப்பிரஹ்மமே, **अहम्**-நான்.

நான் பிரமாணங்களினால் அறியக்கூடியவன் அல்ல, மாயையினால் மறைக்கப்பட்டவனும் இல்லை. என்னை அறிவதற்கு வேறு தனியாக உபாயமும் கிடையாது. ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்கிற மூன்று சரீரங்களால் நன்கு

சூழப்பட்டவனுயிருந்த போதிலும், இரண்டாவதென்பது இல்லாதவராய் எப்பொழுதும் இந்திரியங்களுக்கு எட்டாத வராய் எல்லா வஸ்து ஸ்வரூபமாக இருக்கும் மங்கள ஸ்வரூபியான பரப்பிரஹ்மமே நான்.

[தேவன் அஸுரன் மனுஷ்யன் முதலான வியவஹாரங் களோ, ஆண் பெண் என்கிற வித்யாஸமோ, வயதை வைத்து ஏற்படக்கூடிய இளமை மூப்பு என்கிற மாறுதலோ, பிராஹ்மணன் க்ஷத்திரியன் முதலான ஜாதியினுல் ஏற்படும் பேதமோ, பிரஹ்மசாரீ முதலான ஆசிரமத்தையொட்டின பிரிவுகளோ, ஆத்மாவின் ஸ்வரூபத்தில் ஸம்பந்தப்படாது என்று முதல் இரண்டு சுலோகங்களால் சொல்லப்பட்டது. ஒருவனைப்பற்றி வர்ணிப்பதானுல் அவன் மனிதன், பிராஹ்மணன், கிருஹஸ்தன் என்ற விதமாகவே அவனிடம் லக்ஷணங்களை ஸம்பந்தப்படுத்திச் சொல்லவேண்டியிருக் கிறது. ஆத்மாவிற்கு இவ்வித லக்ஷணங்கள் கிடையாது என்று சொல்லியாகிவிட்டது. ஒரு ப்தார்த்தம் இருக்கிறது என்று சொல்ல வேண்டுமானுல் அதன் லக்ஷணம் என்ன? அதற்கு என்ன பிரமாணம் என்று அவசியம் சொல்ல வேண்டும். உலகத்தில் வெளிப்படையாகத் தெரியக்கூடிய லக்ஷணங்கள் ஆத்மாவில் கிடையாதென்ருலும் பிரமாணமா வது உண்டா என்ருல் அதுவும் கிடையாது என்று இங்கு காட்டப்படுகிறது. ஆத்மா ஒருவித இந்திரியத்திற்கும் விஷயமாகாமல் போனுலும் அது எவ்வித பிரமாணத்தையும் அபேக்ஷிக்காமல் ஸ்வயம்பிரகாசமாய் இருக்கிற வஸ்து என்கிருர். அதை மறைத்துவிட மாயைக்கோ, சரீரங் களுக்கோ சக்தி கிடையாது. உலகில் எல்லாப் பொருளாகத் தோன்றுவதும் ஆத்மாவே.] (3)

अहं नैव मन्ता न गन्ता न वक्ता न कर्ता न भोक्ता न मुक्ताश्रमस्थः।
यथाऽहं मनोवृत्तिभेदस्वरूपस्तथा सर्ववृत्तिप्रदीपः शिवोऽहम् ॥ ४ ॥

அஹம் நைவ மந்தா ந கந்தா ந வக்தா
ந கர்த்தா ந போக்தா ந முக்தாச்ரமஸ்த்த:।

யதாऽஹம் மனோவ்ருத்தி பேத ஸ்வரூப:
ததா ஸர்வவ்ருத்தி ப்ரதீப: ஶிவோऽஹம் ||

**अहं**-நான், **मन्ता**-(மனஸினுல்) ஆலோசிக்கிறவன், **नैव**-இல்லவேயில்லை, **गन्ता**-(காலால்) நடக்கிறவன், **न**-இல்லை, **वक्ता**-(வாயால்) பேசுகிறவன், **न**-இல்லை, **कर्ता**-(கர்மேந்திரியங்களினுல்) வேலை செய்கிறவன், **न**-இல்லை, **भोक्ता**-(போகஸாதனங்களினுல் ஸுகதுக்கங்களை) அனுபவிக்கிறவனும், **न**-இல்லை, **मुक्ताश्रमस्थः**-(ஸம்ஸாரபந்தத்திலிருந்து) விடுபட்டவனுடைய நிலையிலிருப்பவனும், **न**-இல்லை. **यथा**-எப்படி, **अहं**-நான், **मनोवृत्तिभेदस्वरूपः**-மனஸினுடைய விருத்திகளின் வேற்றுமையை தன் ரூபமாக வைத்துக் கொண்டிருக்கிறேனே, **तथा**-அப்படியே, **सर्ववृत्तिप्रदीपः**-எல்லா விருத்திகளையும் பிரகாசிக்கும்படிச் செய்யும் வெளிச்சமாயுள்ள, **शिवः**-மங்களஸ்வரூபமான பரப்பிரஹ்மமாகவே **अहं**-நான் இருக்கிறேன்.

நான் (மனஸினுல்) ஆலோசிக்கிறவன் அல்ல, (காலால்) நடக்கிறவன் அல்ல, (வாயால்) பேசுகிறவன் அல்ல, (கர்மேந்திரியங்களால்) வேலை செய்கிறவன் அல்ல, (போகஸாதனங்களால் ஸுக துக்கங்களை) அனுபவிக்கிறவன் அல்ல, (ஸம்ஸார பந்தத்திலிருந்து) விடுபட்டவனுடைய நிலையில் இருப்பவனும் அல்ல. எப்படி நான் மனஸினுடைய விருத்திகளின் வேற்றுமையைத் தன் ரூபமாக வைத்துக் கொண்டிருக்கிறேனே, அப்படியே எல்லா விருத்திகளையும் பிரகாசிக்கும்படிச் செய்யும் வெளிச்சமாயுள்ள மங்கள ஸ்வரூபமான பரப்பிரஹ்மமாகவே நான் இருக்கிறேன்.

[நான் போகிறேன், பேசுகிறேன், நினைக்கிறேன், செய்கிறேன், அனுபவிக்கிறேன், இப்பொழுது எல்லாவற்றையும் விட்டொழித்திருக்கிறேன் என்ற எல்லா எண்ணங்களும் மனோவிருத்தியின் தாதாத்ம்யம் ஆத்மாவிற்கு இருக்கும்போதுதான் ஏற்படும். ஆகையால் அவைகளும் ஆத்மாவே ஆகும். ஆனாலும் சுத்தமான ஆத்ம ஸ்வரூபம்

இவ்வித விருத்திகளை யெல்லாம் பிரகாசப்படுத்திக்கொண்டு அவைகளுடன் கலக்காமல் ஸாக்ஷியாய் இருக்கும் தன்மை உள்ளது.] (4)

**न मे लोकयात्राप्रवाहप्रवृत्तिर्न मे बन्धबुद्ध्या दुरीहानिवृत्तिः ।**
**प्रवृत्तिर्निवृत्त्याऽस्य चित्तस्य वृत्तिर्यतस्त्वन्वहं तत्स्वरूपः शिवोऽहम् ॥**

ந மே லோகயாத்ரா ப்ரவாஹ ப்ரவ்ருத்தி:
ந மே பந்த புத்த்யா துரீஹா நிவ்ருத்தி: ।
ப்ரவ்ருத்திர் நிவ்ருத்த்யாऽஸ்ய சித்தஸ்ய வ்ருத்திர்
யதஸ்த்வந்வஹம் தத்ஸ்வரூப: ஶிவோऽஹம் ॥

**मे**-எனக்கு, **लोकयात्राप्रवाहप्रवृत्तिः**-உலகயாத்திரை தொடர்ந்து நடப்பதற்காக பிரவிருத்தியும், **न**-கிடையாது. **मे**-எனக்கு, **बन्धबुद्ध्या**-கட்டுப்படுத்திவிடுமே என்கிற எண்ணத்தினால், **दुरीहानिवृत्तिः**-கெட்ட கார்யங்களிலிருந்து நிவிருத்தியும், **न**-கிடையாது. **निवृत्त्या**-நிவிருத்தியோடு **प्रवृत्तिः**-பிரவிருத்தியும், **अस्य**-இந்த, **चित्तस्य**-மனஸினுடைய, **वृत्तिः** - வேலையாயிருப்பது, **यतस्तु**-எதனால் ஏற்படுகிறதோ, **तत्स्वरूपः**-அந்த ஸ்வரூபமாயுள்ள, **शिवः**-மங்களரூபியான பரப்பிரஹ்மமாக, **अन्वहं**-எப்பொழுதும், **अहं**-நான் இருக்கிறேன்.

எனக்கு உலக யாத்திரை தொடர்ந்து நடப்பதற்காக பிரவிருத்தியும் கிடையாது, எனக்கு கட்டுப்படுத்திவிடுமே என்கிற எண்ணத்தினால் கெட்ட கார்யங்களிலிருந்து நிவிருத்தியும் கிடையாது. நிவிருத்தியோடு பிரவிருத்தியும் இந்த மனதினுடைய வேலையாயிருப்பது எதனால் ஏற்படுகிறதோ அந்த ஸ்வரூபமாயுள்ள மங்களரூபியான பரப்பிரஹ்மமாக நான் எப்பொழுதும் இருக்கிறேன்.

[உலகத்தில் பிரவிருத்தி நிவிருத்தி என்ற இருவகை சேஷ்டைகளும் மனதையே சேர்ந்தவை. ஆனால் மனஸு ஜடமானதினால் தானாக சேஷ்டிக்க முடியாது. மனஸை சேஷ்டிக்கும்படி செய்யும் சைதன்யமே நான்.] (5)

निदानं यदज्ञानकार्यस्य कार्यं विना यस्य सत्त्वं स्वतो नैव भाति ।
यदाद्यन्तमध्यान्तरालान्तरालप्रकाशात्मकं स्यात्तदेवाहमस्मि ॥ ६ ॥

நிதானம் யதஜ்ஞானகார்யஸ்ய கார்யம்
விநா யஸ்ய ஸத்வம் ஸ்வதோ நைவ பாதி।
யதாத்யந்த மத்யாந்தராளாந்தராள
ப்ரகாஶாத்மகம் ஸ்யாத் ததேவாஹமஸ்மி ॥

**यत्**–எது, **अज्ञानकार्यस्य**–அக்ஞானத்திலை் ஏற்பட்ட (பிரபஞ்சம் முதலான) கார்யபதார்த்தங்களுக்கெல்லாம், **निदानं**–மூலகாரணமோ, **यस्य**–எதனுடைய, **सत्त्वं**–இருப்பானது, **कार्यं विना**–கார்யபதார்த்தங்களன்னியில், **स्वतः**–தானகவே, **नैव भाति**–தோன்றுகிறதில்லையோ, **यत्**–எது, **आद्यन्तमध्यान्तरालान्तरालप्रकाशात्मकं** – (எல்லாவற்றிலும்) முதலிலும் முடிவிலும் நடுவிலும் மத்தியிலுள்ள இடுக்குகளிலும் பிரகாச ஸ்வரூபமாக, **स्यात्** – இருக்கிறதோ, **तदेव**–அதுவே, **अहं अस्मि**–நானக இருக்கிறேன்.

எது அக்ஞானத்திலை் ஏற்பட்ட (பிரபஞ்சம் முதலான) கார்யபதார்த்தங்களுக்கெல்லாம் மூலகாரணமோ, எதனுடைய இருப்பானது கார்ய பதார்த்தங்களன்னியில் தானகவே தோன்றுகிறதில்லையோ, எது (எல்லாவற்றிலும்) முதலிலும் முடிவிலும் நடுவிலும் மத்தியிலுள்ள இடுக்குகளிலும் பிரசாச ஸ்வரூபமாகவே இருக்கிறதோ, அதுவே நானக இருக்கிறேன்.

[பிரஹ்மம் பிரத்யக்ஷாதி ஸாமான்ய பிரமாணங்களுக்கு விஷயமாகாததால் அது ஒன்று இருக்கிறது என்பதற்கே ருஜு அதில் தோன்றும் ஜகத்துத்தான். ஸர்வ பிரகாச ரூபமாயிருந்தபோதிலும் அதனல் பிரகாசிக்கும்படிச் செய்யப்படுகிற பதார்த்தங்களைக் கொண்டுதான் அதன் இருப்பைத் தீர்மானிக்கவேண்டியிருக்கிறது.] (6)

यतोऽहं न बुद्धिर्न मे कार्यसिद्धिर्यतो नाहमङ्गं न मे लिङ्गभङ्गः ।
हृदाकाशवर्ती गताङ्गत्रयार्तिः सदा सच्चिदानन्दमूर्तिः शिवोऽहम् ॥

யதோऽஹம் ந புத்திர் ந மே கார்ய ஸித்தி:
யதோ நாஹமங்கம் ந மே லிங்க பங்க: |
ஹ்ருதாகாஶவர்த்தீ கதாங்கத்ரயார்த்தி:
ஸதா ஸச்சிதானந்த மூர்த்தி: ஶிவோऽஹம் ||

अहं-நான், बुद्धिः न-புத்தியல்ல, यतः-ஆதலால், मे-எனக்கு, कार्यसिद्धिः-செய்துமுடிக்க வேண்டியதென்பது, न-கிடையாது. अहं-நான், अङ्गं न-சரீரம் அல்ல, यतः-ஆதலால் मे-எனக்கு, लिङ्गभङ्गः-ஸூக்ஷ்ம சரீரத்திற்கு ஏற்படும் கெடுதல் न-இல்லை. हृदाकाशवर्ती-ஹ்ருதயாகாசத்தில் எப்பொழுதும் இருப்பவராய், गताङ्गत्रयार्तिः-(ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்கிற) மூன்று சரீரங்களுடைய பீடையும் விலகினவராய், सदा-எப்பொழுதும், सच्चिदानन्दमूर्तिः-ஸச்சிதானந்தஸ்வரூபராக இருக்கும், शिवः-மங்களரூபியான பரப்பிரஹ்மமே, अहम्-நான்.

நான் புத்தியல்லவாததால் எனக்கு செய்துமுடிக்க வேண்டியதென்பது கிடையாது. நான் சரீரமல்லவாதலால் ஸூக்ஷ்ம சரீரத்திற்கு ஏற்படும் கெடுதல் எனக்கு இல்லை. ஹ்ருதயாகாசத்தில் எப்பொழுதும் இருப்பவராய் (ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்கிற) மூன்று சரீரங்களினுடைய துன்பத்திலிருந்து விலகினவராய் ஸச்சிதானந்தஸ்வரூபராக இருக்கும் மங்களரூபியான பரப்பிரஹ்மமே நான்.

[தேஹம் முதல் புத்திவரை உள்ள எல்லா உபாதிகளுக்கும் அப்பாற்பட்டு ஹ்ருதய குகையில் பிரகாசிக்கும் ஆத்மா எவ்வித துக்க ஸம்பந்தமுமன்னியில் எப்பொழுதும் ஸச்சிதாநந்தரூபியாகவே விளங்குகிறார். அவர்தான் நான்.]

यदासीद्विलासाद्विकारो जगद्यद्विकाराश्रयो नाद्वितीयत्वतः स्यात् ।
मनोबुद्धिचित्ताहमाकारवृत्तिप्रवृत्तिर्यतः स्यात्तदेवाहमस्मि ॥ ८ ॥

யதாஸீத் விலாஸாத் விகாரோ ஜகத் யத்
விகாராஶ்ரயோ நாத்விதீயத்வத: ஸ்யாத் |
மனோ புத்தி சித்தாஹமாகார வ்ருத்தி
ப்ரவ்ருத்திர் யத: ஸ்யாத் ததேவாஹமஸ்மி ||

यत्-எது, विलासात्-விலஸிக்கும்போது (மலர்வதினல்) जगत्- பிரபஞ்சமென்ற, विकारः-மாறுதலாக, आसीत् - ஏற்பட்டதோ (அப்படியிருந்தும்), यत्-எது, अद्वितीयत्वतः- இரண்டாவதற்ற தன்மையினுல், विकाराश्रयः-மாறுதலுக்கு இடமாக, न स्यात् -இராதோ, यतः-எதனுல், मनोबुद्धिचित्ताहङ्काराकारवृत्तिप्रवृत्तिः-மனது புத்தி சித்தம் அஹங்காரம் என்ற (பிரிவுபட்டுள்ள அந்தக்கரண) விருத்திகளுக்கு பிரவிருத்தி स्यात्-ஏற்படுகிறதோ, तदेव-அதுவாகவே, अहं-நான், अस्मि- இருக்கிறேன்.

எது விலஸிக்கும்போது (மலர்வதினுல்) பிரபஞ்சமென்ற மாறுதலாக ஏற்பட்டதோ, (அப்படியிருந்தும்) எது இரண்டாவதற்றதென்ற காரணத்தினுல் மாறுதலுக்கு இடமாக ஆகிறதில்லையோ, எதனுல் மனஸ் புத்தி சித்தம் அஹங்காரம் என்று பிரிவுபட்டுள்ள அந்தக்கரண விருத்திகளுக்கு பிரவிருத்தி ஏற்படுகிறதோ, அதுவே நான்.

[ஜகத்து என்பது பிரஹ்மத்தில் தோன்றும் விகாரமாயிருந்தபோதிலும் பிரஹ்மம் விகாரத்தை அடைவது கிடையாது. அப்படியே ஜீவனுக பிரஹ்மம் தோன்றும்போது அவனுடைய அந்தக்கரண விருத்திகள் பலவாருக இருந்த போதிலும் அவனுடைய ஆத்ம ஸ்வரூபத்தில் எவ்வித மாறுதலும் ஏற்படுகிறதில்லை.] (8)

यदन्तर्बहिर्व्यापकं नित्यशुद्धं यदेकं सदा सच्चिदानन्दकन्दम् ।
यतः स्थूलसूक्ष्मप्रपञ्चस्य भानं यतस्तत्प्रसूतिस्तदेवाहमस्मि ॥ ९ ॥

யதந்தர் பஹிர் வ்யாபகம் நித்ய ஶுத்தம்
யதேகம் ஸதா ஸச்சிதானந்த கந்தம்।
யத: ஸ்தூல ஸூக்ஷ்ம ப்ரபஞ்சஸ்ய பாநம்
யதஸ்தத் ப்ரஸூதிஸ்ததேவாஹமஸ்மி ॥

यत्-எது, अन्तः-உள்ளேயும், बहिः-வெளியிலும், व्यापकं- வியாபகமாயும், नित्यशुद्धं-எப்பொழுதும் சுத்தமாயும் (இருக்கிறதோ), यत्-எது, सदा-எப்பொழுதும், एकं-ஒன்ருகவே இருந்துகொண்டு, सच्चिदानन्दकन्दं-ஸத்தாயும் சித்தாயும் ஆனந்தமாயுமுள்ளதுவோ, यतः-எதனுல், स्थूलसूक्ष्मप्रपञ्चस्य-

ஸ்தூலமான பிரபஞ்சம் ஸூக்ஷ்மமான பிரபஞ்சம் இவை களுடைய, भानं-தோற்றம் (ஏற்படுகிறதோ), यतः-எதிலிருந்து, तत्प्रसूतिः-அந்த பிரபஞ்சங்களின் உத்பத்தியோ तदेव- அதாகவே, अहं-நான், अस्मि-இருக்கிறேன்.

எது உள்ளேயும் வெளியிலும் வியாபகமாயும் எப்பொழுதும் சுத்தமாயும் இருக்கிறதோ, எது எப்பொழுதும் ஒன்றுகவே இருந்துகொண்டு, ஸத்தாயும் சித்தாயும் ஆனந்தமாயுமுள்ளதோ, எதனுல் ஸ்தூல பிரபஞ்சம் ஸூக்ஷ்ம பிரபஞ்சம் இவைகளுடைய தோற்றம் ஏற்படுகிறதோ, எதிலிருந்து அந்தப் பிரபஞ்சங்களின் உத்பத்தியோ, அதுவே நான். (9)

यदर्केन्दुविद्युत्प्रभाजालमालाविलासास्पदं यत्स्वभेदादिशून्यम् ।
समस्तं जगद्यस्य पादात्मकं स्याद्यतः शक्तिभानं तदेवाहमस्मि ॥

யதர்கேந்து வித்யுத் ப்ரபா ஜால மாலா
விலாஸாஸ்பதம் யத் ஸ்வபேதாதி ஶூந்யம் ।
ஸமஸ்தம் ஜகத் யஸ்ய பாதாத்மகம் ஸ்யாத்
யதঃ ஶக்திபானம் ததேவாஹமஸ்மி ॥

यत्-எது, अर्केन्दुविद्युत्प्रभाजालमालाविलासास्पदं-ஸூர்யன் சந்திரன் மின்னல் இவைகளின் பிரகாசக்கூட்ட வரிசைகள் விளங்குவதற்குக் காரணமோ, यत्-எது, स्वभेदादिशून्यं-தன்னுள் பேதம் முதலான (தன்னுள்ளேயே கை கால்கள் மாதிரியாயுள்ள ஸ்வகதபேதம், தனக்கு ஸமானமான வேருெரு பதார்த்தத்திலிருந்து வேறுபடுதலாகிய ஸஜாதீய பேதம், தனக்கு விலக்ஷணமாயுள்ள பதார்த்தங்களிலிருந்து வேறுபடுதலாகிய விஜாதீய பேதம் ஆகிய மூன்று) பேதங்களும் அற்றதோ, यस्य-எதனுடைய, पादात्मकं-பாதஸ்வரூபமாகவே, समस्तं-ஸகல, जगत्-ஜகத்தும், स्यात्-ஆகுமோ, यतः-எதனுல், शक्तिभानं-சக்தியினுடைய தோற்றம் ஏற்படுகிறதோ, तदेव-அதாகவே, अहं-நான், अस्मि-இருக்கிறேன்.

எது ஸூர்யன் சந்திரன் மின்னல் இவைகளின் பிரகாசக் கூட்ட வரிசைகள் விளங்குவதற்கு காரணமோ, எது தன்னுள் பேதம் முதலான (தனக்குள்ளேயே கைகால்கள்

மாதிரியுள்ள ஸ்வகதபேதம், தனக்கு ஸமானமான வேறொரு பதார்த்தத்திலிருந்து வேறுபடுதலாகிய ஸஜாதீயபேதம், தனக்கு விலக்ஷணமாயுள்ள பதார்த்தங்களிலிருந்து வேறுபடுதலாகிய விஜாதீய பேதம் ஆகிய மூன்று) பேதங்களும் அற்றதோ, எதனுடைய பாதஸ்வரூபமாகவே ஸகல ஜகத்தும் ஆகுமோ, எதனுல் சக்தியினுடைய தோற்றம் ஏற்படுகிறதோ, அதுவே நான். (10)

**यतः कालमृत्युर्बिभेति प्रकामं यतश्चित्तबुद्धीन्द्रियाणां विलासः।**
**हरिब्रह्मरुद्रेन्द्रचन्द्रादिनामप्रकाशो यतः स्यात्तदेवाहमस्मि ॥ ११ ॥**

யத: கால ம்ருத்யுர் பிபேதி ப்ரகாமம்
யதச்சித்த புத்தீந்த்ரியாணும் விலாஸ:।
ஹரி ப்ரஹ்ம ருத்ரேந்த்ர சந்த்ராதி நாம
ப்ரகாஶோ யத: ஸ்யாத் ததேவாஹமஸ்மி ॥

**यतः**-எதனிடமிருந்து, **कालमृत्युः**-காலமிருத்யுவும், **प्रकामं**-மிகவும், **बिभेति**-பயப்படுகிருரோ, **यतः**-எதனுல், **चित्तबुद्धीन्द्रियाणां**-சித்தம் புத்தி இந்திரியங்கள் இவைகளுக்கு, **विलासः**-பிரகாசம் (ஏற்படுகிறதோ), **यतः**-எதனுல், **हरिब्रह्मरुद्रेन्द्रचन्द्रादिनामप्रकाशः**-விஷ்ணு, பிரஹ்மா, ருத்ரன், இந்திரன் சந்திரன் முதலானவர்களுடைய பெயர்களுக்கு பிரகாசம், **स्यात्**-ஏற்படுகிறதோ, **तदेव**-அதுவாகவே, **अहं**-நான், **अस्मि**-இருக்கிறேன்.

எதனிடமிருந்து காலமிருத்யுவும் மிகவும் பயப்படுகிருரோ, எதனுல் சித்தம் புத்தி இந்திரியங்கள் இவைகளுக்கு பிரகாசம் ஏற்படுகிறதோ, எதனுல் விஷ்ணு பிரஹ்மா ருத்ரன் இந்திரன் சந்திரன் முதலானவர்களுடைய பெயர்களுக்குப் பிரகாசம் ஏற்படுகிறதோ, அதுவே நான்.

[ஸர்வ வியாபகமாயும், ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி லயங்களுக்குக் காரணமாயும், ஸ்வயம் ஜ்யோதிஸ் ஸ்வரூபமாயும், நாமரூபங்களுக்குள்பட்ட ஸகல தேவதைகளையும் நியமனம் செய்கிறதாயும் எவ்வித வேற்றுமையுமற்ற ஒன்ருன ஸச்சிதானந்த ஸ்வரூபமாகவும் விளங்கிவரும்

ப்ரஹ்ம ஸ்வரூபமே நான் என்று மூன்று சுலோகங்களால் காட்டப்பட்டது.] (11)

**यदाकाशवत्सर्वगं शान्तरूपं परं ज्योतिराकारशून्यं वरेण्यम् ।**
**यदाद्यन्तशून्यं परं शङ्कराख्यं यदन्तर्विभाव्यं तदेवाहमस्मि ॥ १२ ॥**

யதாகாமஶவத் ஸர்வகம் ஶாந்த ரூபம்
பரம் ஜ்யோதிராகார ஶூந்யம் வரேண்யம்।
யதாத்யந்த ஶூந்யம் பரம் சங்கராக்யம்
யதந்தர் விபாவ்யம் ததேவாஹமஸ்மி॥

**यत्**–எது, **आकाशवत्**–ஆகாசம்போல, **सर्वगं**–எல்லாவற்றிலும் வியாபித்துக்கொண்டு, **शान्तरूपं**–அடங்கினஸ்வரூபமுள்ளதாய், **परं**-மேலான, **ज्योतिः**-ஜ்யோதியாய், **आकारशून्यं**-உருவமற்றதாய், **वरेण्यं**-சிலாகிக்கத்தக்கதாய் இருக்கிறதோ, **यत्**–எது, **आद्यन्तशून्यं**–ஆதியும் அந்தமும் அற்றதாய், **परं**–உத்கிருஷ்டமாய், **शंकराख्यं**–க்ஷேமத்தைக்கொடுக்கக்கூடிய பெயருள்ளதாயும் இருக்கிறதோ, **यत्**-எது, **अन्तः**–உள்ளேயே **विभाव्यं**–நன்கு அனுபவிக்கத்தக்கதோ, **तदेव**–அதுவாகவே **अहं**–நான், **अस्मि**–இருக்கிறேன்.

எது ஆகாசம்போல எல்லாவற்றிலும் வியாபித்துக்கொண்டு, அடங்கின ஸ்வரூபமுள்ளதாய், மேலான ஜ்யோதியாய், உருவமற்றதாய், சிலாகிக்கத்தக்கதாயிருக்கிறதோ எது ஆதியும் அந்தமும் அற்றதாய், உத்கிருஷ்டமாய், க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடிய பெயருள்ளதாயும் இருக்கிறதோ, எது உள்ளேயே நன்கு அனுபவிக்கத்தக்கதோ, அதுவே நான்.

[முன் சுலோகங்களில் ஜகந்நியந்தாவாகவும் ஸகல வஸ்துப் பிரேரகராகவும் பிரஹ்மத்தை வர்ணித்துவிட்டு இப்பொழுது சுத்தமாய் நிர்குணமாயுள்ளதும் ஸ்வானுபவத்தினல் மாத்திரம் அறியத்தக்கதுமானதாக அதே பிரஹ்மத்தை வர்ணித்து அதுவேதான் வாஸ்தவத்தில் நான் என்கிற பதார்த்தம் என்று இச்சிறு பிரகரணத்தை ஸ்ரீமத் ஆசார்யார் உபஸம்ஹாரம் செய்கிறுர்கள்.] (12)

நிர்வாணமஞ்ஜரீ முற்றும்.

|| श्रीः ||

# || जीवन्मुक्तानन्दलहरी ||

## ஜீவன்முக்த ஆனந்தலஹரீ

[வேத விஹிதமான கர்மாக்களை நிஷ்காமமாக அனுஷ்டித்துவந்து, அதனால் சித்தத்திலுள்ள தோஷங்கள் நிவர்த்தியாகி, விவேக வைராக்கியாதி ஸாதன நிஷ்டராக இருந்து, இந்த ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை அடைய வேண்டும் என்ற தீவிரமான எண்ணத்துடன் ஸன்யாஸம் பெற்று, ஸத்குருநாதரை அடைந்து, அவருடைய பிரீதியை ஸம்பாதித்து, அவரால் கருணையுடன் உபதேசிக்கப்பட்ட ஆத்ம தத்வத்தை நன்கு சிரவணம், மனனம், நிதித்யாஸனம், ஸமாதி என்கிற முறையில் கிரமப்படி அப்யஸித்து, ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்தவர் எல்லாவித கர்ம பந்தத்திலிருந்தும் விலகினவராகவே இருந்தபோதிலும், பிராரப்த கர்ம வசத்தினால் அவர் சரீரத்தோடு இருப்பவராக உலகத்திலுள்ள மற்றவர்களுக்குத் தோன்றிக்கொண்டிருக்கும் ஸமயத்தில், அவர் என்ன செய்துகொண்டிருப்பார் என்பதை இச்சிறு கிரந்தத்தில் ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாசார்யாரவர்கள் வர்ணிக்கிறார்கள். இரண்டற்ற நிலை ஏற்பட்ட அந்த ஞானிக்கும் ஸமாதி நிலையிலிருந்து எழுந்திருக்கும் ஸமயங்களில் இந்த பிரபஞ்சம் திருஷ்டிக்கு விஷயமாகத்தான் இருக்கும், ஆனாலும் இது வெறும் தோற்றமே தவிர வாஸ்தவமில்லை என்ற எண்ணமும் இருந்துகொண்டேயிருக்கும்; ஆகையினால் அவர் இந்த பிரபஞ்சத்திலுள்ள வைசித்திரியத்தினால் ஏமாந்து போகமாட்டார். அவருக்கும் உலகத் தோற்றமிருப்பதை வைத்து அவரும் நம்மைப்போலவே அக்ஞானி என்று நாம் தீர்மானித்துவிடக்கூடாது. ஸாமான்ய ஜனங்கள் எப்படி நினைத்தாலும் அறிவாளிகள் ஞானியென்றே அறிவார்கள் என்று ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துக்காட்டுகிறார்.]

पुरे पौरान्पश्यन्नरयुवतिनामाकृतिमयान्
सुवेषान्स्वर्णालंकरणकलितांश्चित्रसदृशान् ।

स्वयं साक्षाद्द्रष्टेत्यपि च कलयंस्तैः सह रम-
न्मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ १ ॥

புரே பௌரான் பச்யன் நர யுவதி நாமாக்ருதி மயான்
ஸுவேஷான் ஸ்வர்ணாலங்கரண கலிதாம்ச்சித்ர ஸத்ருசான் ।
ஸ்வயம் ஸாக்ஷாத் த்ரஷ்டேத்யபி ச கலயம்ஸ்தை: ஸஹ ரமன்
முனிர் ந வ்யாமோஹம் பஜதி குருதீக்ஷா க்ஷததமா: ॥

पुरे-நகரத்தில், सुवेषान्-நல்ல உடை உடுத்தினவர்களாக, स्वर्णालङ्करणकलितान्-தங்க ஆபரணங்களை தரித்தவர்களாக, नरयुवतिनामाकृतिमयान्-ஸ்திரீ புருஷர்களென்ற பெயரையும் உருவத்தையும் உடையவர்களாக, पौरान्-நகரத்து ஜனங்களை, चित्रसदृशान्-சித்திரத்தில் காணும் பொம்மைகளைபோலவே, पश्यन्-பார்த்துக்கொண்டும், स्वयं-தான், साक्षात् द्रष्टा-நேரில் பார்த்துக்கொண்டிருக்கிற ஸாக்ஷி மாத்திரமே, इत्यपि-என்றும், कलयन् च-அதே ஸமயத்தில் உணர்ந்துகொண்டும், तैः सह-அவர்களோடு, रमन्-ரமித்துக் கொண்டு இருக்கிற, मुनिः-ஞானியானவர், गुरुदीक्षाक्षततमाः-குருநாதரிடமிருந்து அடையப்பெற்ற ஞான தீக்ஷையினால் அக்ஞானம் நீங்கிவிட்டவர் (ஆனதால்) व्यामोहं-ஏமாறுதலை, न भजति-அடையமாட்டார்.

நகரத்தில் நல்ல உடை உடுத்தினவர்களாக, தங்க ஆபரணங்களை தரித்தவர்களாக ஸ்திரீ புருஷர்களென்ற பெயரையும் உருவத்தையும் உடையவர்களாக இருக்கும் நகரத்து ஜனங்களை, ஏதோ சித்திரத்தில் காணும் பொம்மைகளைப்போலவே பார்த்துக்கொண்டும், தான் நேரில் பார்த்துக்கொண்டிருக்கிற ஸாக்ஷி மாத்ரமே என்று அதே சமயத்தில் உணர்ந்துகொண்டும், அவர்களோடு ரமித்துக்கொண்டிருக்கிற ஞானியானவர் குருநாதருடைய கருணையால் கிடைத்த ஞானதீக்ஷையினால் அஞ்ஞானம் நீங்கிவிட்டானதினால் ஏமாறுதலை அடையமாட்டார்.

[படத்தில் ஸ்திரீ புருஷர்கள் எவ்வளவு அழகாகவும் அலங்காரத்துடனும் வரையப்பட்டிருந்தபோதிலும், அப் படத்தைக்கண்டு ரஸிக்கும் யாரும் அதில் காணப்படும் ஸ்திரீ புருஷர்கள் வாஸ்தவமானவர்கள் என்று ஏமாந்து போவது கிடையாது. அப்படியேதான் ஞானியும் பிரபஞ் சத்தைப் பார்த்துக்கொண்டு ஆனந்திக்கும்போது பிரபஞ் சத்தில் உள்ள எல்லா நாம ரூபங்களும் வெறும் தோற்றமே என்றும், தான் அவைகளால் பாதிக்கப்படாத சுத்தமான ஸாக்ஷியான அறிவு ஸ்வரூபம் என்றும், நன்கு உணர்ந்து கொண்டே இருப்பார்.] (1)

वने वृक्षान्पश्यन्दलफलभरान्नम्रसुशिखा-
न्घनच्छायाच्छन्नान्बहुलकलकूजद्द्विजगणान् ।
भजन्घस्रे रात्राववनितलतल्पैकशयनो
मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ २ ॥

வநே வ்ருக்ஷான் பச்யன் தள பல பராந்நம்ர ஸுசிகான்
கநச்சாயாச்சன்னான் பஹுளகல கூஜத் த்விஜ கணான் ।
பஜன் கஸ்ரே ராத்ராவவநி தல தல்பைக சயநோ
முநிர் ந வ்யாமோஹம் பஜதி குருதீக்ஷா க்ஷததமா: ॥

**वने**-காட்டில், **दलफलभरात्**-இலைகள் பழங்கள் இவை களின் பாரத்தினல், **नम्रसुशिखान्**-தாழ்ந்திருக்கும் அழகான கொப்புகளோடு கூடியதும், **घनच्छायाच्छन्नान्**-அடர்த்தியான நிழலால் மறைக்கப்பட்டதும், **बहुलकलकूजद्द्विजगणान्**-ஏராள மான அழகாக கூவுகிற பக்ஷிக் கூட்டங்களோடு கூடியது மான, **वृक्षान्**-மரங்களை, **पश्यन्**-பார்த்துக்கொண்டு, **घस्रे**-பகல் வேளையில், **भजन्**-ஸேவித்துக்கொண்டும், **रात्रौ**-இரவு வேளையில், **अवनितलतल्पैकशयनो**-பூமியின் தரையையே படுக்கையாக வைத்துக்கொண்டு படுத்துக்கொண்டும், இருக்கிற, **मुनिः**-ஞானியானவர், **गुरुदीक्षाक्षततमाः**-குருநாத ரால் அனுக்ரஹிக்கப்பட்ட ஞான தீக்ஷையினல் அக்ஞானம் நீங்கிவிட்டவர் (ஆனதினல்), **व्यामोहं**-ஏமாறுதலை, **न भजति**-அடையமாட்டார்.

காட்டில், இலைகள் பழங்கள் இவைகளின் பாரத்தினால் தாழ்ந்திருக்கும் அழகான கொப்புகளோடு கூடியதும், அடர்த்தியான நிழலால் மறைக்கப்பட்டதும் அழகாகக் கூவுகிற ஏராளமான பக்ஷிக் கூட்டங்களோடு கூடியதுமான மரங்களைப் பார்த்துக்கொண்டு பகல் வேளையில் (அம்மரங்களின் அடியை) ஸேவித்துக்கொண்டும், இரவு வேளையில் பூமியின் தரையையே படுக்கையாக வைத்துக்கொண்டு படுத்துக்கொண்டும், இருக்கிற ஞானியானவர் குருநாதரால் அனுக்ரஹிக்கப்பட்ட ஞானதீக்ஷையினால் அஞ்ஞானம் நீங்கிவிட்டவரானதினால் ஏமாறுதலை அடையமாட்டார்.

[நகரத்தில் ஜனங்களுடன் ரமித்துக்கொண்டிருப்பவரே ஒரு ஸமயம் காட்டில் வஸிக்க நேரிட்டால் அங்குள்ள விருக்ஷங்களையும் சித்திரத்திலுள்ள விருக்ஷங்களைப்போலவே ஸாக்ஷியாக இருந்து பார்த்துக்கொண்டு அவைகளின் நிழலில் பகலிலும், தரையில் இரவிலும் ஆனந்தமாகவே இருந்து வருவார்.] (2)

कदाचित्प्रासादे क्वचिदपि च सौधेषु धनिनां
कदा काले शैले क्वचिदपि च कूलेषु सरिताम् ।
कुटीरे दान्तानां मुनिजनवराणामपि वस-
न्मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ ३ ॥

கதாசித் ப்ராஸாதே க்வசிதபி ச ஸௌதேஷு தநிநாம்
கதா காலே ஶைலே க்வசிதபி ச கூலேஷு ஸரிதாம் ।
குடீரே தாந்தாநாம் முநிஜந வராணாமபி வஸன்
முநிர் ந வ்யாமோஹம் பஜதி குருதீக்ஷா க்ஷததமா: ॥

**कदाचित्**–ஒரு ஸமயத்தில், **प्रासादे**–அரண்மனையிலும், **क्वचिदपि च**–வேறு சில ஸமயங்களில், **धनिनां**–பணக்காரர்களுடைய, **सौधेषु**–மாடிவீடுகளிலும், **कदा काले**–ஒரு ஸமயத்தில், **शैले**–மலையிலும், **क्वचिदपि च**–வேறு சில ஸமயங்களில், **सरितां**–நதிகளுடைய, **कूलेषु**–கரைகளிலும் (சில ஸமயம்) **दान्तानां**–இந்திரியங்களை அடக்கியுள்ள, **मुनिजनवराणां**–முனி

ஜன சிரேஷ்டர்களுடைய, **कुटीरे अपि**-குடிசையிலும், **वसन्**-வஸித்துக்கொண்டிருக்கும், **मुनिः**-ஞானியானவர், **गुरुदीक्षाक्षततमाः**-குருநாதரால் அருளப்பட்ட ஞான தீக்ஷையினால் அக்ஞானம் நிவர்த்தியானவர் (ஆதலால்), **व्यामोहं**-ஏமாற்றத்தை, **न भजति**-அடைகிறதில்லை.

ஒரு சமயத்தில் அரண்மனையிலும், வேறு சமயங்களில் பணக்காரர்களுடைய மாடிவீடுகளிலும், ஒரு சமயம் மலையிலும், வேறு சமயங்களில் நதிகளுடைய கரைகளிலும், சில சமயம் இந்திரியங்களை அடக்கியுள்ள முனிஜன சிரேஷ்டர்களுடைய குடிசையிலும் வஸித்துக்கொண்டிருக்கும் ஞானியானவர் குருநாதருடைய கருணையால் கிடைத்த ஞான தீக்ஷையினால் அக்ஞானம் நிவர்த்தியானவராதலால் ஏமாற்றத்தை அடைகிறதில்லை. (3)

**क्वचिद्बालैः सार्धं करतलगतालैः सहसितैः**
**क्वचित्तारुण्यालंकृतनरवधूभिः सह रमन् ।**
**क्वचिद्वृद्धैश्चिन्ताकुलितहृदयैश्चापि विलप-**
**न्मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ ४ ॥**

க்வசித் பாலை: ஸார்தம் கரதலக தாலை: ஸஹஸிதை:
க்வசித்தாருண்யாலங்க்ருத நர வதூபி: ஸஹ ரமன் ।
க்வசித் வ்ருத்தைச்சிந்தாகுலித ஹ்ருதயைச்சாபி விலபன்
முநிர் ந வ்யாமோஹம் பஜதி குருதீக்ஷா க்ஷததமா: ॥

**क्वचित्**-சில ஸமயங்களில், **करतलगतालैः**-உள்ளங்கைகளினால் தாளம் போட்டுக்கொண்டு, **सहसितैः**-சிரிப்போடு கூடின, **बालैः सार्धं**-பாலர்களோடு கூடவும், **क्वचित्**-சில ஸமயங்களில், **तारुण्यालंकृतनरवधूभिः सह**-யௌவனப் பருவத்தால் அலங்கரிக்கப்பட்டிருக்கும் ஸ்திரீபுருஷர்களோடு கூடவும், **रमन्**-ரமித்துக்கொண்டும், **क्वचित्**-சில ஸமயங்களில், **चिन्ताकुलितहृदयैः**-கவலையினால் கலங்கின ஹிருதயத்தோடு கூடிய, **वृद्धैः**-கிழவர்களோடுகூட, **विलपन् चापि**-புலம்பிக்

கொண்டும், இருக்கிற, मुनिः-ஞானியானவர், गुरुदीक्षाक्षततमाः-குருவினிடம் பெற்ற ஞான தீக்ஷையினால் அக்ஞானம் நிவர்த்தியானவர் (ஆனதினால்), व्यामोहं-ஏமாற்றத்தை, न भजति-அடைவதில்லை.

சில சமயங்களில் உள்ளங் கைகளினால் தாளம் போட்டுக்கொண்டு சிரிப்போடு கூடியிருக்கும் பாலர்களுடனும், சில சமயங்களில் யௌவனப் பருவத்தால் அழகுபடுத்தப் பட்டிருக்கும் ஸ்திரீ புருஷர்களுடனும் ரமித்துக்கொண்டும், சில சமயங்களில் கவலையினால் கலங்கின ஹிருதயத்தோடு கூடிய கிழவர்களோடுகூட புலம்பிக்கொண்டும், இருக்கிற ஞானியானவர் குருவிடமிருந்து பெற்ற ஞானதீக்ஷையினால் அஞ்ஞானம் நிவர்த்தியானவராதலால் ஏமாற்றத்தை அடையமாட்டார்.

[அரசர்களுடைய அரண்மனையிலும், தனிகர்களுடைய மாளிகையிலும், மலைகளிலும், நதிக்கரைகளிலும், தபஸ்விகளுடைய குடிசைகளிலும் வஸிப்பதினால் தங்கியிருக்கும் இடங்களினால் ஞானிக்கு மனோவிகாரம் ஏற்படாது என்றிருந்தபோதிலும், ஸாமான்ய ஜனங்களோடு பழகும் போது விகாரம் ஏற்படாதாவென்று கேட்கலாம். அதுவும் இல்லை என்று இங்கு காட்டுகிறார். மனிதர்களுடைய வயோவியவஸ்தையை ஸாதாரணமாக பால்யம், யௌவனம், கிழத்தனம் என்று பிரிக்கலாம். இம்மூன்று தசைகளில் இருப்பவர்களோடு கூடவும் அவரவர் மனோபாவத்திற்கு ஒற்றவர்போலவே ஞானி காணப்படுவார். அவருடன் நெருங்குபவர்களின் மனோபாவம் அவரிடமும் இருப்பதாகத் தோற்றம் ஏற்படும். ஆனால் அவர் எவ்வித விகாரமும் அற்றவர்.]

(4)

कदाचिद्विद्वद्भिर्विविदिषुभिरत्यन्तनिरतैः
कदाचित्काव्यालंकृतिरसरसालैः कविवरैः ।
कदाचित्सत्तर्कैरनुमितिपरैस्तार्किकवरैः
मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ ५ ॥

கதாசித் வித்வத்பிர் விவிதிஷுபிரத்யந்த நிரதை:
கதாசித் காவ்யாலங்க்ருதி ரஸ ரஸாலை: கவிவரை: ।
கதாசித் ஸத்தர்கைரநுமிதி பரைஸ் தார்கிக வரைர்
முநிர் ந வ்யாமோஹம் பஜதி குருதீக்ஷா க்ஷததமா: ॥

**कदाचित्**–சில ஸமயத்தில், **विद्वद्भिः**–வித்வான்களோடும், **अत्यन्तनिरतैः**–மிகவும் அக்கரையுடன்கூடிய, **विविदिषुभिः**–ஞானத்தை ஸம்பாதிக்க வேண்டுமென்ற ஆசையுள்ளவர்களோடும், **कदाचित्**–சில சமயத்தில், **काव्यालंकृतिरसरसालैः**–காவியங்களிலுள்ள அலங்காரங்களின் ரஸத்தை நன்கு ரஸிக்கும், **कविवरैः**–கவிசிரேஷ்டர்களோடும், **कदाचित्**–சில சமயத்தில், **सत्तर्कैः**–நியாயமாக தர்க்கம் செய்கிறவர்களும், **अनुमितिपरैः**–அனுமானப் பிரமாணத்திலேயே ஈடுபட்டவர்களுமான, **तार्किकवरैः**–தார்க்கிக சிரேஷ்டர்களோடும் (இருந்து கொண்டு), **मुनिः**–ஞானியானவர், **गुरुदीक्षाक्षततमाः**–குருவினுல் அனுக்ரஹிக்கப்பட்ட ஞான தீக்ஷையினுல் அக்ஞானம் போனவராக இருந்து, **व्यामोहं**–ஏமாற்றத்தை, **न भजति**–அடைகிறதில்லை.

சில சமயத்தில் வித்வான்களோடும் மிகவும் அக்கரையுடன் ஞானத்தையடைய ஆவலுள்ளவர்களுடனும், சில சமயத்தில் காவியங்களிலுள்ள அலங்காரங்களின் ரஸத்தை ரஸிக்கும் கவிசிரேஷ்டர்களுடனும், சில சமயத்தில் நியாயமாக தர்க்கம் செய்கிறவர்களும் அனுமானப் பிரமாணத்தையே முக்கியமாயுள்ளவர்களுமான தார்க்கிக சிரேஷ்டர்களுடனும் (கலந்துகொண்டிருக்கும்) ஞானியானவர் தன் குருநாதரால் அளிக்கப்பட்ட ஞான தீக்ஷையினுல் அக்ஞானம் நீங்கியவராக இருப்பதால் ஏமாற்றத்தை அடைய மாட்டார்.

[வேதாந்த தத்வ ஸாக்ஷாத்காரம் அடைந்த ஞானி ஸாமான்ய சாஸ்திரங்கள் அறிந்தவர்களுடனும், அறியப் பிரயத்தினம் செய்பவர்களுடனும் நெருங்கிப் பழகி சர்ச்சை செய்வாரா என்று நினைக்கவேண்டாம். அப்படியே ஸாஹித்யம், அலங்காரம் இவைகளில் ருசியுள்ளவர்களுடன் சேரு

வாரா, வெறும் தர்க்கத்தையே பரமப்பிரமாணமாய் வைத்துக்கொண்டு வாதம் பண்ணிக்கொண்டிருக்கும் தார்க்கிகர்களுடன் சேருவாரா, என்றும் ஸந்தேஹிக்கவேண்டாம். எல்லாமே மாயா விலாஸம் என்று அறிந்தவர் யாருடன் தான் சேர முடியாது?] (5)

कदा ध्यानाभ्यासैः क्वचिदपि सपर्यां विकसितैः
सुगन्धैः सत्पुष्पैः क्वचिदपि दलैरेव विमलैः ।
प्रकुर्वन्देवस्य प्रमुदितमनाः संनतिपरो
मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ ६ ॥

கதா த்யாநாப்யாஸை: க்வசிதபி ஸபர்யாம் விகஸிதை:
ஸுகந்தை: ஸத்புஷ்பை: க்வசிதபி தளைரேவ விமலை: ।
ப்ரகுர்வன் தேவஸ்ய ப்ரமுதித மநா: ஸந்நதி பரோ
முநிர் ந வ்யாமோஹம் பஜதி குருதீக்ஷாக்ஷததமா: ॥

**कदा**-சிலஸமயம், **ध्यानाभ्यासैः**-தியானுப்யாஸங்களோடும் **क्वचिदपि**-சில ஸமயத்தில், **विकसितैः**-நன்கு மலர்ந்த, **सुगन्धैः**-நல்ல வாஸனையாயுள்ள, **सत्पुष्पैः**-சிறந்தபுஷ்பங்களினுலும் **क्वचिदपि**-சில ஸமயங்களில், **विमलैः**-சுத்தமான, **दलैरेव**-இதழ்களாலே மாத்திரமும், **प्रमुदितमनाः**-ஸந்தோஷமடைந்த மனஸுடன், **संनतिपरः**-மிகுந்த வினயத்துடன் கூடியவராக, **देवस्य**-பகவானுடைய, **सपर्यां**-பூஜையை, **प्रकुर्वन्**-நன்கு செய்துகொண்டிருக்கும், **मुनिः**-ஞானியானவர், **गुरुदीक्षाक्षततमाः**-குருவினுல் அருளப்பட்ட ஞானதீக்ஷையினுல் அக்ஞானம் போனவராய், **व्यामोहं**-ஏமாற்றத்தை, **न भजति**-அடைவதில்லை.

சில சமயம் தியானுப்பியாஸங்களோடும், சில சமயத்தில் நன்கு மலர்ந்த நல்ல வாசனையுள்ள சிறந்த புஷ்பங்களாலும், சில சமயங்களில் சுத்தமான இதழ்களாலே மாத்திரமும், ஸந்தோஷமடைந்த மனத்துடன் மிகுந்த வினயத்துடன் கூடியவராக பகவானுடைய பூஜையை நன்கு செய்துகொண்டும் இருக்கும் ஞானியானவர் குருவினுல் அரு

ளப்பட்ட ஞான தீக்ஷையினால் அக்ஞானம் போனவராய் ஏமாற்றத்தை அடைவதில்லை.

[நாம ரூபங்களுக்கு அதீதமான சுத்த பிரஹ்மத்தை ஸாக்ஷாத்கரித்த ஞானி பகவானுடைய ஸகுண மூர்த்தியை தியானம் செய்வாரா, அந்த பகவானை அர்ச்சா ரூபத்தில் ஆவாஹனாதிகள் செய்து பூஜை செய்வாரா, என்ற ஸந்தேஹமும் வேண்டாம். ஸர்வ வியாபகமான பிரஹ்ம சைதன்யம் ஹிருதயத்தில் தியான விஷயமாகவும், வெளியில் ஆராதிக்கக்கூடிய அர்ச்சா ரூபமாகவும் இருப்பதில் என்ன ஆச்சர்யம் என்று உணர்ந்தவர் ஞானி.] (6)

**शिवायाः शंभोर्वा क्वचिदपि च विष्णोरपि कदा**
**गणाध्यक्षस्यापि प्रकटितवरस्यापि च कदा ।**
**पठन्वै नामालिं नयनरचितानन्दसलिलो**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ ७ ॥**

ஶிவாயா: ஶம்போர் வா க்வசிதபி ச விஷ்ணோரபி கதா
கணாத்யக்ஷஸ்யாபி ப்ரகடித வரஸ்யாபி ச கதா ।
படன் வை நாமாளிம் நயந ரசிதாநந்த ஸலிலோ
முநிர் ந வ்யாமோஹம் பஜதி குருதீக்ஷா க்ஷததமா: ॥

**क्वचिदपि च**-சில சமயங்களில், **शिवायाः**-அம்பிகையின், **शम्भोर्वा**-அல்லது பரமசிவனின், **कदा अपि**-சில சமயத்தில், **विष्णोः**-விஷ்ணுவின், **गणाध्यक्षस्यापि**-மஹாகணபதியின், **कदा**-ஒரு சமயம், **प्रकटितवरस्यापि च**-வரன் கொடுக்கும் முத்திரை காட்டும் தேவதையின், **नामालिं**-நாமாவளியை, **नयनरचितानन्दसलिलः**-கண்களில் ஏற்பட்ட ஆனந்தக்கண்ணீர் பெருக்குடன், **पठन् वै**-படித்துக்கொண்டிருக்கும், **मुनिः**-ஞானியானவர், **गुरुदीक्षाक्षततमाः**-குருவின் அனுக்ரஹத்தால் கிடைத்த ஞானதீக்ஷையினால் அக்ஞானம் போனவராய் **व्यामोहं**-ஏமாற்றத்தை, **न भजति**-அடைவதில்லை.

சில சமயங்களில் அம்பிகையின் (நாமாவளியை) அல்லது பரமசிவனின் (நாமாவளியை) அல்லது மஹா

விஷ்ணுவின் (நாமாவளியை) சில ஸமயத்தில் மஹாகண பதியின் (நாமாவளியை) அப்படியே வர முத்திரை தரிக் கும் தேவதையின் (நாமாவளியையோ) கண்களில் ஆனந்தக்கண்ணீர் பெருக வாசித்துக் கொண்டிருக்கும் ஞானியானவன் குருவின் அனுக்ரஹத்தினால் கிடைத்த ஞான தீக்ஷையினால் அக்ஞானம் விலகினவராதலால் ஏமாற் றத்தை அடையமாட்டார்.

[ஞானியின் திருஷ்டியில் எல்லா ஸகுண மூர்த்திகளும் சுத்த சைதன்யத்திலிருந்து வேறல்லவாதலால், அவர் எல்லா மூர்த்திகளிடத்திலும் பிரஹ்மாகார விருத்தியுடன் கூடினவர். ஒவ்வொரு தேவதைக்கும் ஏற்பட்ட நாமாவளி யிலுள்ள ஒவ்வொரு நாமாவும் ஒவ்வொரு பெருமையையே விளக்குவதால், அந்தந்த நாமாவை உச்சரிக்கும்போது அதற்கு விஷயமான தத்வம் மனஸில் தனித்துப் பிரகாசிப்ப தால் ஆனந்த பாஷ்பம் ஏற்படுவது ஸஹஜமே. இதனால் ஞானி தன் நிலையிலிருந்து கொஞ்சம் இறங்கிவிட்டார் என்று நினைப்பதற்கில்லை.] (7)

कदा गङ्गाम्भोभिः क्वचिदपि च कूपोत्थसलिलैः
क्वचित्कासारोत्थैः क्वचिदपि सदुष्णैश्च शिशिरैः ।
भजन्स्नानं भूत्या क्वचिदपि च कर्पूरनिभया
मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ ८ ॥

கதா கங்காம்போபி: க்வசிதபி ச கூபோத்த ஸலிலை:
க்வசித் காஸாரோத்தை: க்வசிதபி ஸதுஷ்ணைச்ச ஶிஶிரை:।
பஜன் ஸ்நாநம் பூத்யா க்வசிதபி ச கர்பூர நிபயா
முநிர் ந வ்யாமோஹம் பஜதி குருதீக்ஷா க்ஷததமா: ॥

कदा–ஒரு சமயம், गङ्गाम्भोभिः–கங்கா ஜலத்தினால், क्वचिदपि च–சிலசமயம், कूपोत्थसलिलैः–கிணற்றில் ஊறும் ஜலத் தினால், क्वचित्–ஒருசமயம், कासारोत्थैः–குளத்திலுள்ள ஜலத் தினால், क्वचिदपि–சில சமயம், सदुष्णैः–நல்ல சூடான

வென்னீரினுல், शिशिरैश्च-(சில சமயம்) குளிர்ந்த ஜலத்தினுல், क्वचिदपि च-சில சமயத்தில், कर्पूरनिभया-கர்பூரம் மாதிரி பிரகாசிக்கிற, भूत्या-விபூதியினுல், स्नानं-ஸ்நாநத்தை, भजन्-செய்துகொண்டு இருக்கிற, मुनिः-ஞானியானவர், गुरुदीक्षाक्षततमाः-குருவினுடைய அனுக்ரஹத்தால் ஏற்பட்ட ஞான தீக்ஷையினுல் அக்ஞானம் விலகினவராதலால், व्यामोहं-ஏமாற்றத்தை, न भजति-அடைகிறதில்லை.

ஒரு சமயம் கங்கா ஜலத்தினுல், சில சமயம் கிணற்றில் ஊறும் ஜலத்தினுல், ஒரு சமயம் குளத்திலுள்ள ஜலத்தினுல் சில சமயம் நல்ல சூடான வென்னீரால், சில சமயம் குளிர்ந்த ஜலத்தினுல், சிலசமயத்தில் கர்பூரம் மாதிரி பிரகாசிக்கும் விபூதியினுல், ஸ்நாநம் செய்துகொண்டிருக்கிற ஞானியானவர் குருநாதருடைய கருணையால் அடைந்த ஞான தீக்ஷையினுல் அக்ஞானம் விலகினவராதலால் ஏமாற்றத்தை அடைகிறதில்லை.

[தர்ம சாஸ்திரங்களில் ஸ்நானத்திற்கு உத்தமமாக கங்கா ஜலத்தையும், அதற்கு அடுத்தபடியாக மற்ற நதிகளின் ஜலத்தையும், அதற்கும் அடுத்தபடியாக குளத்து ஜலத்தையும், அதற்கும் அடுத்தபடியாகக் கடைசியாக கிணற்று ஜலத்தையும் சொல்லப்பட்டிருக்கிறது. ஜலத்திலும் வென்னீரை ரோகிகளுக்கு விதித்துவிட்டு ஸாதாரணமாகக் குளிர்ந்த ஜலமே சொல்லப்பட்டிருக்கிறது. மேலே கண்ட எந்த விதத்திலும் ஸ்நாம் செய்யமுடியாதவர்களுக்கு விபூதி ஸ்னுநம் விதிக்கப்பட்டிருக்கிறது. ஞானி விஷயத்தில் இவ்வித வேற்றுமை தாரதம்யம் ஒன்றும் கிடையாதென்பது இந்த சுலோகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.] (8)

कदाचिज्जाग्रत्यां विषयकरणैः संव्यवहर-
न्कदाचित्स्वप्नस्थानपि च विषयानेव च भजन् ।
कदाचित्सौषुप्तं सुखमनुभवन्नेव सततं
मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ ९ ॥

கதாசித் ஜாகர்த்யாம் விஷய கரணை: ஸம்வ்யவஹரன்
கதாசித் ஸ்வப்நஸ்த்தானபி ச விஷயானேவ ச பஜன் ।
கதாசித் ஸௌஷுப்தம் ஸுகமநுபவன்னேவ ஸததம்
முநிர் ந வ்யாமோஹம் பஜதி குருதீக்ஷா க்ஷததமா: ॥

**कदाचित्**-ஒரு சமயம், **जागर्यां**-விழித்துக்கொண்டிருக்கும் போது, **विषयकरणैः**-விஷயங்களோடும் இந்திரியங்களோடும், **संव्यवहरन्**-நன்கு வியவஹாரம் செய்துகொண்டும், **कदाचित्**-ஒருசமயம், **स्वप्नस्थानपि च**-ஸ்வப்ன தசையிலேயே இருக்கக் கூடிய, **विषयानेव च**-விஷயங்களையே, **भजन्**-ஸேவித்துக் கொண்டும், **कदाचित्**-ஒரு சமயம், **सौषुप्तं**-ஸுஷுப்தி என்கிற நல்ல தூக்கத்திலுள்ள, **सुखं**-ஸுகத்தை, **सततं**-இடை விடமல், **अनुभवन्नेव**-அனுபவித்துக்கொண்டேயும் இருக்கிற, **मुनिः**-ஞானியானவர், **गुरुदीक्षाक्षततमाः**-குருவினுல் அனுக்ரஹிக்கப்பட்ட ஞான தீக்ஷையினுல் அக்ஞானம் போனவராதலால், **व्यामोहं**-ஏமாற்றத்தை, **न भजति**-அடைவதில்லை.

ஒரு சமயம் விழித்துக்கொண்டிருக்கும்போது விஷயங்களோடும் இந்திரியங்களோடும் நன்கு வியவஹாரம் செய்துகொண்டும், ஒரு சமயம் ஸ்வப்னதசையிலேயே இருக்கக் கூடிய விஷயங்களையே ஸேவித்துக்கொண்டும், ஒரு சமயம் ஸுஷுப்தி என்கிற நல்ல தூக்கத்திலுள்ள ஸுகத்தை இடைவிடாமல் அனுபவித்துக்கொண்டேயும் இருக்கிற ஞானியானவர் குருவினுல் அனுக்ரஹிக்கப்பட்ட ஞான தீக்ஷையினுல் அக்ஞானம் போனவராதலால் ஏமாற்றத்தை அடைவதில்லை.

[பிராரப்த கர்மாவின் வேகத்தால் ஸுகதுக்கங்களை அனுபவிக்கவேண்டியதாக ஏற்படும் சமயங்களில் ஞானிக்கும் ஜாக்கிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி, என்று சொல்லப்படும் மூன்று அவஸ்தைகளும் உண்டு. ஆனுல் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் வாஸ்தவத்தில் கர்மாவிற்கும் அதீதம் கர்ம பலனுக்கும் அதீதம், அதாவது ஆத்மா கர்த்தாவுமல்ல, போக்தாவுமல்ல, என்ற ஞானம் அவனுக்கு ஸ்திரமாக ஏற்

பட்டுவிட்டபடியால் இந்த மூன்று அவஸ்தைகளிலும் சரீரத்தையோ மனஸையோ ஒட்டியுள்ள ஸுகதுக்கங்கள் சரீரம் மனஸ் எல்லாவற்றிற்கும் அதீதமாக இருக்கிற ஆத்மாவில் எவ்விதத்திலும் ஸம்பந்தப்படக்கூடியதில்லையென்ற தீர்மானத்துடன் அந்த ஸுகதுக்கங்களையும் ஸாக்ஷியாகவே இருந்துகொண்டு பார்த்து வருவார்.] (9)

**कदाऽप्याशावासाः क्वचिदपि च दिव्याम्बरधरः**
**क्वचित्पञ्चास्योत्थां त्वचमपि दधानः कटितटे ।**
**मनस्वी निःसङ्गः सुजनहृदयानन्दजनको**
**मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ १० ॥**

கதாऽப்யாஶாவாஸா: க்வசிதபி ச திவ்யாம்பர தர:
க்வசித் பஞ்சாஸ்யோத்தாம் த்வசமபி ததாந: கடி தடே ।
மநஸ்வீ நிஸ்ஸங்க: ஸுஜந ஹ்ருதயாநந்த ஜநகோ
முநிர் ந வ்யாமோஹம் பஜதி குருதீக்ஷா க்ஷததமா: ॥

**कदाऽपि**-ஒரு சமயம், **आशावासाः**-திகம்பரராகவும், **क्वचिदपि च**-சில ஸமயங்களில், **दिव्याम्बरधरः**-அழகான வஸ்திரத்தை உடுத்திக்கொண்டவராகவும், **क्वचित्**-சிலஸமயம், **पञ्चास्योत्थां**-ஸிம்ஹத்திலிருந்து உண்டான், **त्वचं अपि**-தோலையும், **कटितटे**-இடுப்புப்பிரதேசத்தில், **दधानः**-உடுத்திக்கொண்டவராகவும், **मनस्वी**-நல்ல மனஸோடுகூடினவராகவும், **निःसङ्गः**-பற்றற்றவராகவும், **सुजनहृदयानन्दजनकः**-ஸாது ஜனங்களுடைய ஹிருதயத்திற்கு ஆனந்தத்தை உண்டுபண்ணுகிறவராகவும் இருக்கிற, **मुनिः**-ஞானியானவர், **गुरुदीक्षाक्षततमाः**-குரு அருளின ஞானதீக்ஷையால் அக்ஞானம் விலகினவராய், **व्यामोहं**-ஏமாற்றத்தை, **न भजति**-அடைகிறதில்லை.

ஒரு சமயம் திகம்பரராகவும், சில சமயங்களில் அழகான வஸ்திரத்தை உடுத்திக்கொண்டவராகவும், சில சமயம் ஸிம்ஹத்திலிருந்து உண்டான தோலையும் இடுப்புப் பிரதேசத்தில் உடுத்திக்கொண்டவராகவும், நல்ல மன

ஸோடுகூடினவராகவும், பற்றற்றவராகவும், ஸாது ஜனங்களுடைய ஹிருதயத்திற்கு ஆனந்தத்தை உண்டுபண்ணுகிறவராகவும் இருக்கிற ஞானியானவர் குரு அருளின ஞான தீக்ஷையால் அக்ஞானம் விலகினவராய் ஏமாற்றத்தை அடைகிறதில்லே.

[ஞானிக்கு வஸ்திரதாரணம் முதலான நியமங்களும் கிடையாது, சரீராதிகளுக்கு மேல்பட்டதாயுள்ள ஆத்ம ஸ்வரூபத்தின் ஆனந்தானுபவத்தைத் தன்னிடம் நெருங்கிவரும் ஸாதுக்களுக்கும் கொடுக்கிருர்.] (10)

कदाचित्सत्त्वस्थः क्वचिदपि रजोवृत्तिसुगत-
स्तमोवृत्तिः क्वापि त्रितयरहितः क्वापि च पुनः ।
कदाचित्संसारी श्रुतिपथविहारी क्वचिदहो
मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ ११ ॥

கதாசித் ஸத்வஸ்த்த: க்வசிதபி ரஜோவ்ருத்தி ஸுகதஸ்
தமோ வ்ருத்தி: க்வாபி த்ரிதய ரஹித: க்வாபி ச புந: ।
கதாசித் ஸம்ஸாரீ ச்ருதிபத விஹாரீ க்வசிதஹோ
முநிர் ந வ்யாமோஹம் பஜதி குருதீக்ஷா க்ஷததமா: ॥

**कदाचित्**-ஒரு ஸமயம், **सत्त्वस्थः**-ஸத்வகுணத்தில் இருப்பவராகவும், **क्वचिदपि**-ஒருஸமயம், **रजोवृत्तिसुगतः**-ரஜோகுண நடத்தையில் நன்கு ஈடுபட்டவராகவும், **क्वापि**-ஒருஸமயம் **तमोवृत्तिः**-தமோகுண நடத்தையுள்ளவராகவும், **पुनः**-மறுபடியும், **क्वापि च**-ஒரு சமயம், **त्रितयरहितः**-முக்குணங்களற்றவராகவும், **कदाचित्**-ஒரு சமயம், **संसारी**-(ஸுகதுக்கங்களை அனுபவிக்கும்) ஸம்ஸாரியாகவும், **क्वचित्**-ஒரு சமயம், **श्रुतिपथविहारी**-வேதமார்க்கத்தில் சஞ்சரிக்கிறவராகவும், **अहो**-என்ன ஆச்சர்யம்? (தோன்றுகிற), **मुनिः**-ஞானியானவர், **गुरुदीक्षाक्षततमाः**-குருவின் அருளால் கிடைத்த ஞானதீக்ஷையினுல் அக்ஞானம் நீங்கினவராகி, **व्यामोहं**-ஏமாற்றத்தை, **न भजति**-அடைவதில்லே.

ஒரு சமயம் ஸத்வ குணத்தில் இருப்பவராகவும், ஒரு சமயம் ரஜோகுண நடத்தையில் நன்கு ஈடுபட்டவராகவும், ஒரு சமயம் தமோகுண நடத்தையுள்ளவராகவும், மறுபடியும் ஒரு சமயம் முக்குணங்களுமற்றவராகவும், ஒரு சமயம் ஸுகதுக்கங்களை அனுபவிக்கும் ஸம்ஸாரியாகவும், ஒரு சமயம் வேதமார்க்கத்தில் ஸஞ்சரிக்கிறவராகவும், என்ன ஆச்சரியம்? தோன்றுகிற ஞானியானவர், குருவின் அருளால் கிடைத்த ஞான தீக்ஷையினால் அக்ஞானம் நிவர்த்தியானவராகி ஏமாற்றத்தை அடைவதில்லை.

[குணாதீத நிலையை அடைந்துவிட்டபோதிலும் ஞானிக்கு சரீரம் இருக்கும்வரை, முக்குணங்களுக்கும் கட்டுப்பட்ட உபாதிகளாகிய மனஸ் முதலானதுகளில், பிராரப்த கர்மாவினால் ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு குணம் மேலிடும். அந்தந்த குணங்களுக்குத் தக்கப்படி மனோவிருத்திகளும் சரீர சேஷ்டைகளும் ஏற்படும். இவைகளெல்லாவற்றையும் மாயையின் லீலை யென்று, அவைகளினால் பாதிக்கப்படாமல், ஸாக்ஷியாக இருந்து பார்த்துக்கொண்டிருப்பார் ஞானி.] (11)

कदाचिन्मौनस्थः क्वचिदपि च वाग्वादनिरतः
कदाचित्सानन्दं हसितरभसस्त्यक्तवचनः ।
कदाचिल्लोकानां व्यवहृतिसमालोकनपरो
मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ १२ ॥

கதாசிந் மௌநஸ்த்த: க்வசிதபி ச வாக்வாத நிரத:
கதாசித் ஸாநந்தம் ஹஸித ரபஸஸ் த்யக்த வசந: ।
கதாசித் லோகானாம் வ்யவஹ்ருதி ஸமாலோகந பரோ
முநிர் ந வ்யாமோஹம் பஜதி குருதீக்ஷா க்ஷததமா: ॥

**कदाचित्** -ஒருவேளை, **मौनस्थः**-மௌன நிலையில் இருந்து கொண்டும், **क्वचिदपि च**-மற்றொரு வேளையில், **वाग्वादनिरतः**-வாக்குவாதத்தில் ஈடுபட்டுக்கொண்டும், **कदाचित्** -ஒருவேளை **सानन्दं**-ஆனந்தமாக, **हसितरभसः**-சிரிப்பின் வேகத்தினால்,

त्यक्तवचनः-பேசாமலிருந்துகொண்டும், कदाचित्-ஒருவேளை, लोकानां-உலகத்தார்களுடைய, व्यवहृतिसमालोकनपरः-வியவஹாரங்களைப் பார்ப்பதிலேயே ஈடுபட்டுமிருக்கிற, मुनिः-ஞானியானவர், गुरुदीक्षाक्षततमाः-குருவினால் அநுக்ரஹிக்கப்பட்ட ஞானதீக்ஷயினால் அக்ஞானம் நிவர்த்தியானவர், व्यामोहं-ஏமாற்றத்தை, न भजति-அடைகிறதில்லை.

ஒரு வேளை மௌன நிலையில் இருந்துகொண்டும், மற்றொரு வேளையில் வாக்குவாதத்தில் ஈடுபட்டுக்கொண்டும், ஒரு வேளை ஆனந்தமாக சிரிப்பின் வேகத்தினால் பேசாமலிருந்துகொண்டும், ஒரு வேளை உலகத்தார்களுடைய வியவஹாரங்களைப் பார்ப்பதிலே ஈடுபட்டும் இருக்கிற ஞானியானவர் குருவினால் அனுக்ரஹிக்கப்பட்ட ஞானதீக்ஷயினால் அக்ஞானம் நிவர்த்தியானவர் ஏமாற்றத்தை அடைகிறதில்லை.

[ஆத்மானுஸந்தானம் செய்கையில் ஞானி மௌனமாகவே இருப்பார். பஹிர்முக தசையில் மற்றவர்களுக்கு உபதேசம் செய்யவேண்டிய ஸந்தர்ப்பத்தில் வேதாந்த ரஹஸ்யங்களை விஸ்தரித்துச் சொல்லும்படி ஏற்படும். வாக்குவாதம் என்றால் வீண் பேச்சு என்ற அர்த்தமில்லை. ஆத்மானுஸந்தானம் செய்யும் சமயம் உள்ளிருந்து ஆனந்தம் பொங்கி வெளிக் கிளம்பும்போது தன்னைத் தெரியாமல் கண்களில் நீர் ததும்பும், சிரிப்பு வரும், நர்த்தனம் செய்யச் சொல்லும். ஆனாலும் ஏன் கண்களில் ஜலம், ஏன் சிரிப்பு, ஏன் நர்த்தனம் என்று கேட்டால் உள்ளுள்ள அனுபவம் வாக்கினால் சொல்லக்கூடியதில்லாததினால் வார்த்தை வெளியில் வராது. தன்னுடைய ஆனந்தானுபவத்திற்கு பாதகமன்னியிலேயே வெளி உலகத்தார் நடந்துகொள்ளும் வைசித்திரியத்தை உதாஸீனமாயிருந்துகொண்டு பார்த்து வருவார் ஞானி.] (12)

कदाचित्कान्तानां विकचमुखपद्मेषु कमलं
क्षिपंस्तासां क्वापि स्वयमपिच गृह्णन्स्वमुखतः ।

तदद्वैतं रूपं निजपरविहीनं प्रकटय-
न्मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ १३ ॥

கதாசித் மக்தீநாம் விகச முகபத்மேஷு கமலம்
க்ஷிபம்ஸ்தாஸாம் க்வாபி ஸ்வயமபி ச க்ருஹ்ணன்
ஸ்வமுகத: ।
தததத்வைதம் ரூபம் நிஜபரவிஹீநம் ப்ரகடயன்
முநிர் ந வ்யாமோஹம் பஜதி குருதீக்ஷா க்ஷததமா: ॥

**कदाचित्**–ஒரு சமயத்தில், **शक्तीनां**–ஸ்திரீகளுடைய, **विकचमुखपद्मेषु**–மலர்ந்த பத்மம்போலுள்ள முகங்களில், **कमलं**–தாமரையை, **क्षिपन्**–விட்டெறிந்துகொண்டும், **क्वापि**–ஒரு சமயத்தில், **स्वयमपि च**–தானும், **तासां**–அந்த ஸ்திரீகளால் (போடப்படும் தாமரையை), **स्वमुखतः**–தன் முகத்தில், **गृह्णन्**–வாங்கிக்கொண்டும், **निजपरविहीनं**–தான் என்பதும் வேறு என்பதும் கிடையாததாய், **अद्वैतं**–இரண்டற்றதாய் உள்ள, **तत्**–அந்த, **रूपं**–ஸ்வரூபத்தை, **प्रकटयन्**–நன்கு காட்டிக்கொண்டிருக்கிற, **मुनिः**–ஞானியானவர், **गुरुदीक्षाक्षततमाः**–குரு அருளின தீக்ஷையினுல் அக்ஞானம் விலகினவராய் **व्यामोहं**–ஏமாற்றத்தை, **न भजति**–அடைகிறதில்லே.

ஒரு சமயத்தில் ஸ்திரீகளுடைய மலர்ந்த பத்மம் போலுள்ள முகங்களில் தாமரையை விட்டெறிந்துகொண்டும், ஒரு ஸமயத்தில் தானும் அந்த ஸ்திரீகளால் போடப்படும் தாமரையை தன் முகத்தில் வாங்கிக்கொண்டும், தான் என்பதும் வேறு என்பதும் கிடையாததாய் இரண்டற்றதாய் உள்ள அந்த (ஆத்ம) ஸ்வரூபத்தை நன்கு விளக்கிக் காட்டிக்கொண்டும் இருக்கிற ஞானியானவர் குரு அருளின ஞான தீக்ஷையினுல் அக்ஞானம் விலகினவராய் ஏமாற்றத்தை அடைகிறதில்லே.

[ஸ்திரீ புமான் என்கிற வேற்றுமை சரீரத்தைச் சேர்ந்ததே தவிர ஆத்மாவில் கிடையாது என்ற உண்மையை நன்கு உணர்ந்திருக்கும் ஞானிக்கு ஸ்திரீகளைக்கண்டு

ஸங்கோசமோ, மனோவிகாரமோ ஏற்படுவதற்கு நியாயமே இல்லாததினால், அவர் ஸ்திரீகளோடு பந்தங்களை விட்டெறிந்துகொண்டு விளையாடும்போதும் இரண்டற்ற ஆத்ம ஸ்வரூபத்தையே விளக்குவார்.] (13)

क्वचिच्छैवैः सार्धं क्वचिदपि च शाक्तैः सह वस-
न्कदा विष्णोर्भक्तैः क्वचिदपि च सौरैः सह वसन् ।
कदा गाणाध्यक्षैर्गतसकलभेदोऽद्वयतया
मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ १४ ॥

க்வசித் சைவை: ஸார்த்தம் க்வசிதபி ச சாக்தை:
ஸஹ வஸன்
கதா விஷ்ணோர் பக்தை: க்வசிதபி ச ஸௌரை:
ஸஹ வஸன் ।
கதா காணாத்யக்ஷைர் கதஸகலபேதோऽத்வயதயா
முனிர் ந வ்யாமோஹம் பஜதி குருதீக்ஷா க்ஷததமா: ॥

क्वचित्-சில சமயங்களில், शैवैः सार्धं-சிவபக்தர்களோடும் क्वचिदपि च-சில சமயங்களில், शाक्तैः सह-சக்தி உபாஸகர்களோடும்கூட, वसन्-வஸித்துக்கொண்டும், कदा-சில சமயங்களில், विष्णोः-விஷ்ணுவினுடைய, भक्तैः-பக்தர்களோடும், क्वचिदपि च-சில சமயங்களில், सौरैः सह-ஸூர்ய உபாஸகர்களோடும், वसन्-வஸித்துக்கொண்டும், कदा-சில சமயங்களில், गाणाध्यक्षैः-கணபதி உபாஸகர்களோடும் (வஸித்துக்கொண்டும்), अद्वयतया-இரண்டற்ற தன்மையை அடைந்துவிட்டபடியால், गतसकलभेदः-எல்லாவித வேற்றுமைகளுமற்றவராய் இருக்கும், मुनिः ஞானியானவர், गुरुदीक्षाक्षततमाः-குருநாதர் அநுக்ரஹித்த ஞான தீக்ஷையினால் அக்ஞானம் விலகினவராய், व्यामोहं-ஏமாற்றத்தை, न भजति-அடைகிறதில்லை.

சில சமயங்களில் சிவபக்தர்களோடும், சில சமயங்களில் சக்தி உபாஸகர்களோடும் கூட வஸித்துக்கொண்டும், சில

சமயங்களில் விஷ்ணுவின் பக்தர்களோடும், சில சமயங்களில் ஸௌர்ய உபாஸகர்களோடும் வஸித்துக்கொண்டும், சில சமயங்களில் கணபதி உபாஸகர்களோடு வஸித்துக் கொண்டும், இரண்டற்ற தன்மையை அடைந்துவிட்டபடியால் எல்லாவித வேற்றுமைகளும் அற்றவராக இருக்கும் ஞானியானவர் குருநாதர் அனுக்ரஹித்த ஞான தீக்ஷையினால் அக்ஞானம் விலகினவராய் ஏமாற்றத்தை அடைவதில்லை.

[ஸகலவிதமான உபாஸனா மூர்த்திகளையும் வியாபித்துக் கொண்டிருக்கிற பரப்பிரஹ்மத்தின் ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டுவிட்ட ஞானிக்கு அம்மூர்த்திகள் யாவும் பிரஹ்மமேயானதால் அவைகளுக்குள் வித்யாஸமோ தாரதம்யமோ அவரால் கிரஹிக்கப்படமாட்டாது. அந்தந்த மூர்த்திகளை உபாஸிக்கிறவர்களும் அவருடைய ரீதியாக பிரஹ்மோபாஸகர்களேயாவார்களாதலால் அவர் எல்லாருடனும் ஒரே மாதிரியாகக் கலந்துகொள்ளமுடியும்.] (14)

निराकारं क्वापि क्वचिदपि च साकारममलं
निजं शैवं रूपं विविधगुणभेदेन बहुधा ।
कदाऽऽश्चर्यं पश्यन्किमिदमिति हृष्यन्नपि कदा
मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ १५ ॥

நிராகாரம் க்வாபி க்வசிதபி ச ஸாகாரமமலம்
நிஜம் சைவம் ரூபம் விவித குண பேதேன பஹுதா ।
கதாச்சர்யம் பச்யன் கிமிதமிதி ஹ்ருஷ்யன்னபி கதா
முநிர் ந வ்யாமோஹம் பஜதி குருதீக்ஷா க்ஷத தமா: ॥

क्वापि-சில சமயம், निराकारं-உருவமற்ற பிரஹ்ம ஸ்வரூபத்தையும், क्वचिदपि च-சில சமயம், अमलं-நிர்மலமான निजं-தன்னுடையதான, शैवं-ஸர்வமங்களமான, रूपं-ஸ்வரூபத்தையே, विविधगुणभेदेन-பலவித குணங்களின் வேற்றுமையால், बहुधा-பலவிதமாய், साकारं-ரூபமுள்ளதாகவும், कदा-சில சமயம், इदं-இது, किं-என்ன, इति-என்று, आश्चर्यं-

ஆச்சர்யமாகவும், **पश्यन्**-பார்த்துக்கொண்டும், **कदा अपि**-சில சமயம், **हृष्यन्**-ஸந்தோஷப்பட்டுக்கொண்டும் இருக்கிற, **मुनिः**-ஞானியானவர், **गुरुदीक्षाक्षततमाः**-குருநாதரால் அருளப் பட்ட ஞானதீக்ஷையினால் அக்ஞானம் விலகினவராய், **व्यामोहं**-ஏமாற்றத்தை, **न भजति**-அடைகிறதில்லை.

சில சமயம் உருவமற்ற ப்ரஹ்ம ஸ்வரூபத்தையும், சில சமயம் நிர்மலமான தன்னுடையதான ஸர்வ மங்களமான ஸ்வரூபத்தையே பலவித குணங்களின் வேற்றுமையால் பலவிதமாய் உருவமுள்ளதாகவும், சில சமயம் இது என்ன என்று ஆச்சர்யமாகவும் பார்த்துக்கொண்டும், சில சமயம் ஸந்தோஷப்பட்டுக்கொண்டும் இருக்கிற ஞானியானவர், தம் குருநாதரால் அருளப்பட்ட ஞான தீக்ஷையால் அக்ஞானம் விலகினவராதலால் ஏமாற்றத்தை அடைகிறதில்லை.

[நிர்குண பிரஹ்மத்தையே பரதத்துவமாயுணர்ந்த ஞானி ஸகுண மூர்த்திகளில் ஈடுபடமுடியுமா வென்றால் அந்த நிர்குண பிரஹ்மம்தான் பலவித குணங்களாகிற உபாதிகளினால் ஸகுணமாகத் தோன்றுகிறதென்ற அறிவு இருக்கும்போது ஸகுணத்திற்கும் நிர்குணத்திற்கும் பேதம் இருப்பதாகத் தோன்றாது. ஆனாலும் ஒருவித ரூபமுமற்ற பிரஹ்ம சைதன்யம் பலவித ரூபங்களுடன் தோன்றுவதைப் பார்த்து ஆச்சர்யமும் ஸந்தோஷமும் ஏற்படுவது ஸகஜம்.]

**कदाऽद्वैतं पश्यन्नखिलमपि सत्यं शिवमयं**
**महावाक्यार्थानामवगतिसमभ्यासवशतः ।**
**गतद्वैताभासः शिव शिव शिवेत्येव विलप-**
**न्मुनिर्न व्यामोहं भजति गुरुदीक्षाक्षततमाः ॥ १६ ॥**

கதாZத்வைதம் பச்யன்னகிலமபி ஸத்யம் ஶிவமயம்
மஹாவாக்யார்த்தாநாமவகதி ஸமப்யாஸ வஶத: ।
கத த்வைதாபாஸ: ஶிவ ஶிவ ஶிவேத்யேவ விலபன்
முநிர் ந வ்யாமோஹம் பஜதி குருதீக்ஷா க்ஷததமா: ॥

क्वचित्-சில சமயம், महावाक्यार्थानां-(தத் த்வம் அஸி முதலான உபநிஷத்துக்களிலுள்ள) மஹா வாக்யங்களுடைய தாத்பர்யார்த்தங்களை, अवगतिसमभ्यासवशतः-அறிந்து நன்கு அப்யாஸம் செய்திருப்பதனுல், अखिलं अपि-எல்லாவற்றையும் अद्वैतं-இரண்டற்ற, सत्यं-ஸத்யமான, शिवमयं-மங்களஸ்வரூபமான பிரஹ்மாகாரமாகவே, पश्यन्-பார்த்துக்கொண்டு, गतद्वैताभासः-வேற்றுமைத் தோற்றமே விலகினவராக, शिव शिव शिव इति एव-சிவ சிவ சிவ என்று மாத்திரம், त्रिलपन्-புலம்பிக்கொண்டு, मुनिः-ஞானியானவர், गुरुदीक्षाक्षततमाः-ஸத்குருவினிடமிருந்து கிடைத்த ஞானதீக்ஷையினுல் அக்ஞானம் விலகிவிட்டவராய், व्यामोहं-ஏமாற்றத்தை, न भजति-அடைகிறதில்லை.

சில சமயம் (உபநிஷத்துக்களிலுள்ள தத் த்வம் அஸி முதலான) மஹா வாக்யங்களுடைய தாத்பர்யார்த்தங்களை அறிந்து நன்கு அப்யாஸம் செய்திருப்பதினுல் எல்லாவற்றையும் இரண்டற்ற ஸத்யமான மங்கள ஸ்வரூபமான பிரஹ்மாகாரமாகவே பார்த்துக்கொண்டு, வேற்றுமைத் தோற்றமே அற்றவராக சிவ சிவ சிவ என்று மாத்திரம் புலம்பிக் கொண்டு, ஞானியானவர் ஸத்குருவினிடமிருந்து கிடைத்த ஞான தீக்ஷையினுல் அக்ஞானம் விலகிவிட்டவராய் ஏமாற்றத்தை அடைகிறதில்லை.

[மஹா வாக்கியங்களின் அர்த்தத்தை இடைவிடாது அனுஸந்தானம் செய்துவந்தால்தான் எல்லாம் பிரஹ்மம் என்கிற அனுபவம் ஏற்பட்டு இரண்டாவதாகத் தோன்றும் இப்பிரபஞ்சம் மறையும்.]

(16)

इमां मुक्तावस्थां परमशिवसंस्थां गुरुकृपा-
सुधापाङ्गव्याप्यां सहजसुखवाप्यामनुदिनम् ।
मुहुर्मज्जन्मज्जन्भजति सुकृतैश्चेन्नरवरः
सदा त्यागी योगी कविरिति वदन्तीह कवयः ॥ १७ ॥

இமாம் முக்தாவஸ்த்தாம் பரமசிவ ஸம்ஸ்த்தாம் குருக்ருபா
ஸுதாபாங்க வ்யாப்யாம் ஸஹஜ ஸுக வாப்யாமநுதினம் |
முஹுர் மஜ்ஜன் மஜ்ஜன் பஜதி ஸுக்ருதைச்சேத் நரவர:
ஸதா த்யாகீ யோகீ கவிரிதி வதந்தீஹ கவய: ||

नरवरः-ஒரு உத்தம மனுஷ்யர், अनुदिनं-பிரதிதினம், सहजसुखवाप्यां-தனக்கு ஸ்வபாவ ஸித்தமான ஸுகமாகிற குளத்தில், मुहुः-அடிக்கடி, मज्जन्-முழுகி, मज्जन् முழுகி, सुकृतैः-புண்யங்களினுல், गुरुकृपासुधापाङ्गव्याप्यां - குருநாதருடைய கருணையாகிற அமிருதத்தோடு கூடிய கடாக்ஷத்தினுல் கிடைக்கத்தக்க, परमाशिवसंस्थां-பரப்பிரஹ்மத்தில் நிலைக்கும், इमां-இந்த, मुक्तावस्थां-முக்தருடைய நிலையை, भजति चेत्-அடைவாரேயானுல் அவரே, सदा-எப்பொழுதும், त्यागी-எல்லாவற்றையும் விட்டுவிட்ட ஸன்யாஸி, அவரே योगी-யோகி, அவரே कविः-எல்லாமறிந்தவர், इति-என்று, इह-இங்கு, कवयः-அறிவாளிகள், वदन्ति-சொல்கிருர்கள்.

ஒரு உத்தமமான மனுஷ்யர் பிரதிதினம் தனக்கு ஸ்வபாவஸித்தமான ஆனந்தமாகிற குளத்தில் அடிக்கடி முழுகி முழுகி புண்யங்களினுல் குருநாதருடைய கருணையாகிற அமிருதத்தோடு கூடிய கடாக்ஷத்தினுல் கிடைக்கத்தக்க பரப்பிரஹ்மத்தில் நிலைக்கும் இந்த முக்தருடைய நிலையை அடைவாரேயானுல், அவரே எப்பொழுதும் எல்லாவற்றையும் விட்டுவிட்ட ஸன்யாஸி, அவரே யோகி, அவரே எல்லாமறிந்தவர் என்று இங்கு அறிவாளிகள் சொல்கிருர்கள்.

[குரு கிருபை இல்லாமல் அக்ஞானம் விலகாது, அக்ஞானம் விலகாமல் ஞானம் ஏற்படாது, ஞானம் ஏற்படாத விஷயத்தில் முக்தி நிலை ஏற்படாது என்பதெல்லாம் முன் சுலோகங்களில் கண்டிருக்கிறது. அந்த மூலகாரணமாக இருக்கும் குரு கிருபைக்கு ஸாதனம் என்னவென்ருல் வேத விஹிதமான ஸத்கர்மாக்களை நன்கு அனுஷ்டானம் செய்து குவிந்திருக்கும் புண்யம்தான் என்று இங்கு வற்புறுத்தப் படுகிறது.] (17)

ஜீவன்முக்த ஆனந்தலஹரீ முற்றும்.

॥ श्रीः ॥

## ॥ श्लोकानुक्रमणिका ॥